மலர் 14
இதழ் 44

மன்மத ௵
வைகாசி 15

# கல்கி

## பொருளடக்கம்

1955 மே 29



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.



மலர் 14
இதழ் 44

தமிழ்த்திரு நாடு தன்னைப் - பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்

மன்மத ஸு
வைகாசி 15

# ஆலாகல விஷம்

பிரிட்டனில் இந்த வாரம் தேர்தல் நடைபெறுகிறது. உலக க்ஷேமத்தைப் பற்றிய பிரச்னை எதுவும் இந்தத் தேர்தலில் இடம் பெறவில்லை.

பெருமாளோ, பெரிய பெருமாளோ யார் வந்தாலும் பெயரில்தான் வித்தியாசம். உலகத்தைக் காப்பாற்றுவதற்கு வழி அணு வெடிகள்தான் என்று இரு கட்சியினரும் முடிவு செய்தே தேர்தலை ஆரம்பித்திருக்கிறார்கள்.

ருஷியா சமீபத்தில் விடுத்துள்ள அறிக்கையைப் பயன்படுத்திக் கொண்டு அணுப் பிசாசை ஒழித்துக் கட்டியிருக்கலாம். ஆனால் அதற்கு அமெரிக்காவுக்கு மனம் இல்லை. அமெரிக்காவுக்கு மனம் இல்லாதபடியினால், பிரிட்டனில் எந்தக் கட்சிக்குமே தனியான வழியில் செல்லத் தைரியமில்லை.

மேற்கு ஜெர்மனியின் இராணுவ பலம் தயாராகி விட்டது, தங்களோடு சேர்ந்து விட்டது. இனி பயமில்லை என்கிற உத்சாகத்திலும் மயக்கத்திலும் ஆழ்ந்து விட்டிருக்கிறார்கள். தலைவர்களும் இராணுவ அதிகாரிகளும் பேசுவதைப் பார்த்தால், உலக சமாதானப் பேச்சுக்கள் உருப்படாது போலத்தான் காணப்படுகிறது. ஹிட்லர் கிளப்பிய துவேஷச் சூழ்நிலைதான் மறுபடியும் வானத்தை மூடிக்கொண்டு வருகிறது. நமக்கு வேண்டாதவர்களை அடியோடு ஒழித்து விட்டால்தான் க்ஷேமம் என்கிற தவறான யோசனையே வேஷம் போட்டுக் கொண்டு தாண்டவமாடுகிறது. 'ஆறுமாதக்கார'னிடம் கடன் வாங்கிக் குடும்பம் நடப்பது போல் இங்கேயும் அங்கேயும் யுத்தம் தலையெடுக்காமல் சரிக்கட்டி வருகிறார் நம்முடைய நேரு அவர்கள். இதற்குமேல் அவர் என்ன செய்ய முடியும்? மேல்நாட்டு மனப்பான்மையில் சிறிதும் மாறுதல் ஏற்படவில்லை.

அணுப் பிசாசை நம்பி உலகைக் காப்பாற்றி விடலாம் என்றே எண்ணுகிறார்கள்.

* * * *

"உலகத்தினர் அனைவருக்கும் பொதுவாக உள்ள வானத்தையும் நீரையும் விஷ மயமாக்கக் கூடாது. ஆலாகல நஞ்சைப் போல் விஷத்தைக் கிளப்பும் ஜலஜ குண்டுப் பரிசோதனை வெடிகளை நிறுத்த வேண்டும்! அவற்றின் உற்பத்தியையே அடியோடு நிறுத்த வேண்டும்" என்று சொன்னால் சிலர் "சில ஆயுதங்களை நிறுத்துவதாவது, தடுப்பதாவது! யுத்தத்தையே அடியோடு ஒழித்துவிட வேண்டும். யுத்தத்தை ஒழித்து விட்டால் அப்புறம் அணுகுண்டு ஜலஜ குண்டு பீதி ஏது!" என்று சொல்லுகிறார்கள்.

இப்படிச் சொல்பவர்கள் போகாத ஊருக்குத்தான் வழி சொல்லுகிறார்கள். ஆகாத காரியத்தைச் சொல்லி, உடனே செய்யக்கூடிய காரியத்துக்குத் தடைவாதம் செய்கிறார்கள்.

உலகத்தில் யுத்தம் என்பதே இருக்கக் கூடாது. உலகம் அனைத்துக்கும் ஒரே அரசாங்கம் இருக்க வேண்டும் என்கிற பேச்சு, இன்று நேற்றல்ல, பல நூற்றாண்டுகளாகவே கூறப்பட்டு வந்திருக்கிறது. கூடவே பெரும் யுத்தங்களும் நடந்து வந்தேயிருக்கின்றன!

யுத்தத்தையே அடியோடு ஒழிப்பது என்பது உலகப் பெரியோர் பலர் பன்முறை எண்ணியும் முயன்றும் தோற்று விட்ட கொள்கையாகும்.

"எதிரிகள் பேச்சை நம்பவே முடியாது, உடன்படிக்கையில் கையெழுத்திட்டாலும் நம்ப முடியாது. ஆபத்துக்குக் காப்பாக அணுகுண்டுகளைத் தயாராக வைத்திருக்கிறோம்" என்று அடுத்தடுத்துச் சொல்லி வரும் வல்லரசுகள் யுத்தத்தை முற்றிலும் ஒழித்து விடுவார்கள், அதற்கு வழியைக் காண்பார்கள் என்று எதிர்பார்ப்பது மடமையாகும்.

* * *

லண்டன் டைம்ஸ் பத்திரிகை மே 17-ந் தேதி இதழில் மகிழ்ச்சியுடன் எழுதியிருப்பதாவது :— "இதுவரை வெடித்தது போதும். இனிமேல் இரண்டு வருஷங்களுக்கு வெடிப் பரீட்சை வேண்டியதில்லை என்றும், அவசியமான பரீட்சை எல்லாம் முடிந்தாகி விட்டது என்றும் அமெரிக்க அரசாட்சி தீர்மானித்திருப்பது உலகத்துக்கு க்ஷேமம்." இவ்வாறு சொல்வதுடன் டைம்ஸ் பத்திரிகை 'அணுகுண்டுகளின்றி உலகத்துக்கு க்ஷேமமில்லை. அதை வைத்துத்தான் தீரவேண்டும். அதற்குப் பரீட்சைகள் செய்துதான் தீரவேண்டும்' என்றும் சொல்கிறது.

பரீட்சை வெடிகள் முடிந்தாலும், களஞ்சியத்தில் சேர்த்து வைத்திருக்கும் அணுகுண்டுகளும் வடவாக்கினி குண்டுகளும் வெடிக்க ஆரம்பித்தால் அதன் பலனாகக் கிளம்பும் விஷப் புகையின் அளவு என்ன! என்பதை யோசிக்குங்கால், உள்ளம் பதைக்கிறது. இரு பகைக் கூட்டங்களின் பயத்திலும் வெறுப்பிலும் உலகத்தின் உரிமையே பறி போய் விட்டதா? ஒரு ஊரில் புகை போக்கியுள்ள ஒரு தொழிற்சாலையை வைப்பதற்கே லைசென்ஸ் வாங்க வேண்டும். ஊரார் ஆட்சேபித்தால் லைசென்ஸ் கிடையாது. இப்படியிருக்க, கொடிய விஷப் புகைக்கு ஆட்சேபம் சொல்ல உலகுக்கு உரிமை இல்லையா! ஆண்டவன்தான் கண் திறக்க வேண்டும். நெற்றிக் கண்ணையே திறப்பானோ தெரியவில்லை.

# கோஆ நிலைமை

"எங்களுடைய நியாயமான நடவடிக்கைகளில் எவரும் தலையிட நாங்கள் எக்காலத்திலும் அனுமதிக்க மாட்டோம்" என்று போர்ச்சுகல் ஜனாதிபதி சென்ற வாரம் முழங்கியிருக்கிறார். கோஆவில் போர்ச்சுகல் அதிகாரிகள் செய்து வரும் அக்கிரமங்களை இந்திய சர்க்கார் கண்டித்துள்ளனர் அல்லவா! அதைக் குறித்தே போர்ச்சுகல் ஜனாதிபதி அவ்விதம் கூறியிருக்கிறார். தாங்கள் கையாண்டு வரும் முறைகள் நியாயமானவை என்று போர்ச்சுகல் அதிகாரிகள் கூறுவதால் அவை நியாயமாகி விடா. தர்ம நியாயமாகப் பாரத நாட்டைச் சேர வேண்டிய கோஆவில் போர்ச்சுகல் அதிகாரிகள் இன்னும் இருந்து வருவது அநீதியாகும். அத்துடன் அங்குள்ள மக்கள் மீதும், மக்களின் சார்பில் சுதந்திர உரிமை கோரிச் சத்தியாக்கிரகம் செய்வோர்மீதும் போர்ச்சுகல் அதிகாரிகள் கொடிய அடக்குமுறைகளைப் பிரயோகித்து வருவது இரட்டிப்பு அநீதியாகும். இந்த அநீதியை போர்ச்சுகல் சர்க்கார் நியாயம் என்று கூறுவதால் மாத்திரம் அது நியாயமாகி விடாது.

கோஆ மக்களுக்குச் சுதந்திர உரிமை கோரி சாத்வீகப் போரில் ஈடுபட்டுள்ள சத்தியாக்கிரகிகளை போர்ச்சுகல் அதிகாரிகள் சிறைப்படுத்தியும், சித்திரவதைசெய்தும் வருகிறார்கள்.

சாதாரண ஆயுதப் பிரயோக யுத்தத்தில் கைது செய்யப்பட்டவர்களைச் சித்திரவதை செய்யக் கூடாது என்பது சர்வதேச நீதி. அதற்கு மாறாக, சென்ற மகா யுத்தத்தின் போது போர்க் கைதிகளைச் சித்திரவதை செய்த ஜெர்மன் தலைவர்களுக்கும் ஜப்பான் தலைவர்களுக்கும் நேசதேச இராணுவ கோர்ட்டார் கடுமையான தண்டனை விதித்ததை உலகம் அறியும். அதைவிடப் பெருங் குற்றத்தை இப்போது போர்ச்சுகல் அதிகாரிகள் செய்து வருகிறார்கள். கோஆ விடுதலை இயக்கத்தை ஆதரிப்பதற்காக பம்பாயில் நடந்துள்ள தேசிய மகாநாட்டில் போர்ச்சுகல் அதிகாரிகளின் அடக்கு முறைகளைக் கண்டித்திருக்கிறார்கள்.

கோஆ சத்தியாக்கிரகிகளைத் தாக்கும்படி இராணுவத்தினர் விடுத்த கட்டளையை கோஆ போலீசார் நிறைவேற்ற மறுத்து விட்டார்களாம். அதற்காக இந்தப் போலீஸ் அதிகாரிகளைப் போர்ச்சுகல் சர்க்கார் வேலையிலிருந்து விலக்கி விட்டார்கள் என்றும், கோஆவில் போர்ச்சுகல் ஆட்சி குலைந்து வருவதால் வெளியிலிருந்து வந்துள்ள இராணுவத்தினரின் உதவியால் ஆட்சியை நிலைநிறுத்தப் பார்க்கிறார்கள் என்றும் செய்திகள் கூறுகின்றன. எது எவ்வாறாயினும் இந்தியாவில் எஞ்சியுள்ள அன்னிய ஆட்சி ஒன்றன் பின் ஒன்றாக ஒழிய வேண்டியது என்பது நிச்சயம்.

சிலர், ஏன் இன்னும் நம்முடைய இந்திய அரசாட்சி கோஆவின் பேரில் இராணுவத் தாக்குதல் செய்யவில்லை என்று கேட்கிறார்கள். உலகத்தில் பல மூலை முடுக்குகளில் ஏற்பட்டு வரும் தீவிர சச்சரவுகளையெல்லாம் யுத்தம் இன்றிச் சமாதான முறையில் தீர்ப்பதற்காக நம்முடைய பிரதம மந்திரி நேரிலும் தூதுகள் அனுப்பியும் பிரயத்தனப்பட்டு வருகிறார். அதே சமயத்தில் நாம் கோஆவின் பேரில் அதற்கு மாறான முறையை எப்படிக் கடைப்பிடிப்பது என்று தயங்குகிறார். இதுவே ஒழிய, நிலைமையை உணரவில்லை என்பதல்ல காரணம்.

நம்முடைய சமாதானக் கொள்கையை நாம் விடமாட்டோம் என்கிற உறுதியின் பேரில்தான் போர்ச்சுகல் அதிகாரிகள் தைரியமாகத் தங்கள் பலாத்கார முறையை நடத்துகிறார்கள். இதுவும் உண்மையே. ஆயினும் நம்முடைய பொதுக் கொள்கையையும், இக் கொள்கையினால் உலகத்தில் நமக்கு ஏற்பட்டிருக்கும் செல்வாக்கையும், விட்டு விடாமல் எந்த முறையை அநுசரித்தால் வெற்றி பெறுவோம் என்பதை நம்முடைய பிரதம மந்திரி ஆலோசித்தே வருகிறார். அவசரப்படவேண்டியதில்லை.

# தந்தித் தமிழ்

தமிழ்நாட்டு மக்கள் தந்தி கொடுக்கும் போது செய்திகளைத் தமிழ் மொழியிலேயே கொடுக்க வேண்டும் என்கிற ஆசை சமீப காலத்தில் வளர்ந்து வருகிறது. அவசரமாக ஒரு செய்தி அனுப்புவதில் விஷயம் தவறிப் போகாமல் எழுத வேண்டுமானால் தமிழிலேயே தமிழர்கள் எழுதுவது நலம். அதற்குச் சௌகரியங்கள் அமைப்பது அரசாங்கத்தின் கடமை. எந்த பாஷையுமே இந்த உரிமையை இந்தியத் தந்தி இலாகாவிடம் கோருவது நியாயம்.

இதற்கு வழி என்ன என்பதைப் பலர் ஆலோசித்து வருகிறார்கள். இந்தியாவில் வழங்கி வரும் எல்லா பாஷைகளுக்கும் சம சௌகரியம் ஏற்பட வேண்டும். தந்தி உத்தியோகத்தில் தற்போதுள்ள நம்முடைய சகோதரர்கள் அடைந்திருக்கும் பயிற்சியை அவர்களுக்குப் புதுத் தொந்தரவு கொடுக்காமல் பயன்படுத்திக் கொள்ளவும் வேண்டும். இதற்கு ஒரே ஒரு வழிதான் தென்படுகிறது. எழுத்தொலிகளைச் சரியான முறையில் ஆங்கில எழுத்துக் குறிகளில் பெயர்த்து எழுத வேண்டும். இந்தப் பெயர்த்து எழுதும் வேலையைத் தந்தி ஆபீஸில் ஒரு உத்தியோகஸ்தர் செய்ய வேண்டும். அப்படிச் செய்தால், தந்தி உத்தியோகஸ்தர்களுக்குப் புதுத் தொந்தரவு ஏற்படாது. சந்தேகங்களும் குழப்பங்களும் பிழைகளும் உண்டாகா.

தமிழ் ஒலிகளை ஆங்கில எழுத்துக்களில் பெயர்த்து எழுதுவதில் ஒரே முறையைக் கையாள வேண்டும். ஒரு ஒலிக்கு ஒரு குறிப்பே இருக்க வேண்டும். ஒரு குறிப்புக்கு ஒரு ஒலியே இருக்க வேண்டும். அவ்வாறு அமைப்பதற்குச் சில யோசனைகள் கூற விரும்புகிறோம்.

தமிழ் எழுத்துக்களையும் அவற்றிற்கு உரிய ஆங்கில எழுத்துக்களையும் முறையே கீழே தருகிறோம்.

தமிழிலும் வடமொழியிலும் மற்ற பாஷைகளிலும் உள்ள நூல்களை ஆங்கில எழுத்துக்களில் பெயர்த்து எழுதுவதற்காக இப்போது நிபுணர்கள் ஏற்படுத்திக் கொண்டிருக்கும் எழுத்து முறை நம்முடைய தந்தி விஷயத்துக்குப் பொருத்தமாகாது. எழுத்துக்கு மேலும் கீழும் அடையாளங்கள் இட்டு அச்சடிக்கும் காரியத்தைத் தந்தி முறையில் புகுத்த முடியாது. குழப்பம் ஏற்படும். தந்தி உத்தியோகஸ்தர்கள் கஷ்டப்படுவார்கள். புதுப் பயிற்சி ஒன்றும் அதிகமாக அவசியமில்லாத முறையில் ஆங்கில பாஷையில் அதிகமாக வழங்கி வரும் எழுத்துப் பிரயோகத்தை ஒட்டி அமைத்துக் கொள்வதே நலம். இதையெல்லாம் கவனித்துக் கீழ்க்கண்ட முறையை மக்கள் யோசனைக்கு வழங்குகிறோம். முக்கியமாகத் தந்தி இலாகா உத்தியோகஸ்தர்களுடைய சம்மதம் வேண்டும். ஆகையால் அவர்கள் அபிப்பிராயத்தையும் நாடுகிறோம்.

| தமிழ் எழுத்து | | தந்தி ஆங்கில எழுத்து |
|---|---|---|
| அ | — | a |
| ஆ | — | aa |
| இ | — | i |
| ஈ | — | ee |
| உ | — | u |
| ஊ | — | oo |
| எ | — | e |
| ஏ | (மொழி முதல் எழுத்து) | ye |
| ஏ | (உயிர்மெய்யில் வரும்போது) | ey |
| ஐ | — | ai |
| ஒ | — | o |
| ஓ | — | oa |
| ஔ | — | au |
| க் | — | k |
| ககரம் | (ஓசை மெலியும்போது) | g |
| ங் | — | ng |
| ச் | — | ch |
| சகரம் | (ஓசை மெலியும்போது முறையே) | j, s, c |

அட்டைப்பட விளக்கம்

## ரவி சந்திரிகா

வைத்திய அதிகாரி கேட்ட அன்புக் கேள்விக்குத் தன் சோகக் கதையைச் சொல்ல முனைகிறான் ரவீந்திரன். அவன் மனக் கண்ணில் ஒரு விநாடி வண்ண ஓவியம் ஒன்று தெரிகிறது. தன் வாழ்க்கையின் கீதத்தையே புல்லாங்குழலில் ஊதுவது போலவும், சர்ப்பகந்தி என்ற மூலிகையைப் போல் தன் வாழ்க்கையில் பின்னிவிட்ட பூங்கொடியான சந்திரிகாவின் எழில் முகம் பின்னணியில் நிற்பது போலவும் ரவீந்திரனுடைய உட்புலனில் தெரிகிறது.

கலைஞனின் அந்தக் காட்சிக் கற்பனையை இந்த இதழ் அட்டையில் தருகிறார் நமது ஓவியர் மணியம்.

[உதாரணம்:

| | | |
|---|---|---|
| பஞ்சின் விலை | — | Panjinvilai |
| பசு | — | Pacu |
| சுவை | — | Cuvai |
| சங்கீதம் | — | Sangeetham |
| சண்டை | — | Canhdai |
| பச்சை | — | Pachchai ] |

| | | |
|---|---|---|
| ஞ | — | nj |
| ட் | — | t |
| டகரம் (ஓசை மெலியும்போது) | | d |
| ண் | — | nh |
| த் | — | th |
| தகரம் (ஓசை மெலியும்போது) | | dh |
| ந், ன் | — | n |
| ப் | — | p |
| பகரம் (ஓசை மெலியும்போது) | | b |
| ம் | — | m |
| ய் | — | y |
| ர் | — | r |
| ல் | — | l |
| வ் | — | v |
| ழ | — | zh |
| ள | — | lh |
| றகரம் | — | r |
| ற்ற | — | tr |

## வடமொழி எழுத்துக்கள்

| | | |
|---|---|---|
| ஜ | — | j |
| க்ஷ | — | ksh |
| ஷ | — | sh |
| ஸ | — | s |
| ஹ | — | h |

இப்படி ஒரு முறையைப் பயன்படுத்தி எல்லாரும் தந்தி வாசகங்களை எழுதக் கற்றுக் கொண்டால் தந்திக் காரியாலயங்களில் வேலை செய்வோருக்கு அதிகக் கஷ்டம் இராது. இதற்கு என்று தனியாக எழுத்துப் பெயர்ப்பு குமாஸ்தா ஒருவரைத் தந்தி ஆபீஸில் ஆரம்ப காலத்தில் நியமித்து விட்டால் வேலை துரிதமாக நடக்கும். தந்தி வாங்குவதற்கும், வந்த தந்தியைப் பெயர்த்து எழுதுவதற்கும் இந்த குமாஸ்தா பயிற்சி பெற்றவராக இருக்க வேண்டும்.

தந்திக் கட்டண விஷயத்தில் இப்பொழுது உள்ளது போலவே பதினைந்து ஆங்கில எழுத்துக்களை ஒரு மொழியாக வைத்துக் கொண்டு வசூலிக்கலாம்.

உதாரணமாகச் சில தமிழ்த் தந்தி வாசகங்களை இந்தப் புதிய முறையில் பெயர்த்து எழுதிக் கொடுத்திருக்கிறோம்:

அம்மாவுக்கு சுரம் குறையவில்லை × சாம்பசிவம் ஏன் இன்னும் வரவில்லை × ஊரில் விஷ ஜுரம் அதிகமாகவே இருக்கிறது × கொஞ்சம் கவலைப்படும்படியான நிலைமை × வழக்கம்போல் பணம் அனுப்பவும் × வேறு விசேஷம் இல்லை ×

ammavukku juram kuraiyavillai × saambacivam yen innum varavillai × ooril visha juram adhigamaagavey irukkiradhu × konjam kavalaippadumbadiyaana nilaimai × vazhakkampoal panham anuppavum × veyru viceysham illai ×

பொன்னுசாமியின் பெண்ணைப் பற்றி மாப்பிள்ளையை விசாரியுங்கள் × பழைய சமாசாரமேயா ×

ponnusaamiyin penhnhaippatri maappilhihaiyai vichaariyungalh × pazhaiya samaachaarameyaa ×

இந்த ஒலி பெயர்ப்பு முறை, தந்தியைத் தவிர வேறு வகையிலும் பயன்படக்கூடும். முக்கியமாகத் தமிழ் நூல்களை ஆங்கிலப் பத்திரிகைகளில் விமர்சனம் செய்யும் பொழுதும், ஆங்கிலக் கட்டுரைகளில் தமிழ்ச் சொற்களை எழுத நேரிடும் போதும் இந்த முறையைப் பின்பற்றினால் படிக்கும் தமிழருக்கு எளிதாக இருக்கும் என்பது நிச்சயம். தற்போது கம்பனா அல்லது காம்பனா மரியாதையா அல்லது மாறியதையா என்பது பல சமயம் விளங்காமற் போகிறது. இப்படியே கழகமும் கலகமும், வலையும் வாழையும், வளையும்!

இந்த முறையில் முக்கியமாகக் கவனிக்க வேண்டியது நெடில் ஆகாரம், னகரம், ணகரம், டகரம், தகரம், குறில் எகரம், நெடில் ஏகாரம் — இந்த எழுத்துக்களைத் தவறின்றிக் குறிப்பதற்காக மேலேயுள்ள முறையில் கவனம் செலுத்தி அமைக்கப் பட்டிருக்கிறது.

★ நமது ஓவியர் சந்திராவுக்குச் சென்ற ஏப்ரல் மாதம் இறுதியில் உடல் நிலை பாதிக்கப்பட்டது. அதிகமான இரத்தக் கொதிப்பின் காரணமாக அவருக்கு நோய் ஏற்பட்டதாகக் கருதப்படுகிறது. அவர் சென்னை ஜெனரல் ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெற்று வருகிறார் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறோம். ★

# என்ன சேதி?

## பரீட்சை மொழிப் பிரச்னை

நம்முடைய பிரதம மந்திரி ஜவாஹர்லால் நேரு அவர்களைப் பொறுத்த மட்டில் இந்தப் பிரச்னையைப்பற்றித் தென் மக்கள் ஏதொரு சந்தேகமாவது கவலையாவது பட வேண்டியதில்லை. அரசியல் நிர்ணயச் சட்டத்தில் சொல்லப்பட்டிருக்கும் பதினைந்து வருஷ கால வரம்பு முடிந்த பின்னரும் பரீட்சைகள்—அதாவது அகில இந்திய உத்தியோகப் பரீட்சைகள்—ஹிந்தி பாஷையிலேயே நடைபெற வேண்டுமென்று கட்டாயப் படுத்துவதற்கு அந்தச் சட்டத்தில் ஆதாரம் ஏதும் இல்லை; அது முடியவும் முடியாது என்பது ஸ்ரீ ஜவாஹர்லால் நேரு அவர்களுடைய அபிப்பிராயம். ஹிந்திக்குப் பதிலாக வேறு மொழியிலும் பரீட்சை செய்வதற்கு இடம் 1965க்குப் பின்னரும் இருந்தே தீர வேண்டும் என்பதுதான் அவருடைய கருத்து.

தகுந்த சமயத்தில் இதைப் பற்றி அறிக்கை வெளியாகும் என்று நம்புகிறோம். ஆனாலும் நாம் செய்ய வேண்டிய முயற்சியைத் தளரவிடக்கூடாது. இது தமிழுக்கு மட்டும் அல்ல தலைவலி. தெலுங்கு, கன்னட, மலையாளத் தலைவர்களும் தங்கள் கருத்தைச் செலுத்த வேண்டும்.

## விளம்பரத் தோட்டம் வேண்டாம்!

சென்னை நகரத்தில் தெருக்கள் கூடும் நாற்சந்திகளில் கார்ப்பொரேஷன் அதிகாரிகள் பசும் புல் வட்டங்களை அமைத்துக் காப்பாற்றி வந்து, நகரத்துக்கே ஒரு தனி அழகைத் தந்திருக்கிறார்கள். அது மிகவும் மெச்சத் தக்கது. முக்கியமாக நீல் சிலை இருந்த இடத்தில் பார்க்கலாம்: ஒரு நல்ல தோட்டமாகவே அந்த இடத்தை மாற்றி விட்டார்கள். இது போக்குவரத்து சௌகரியத்துக்கும் பார்வைக்கும் மிகவும் அனுகூலமாக இருந்து வருகிறது. திடீரென்று இப்போது அவ்விடத்தில் இரண்டு விளம்பரப் பலகைகள் தோன்றி நிற்பதைக் கண்டு அச்சம் அடைந்தோம். இப்படியே புல்லுக்கும் வண்ணச் செடிகளுக்கும் பதிலாக விளம்பரங்களே வளர்ந்து கொண்டு போகுமோ என்று பயந்து கார்ப்பொரேஷன் அதிகாரிகளின் கவனத்துக்காக இதை எழுதுகிறோம்.

இந்தச் சில விளம்பரங்களினால் வரக்கூடிய அற்ப வருமானத்தை வேறு பல விதங்களில் அடையலாம். நகரத்தின் அழகைக் கெடுத்துவிட வேண்டியதில்லை.

## கல்வி மகாநாடு

“குழந்தைகள் ஒரு நாட்டின் செல்வம்; மாணவர்கள் எதிர்காலத்தின் தலைவர்கள்” என்று எல்லா அறிஞர்களும், தேசத் தலைவர்களும், பொது மக்களும் சொல்லுகிறார்கள். அப்படியானால் இந்த எதிர்காலத் தலைவர்களை, தேசத்தின் உண்மையான செல்வங்களைச் சரியான முறையில் உருவாக்க வேண்டியது கல்வித் துறையில் ஈடுபட்டிருப்பவர்களின் முக்கியமான கடமையாகும். இது சம்பந்தமாகச் சென்ற பல மாதங்களாகத் தமிழ்நாட்டில் உருவாகியுள்ள கருத்துக்கு மதிப்புக் கொடுக்க வேண்டியது மிகவும் அவசியம்.

தமிழ் நாட்டில், தமிழ் மக்கள் படித்துப் பயன்பெறும் பாடசாலைகளிலும் கல்லூரிகளிலும் தமிழ் மொழியிலேயே பாடங்களை நடத்த வேண்டும் என்பதுதான் தமிழ் மக்களின் விருப்பமாகும். இது நியாயமான விருப்பம் என்று நாட்டு நலத்தில் கருத்துள்ள எல்லாரும் வரவேற்பார்கள் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை. இருந்தாலும் இத்தனை காலமாக ஆங்கில மொழியிலேயே எல்லாப் பாடங்களையும் நடத்திப் பழக்கப்பட்ட கல்வித் துறை சம்பந்தப்பட்ட சிலருடைய மனத்தில் சஞ்சலம் இருந்து வருகிறது. கல்வி போதனைக்குரிய சொற்களைச் சரியான முறையில் தொகுப்பது சம்பந்தமாகவும் கவலை இருந்து வருகிறது. இது போன்ற சஞ்சலங்களையும், கவலைகளையும் தீர்த்து, கல்லூரிகளிலும், பாடசாலைகளிலும் தமிழையே போதனை மொழியாகக் கொண்டு வர முயன்று வருகிறார் நமது கல்வி மந்திரி திரு சுப்பிரமணியம் அவர்கள்.

அதற்காக வரும் ஜூன் பதினெட்டாம் தேதி சென்னை சர்வகலாசாலைக் கட்டடத்தில் ஒரு மகாநாடு நடக்க ஏற்பாடு செய்திருக்கிறார். இந்த மகாநாட்டுக்குச் சென்னை சர்வகலாசாலைத் தலைவர், அண்ணாமலை சர்வகலாசாலைத் தலைவர், நமது ராஜ்யத்திலுள்ள கல்லூரிகளின் தலைவர்கள், இன்னும் அறிவுத் துறையில் ஈடுபட்டு உழைத்து வரும் தமிழன்பர்கள்

மழை வரும் சமயம் தவளைகள் சத்தம்!




இந்திய சர்க்காரின் பாஷைக் கொள்கையை எதிர்த்துத் "தென்னாட்டு" மக்கள் நடத்தி வரும் கிளர்ச்சியை இந்தி 'சம்மேளனத்தார்' கண்டித்திருக்கிறார்கள்!

## சோளக் கொல்லைப் பொம்மை!

நெகோவாள் சம்பவம் மாதிரி மற்ெருரு சம்பவம் இனி நடக்காது என்று பாகிஸ்தான் பிரதம மந்திரி உறுதிமொழி கூறியிருக்கிறுர்.

## அதிசயம்!

பாகிஸ்தான் கவர்னர் ஜனரல் நெடுநாட்கள் வைத்திய சிகிச்சை செய்து கொள்ள ஐரோப்பாவுக்குச் சென்றிருக்கிறுர்.

# அருணகிரிநாதர் இசை விழா

## தில்லைநகர் — திருச்சி

★

ஜூன் மாதம் 4-ம் தேதி தொடங்கி ஐந்து நாட்கள்வரை நடைபெறும்

★

"கல்கி" ஆசிரியர்

மீ. ப. சோமசுந்தரம் ("சோமு")

அவர்கள்

4-6-55 மாலை 5-30 மணிக்கு ஆரம்ப விழாவுக்குத் தலைமை தாங்குவார்கள்

அண்ணாமலைப் பல்கலைக் கழகத் துணை வேந்தர்

டி. எம். நாராயணசாமி பிள்ளை, எம்.எல்.சி.

அவர்கள்

தொடக்கவுரை நிகழ்த்துவார்கள்

★

திருவாளர்கள்:

திருவாவடுதுறை இராஜரத்தினம் பிள்ளை, டி. வி. நமசிவாயம், மதுரை சோமசுந்தரம், மாயவரம் எஸ். ராஜம், சீர்காழி கோவிந்த ராஜன், ஸ்ரீரங்கம் ரங்கநாதன், கல்யாணசோழபுரம் துரைஸ்வாமி, டி. ஆர். கிருஷ்ணமாச்சாரி, கும்பகோணம் ஸ்ரீமதி ராஜேஸ்வரி, கடலூர் ஸ்ரீமதி ஜெயலக்ஷ்மி

மற்றும் அனேக

இசைச் செல்வர்கள் கலந்து கொள்வார்கள்

அனைவரும் வருக!

சிலரையும் கூப்பிட்டிருக்கிறார். இந்த மகாநாட்டின் மூலம் பாட போதனை சம்பந்தமாக ஒரு நல்ல முடிவுக்கு வர, கல்வி மந்திரி திட்டமிட்டிருக்கிறார்.

இந்த மகாநாட்டில் தமிழ் நாட்டின் பள்ளிக்கூடங்களின் நிலைமையும், எதிர் கால மாணவர்களின் தலையெழுத்தும் சிறந்த முறையில் உருவாகும் என்று எதிர்பார்க்கிறோம். ஒரு நாடும் அந்த நாட்டு மக்களும் முன்னேற வேண்டு மானால், அவர்களுடைய மொழி வளம் பெற வேண்டும். அவர்களுடைய தாய் மொழியிலேயே எல்லாக் காரியங்களும் நடைபெற வேண்டும். அப்படி எல்லாக் காரியங்களும் நடைபெறும் முறையில் அவர்கள் மொழி வளம்பெற்று விட்டால் அந்த நாடு விரைவில் எல்லா வகையிலும் முன்னேற்றம் அடைந்து சிறந்து விளங் கும் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை.

## சர்வோதய விழா

ஜூன் மாதம் 4, 5 தேதிகளில் திருத் துறைப்பூண்டி சரித்திரப் புகழ் பெறப் போகிறது. 'தமிழ் நாடு மூன்றாவது சர் வோதய சம்மேளனம்' ராஜாஜியின் தலை மையில் வெகு விமரிசையாக நடக்கப்போ கிறது என்பதை அறிந்து மகிழ்கிறோம்.

மகாத்மா காந்தியடிகளின் அடிச் சுவட் டைப் பின்பற்றி விநோபா அடிகள் சாந்தியும் அன்பும் நிறைந்த முறையில் பூமிதான இயக்கத்தை வெகு வெற்றிகர மாக நடத்தி வருகிறார்.

நாட்டின் பல பகுதிகளிலும் பலர் 'நான் முந்தி நீ முந்தி' என்று போட்டி போட் டுக் கொண்டு நில தானம் செய்து வரு கிறார்கள். கிராமம், கிராமமாக வழங்கி யிருக்கிறார்கள். இதனாலும் நிலமில்லா திருந்த விவசாயிகளின் வாழ்வில் புது மலர்ச்சி ஏற்பட்டிருக்கிறது. அதனால் தான் ராஜாஜி, "விநோபாஜியின் பூமி தான இயக்கம் அணுகுண்டைவிட அபார சக்தி வாய்ந்தது" என்று கூறினார்.

இந்த மகாநாட்டை அகில பாரத சர்வ சேவா சங்கத்தின் தலைவர் திரு திரேந்திர மஜூம்தார் துவக்கி வைப்பார். விநோபா அடிகளின் காரியதரிசி திரு அன்னா சாஹேப் சஹஸ்த்ரபுத்தே, அகில இந்திய ஆதாரக் கல்விச் சங்கக் காரியதரிசி திரு அரியநாயகம் முதலியவர்களும் இம் மகா நாட்டில் கலந்து கொள்ளப் போகிறார்கள். மகாநாடு வெற்றிகரமாக நடக்கும் என் பதில் சந்தேகம் என்ன இருக்கிறது? ஆகவே இந்த நல்ல வாய்ப்பைத் தஞ்சை ஜில்லா வாசிகள் நன்கு பயன்படுத்திக் கொள்வார்கள் என்று நம்புகிறோம்.

# சக்கரவர்த்தித் திருமகன்

## 70. பிராட்டியும் மாருதியும்

“அன்புக்குரிய வானர சிரேஷ்டனே! நீ கொண்டு வந்த செய்தியைக் கேட்டு நான் மகிழ்வதா துக்கப்படுவதா என்பது தெரியவில்லை. உன் மொழியெல்லாம் அமிருதம் கலந்த விஷம் போல் என் உள்ளத்தில் பாய்கிறது. ராமன் என்னை மறந்து விடவில்லை, என்னைத் தேடுகிறான் என்பது ஆனந்தம் தருகிறது. ராமன் துக்கப்படுகிறான், என்னையே நினைத்து நினைத்துத் துயரப் படுகிறான் என்பது என்னுடைய துக்கத்தை அதிகப் படுத்துகிறது.”

இவ்வாறு ஜானகி உள்ளதை உள்ளது போல் சொல்லி ஆறுதல் அடைந்தாள்.

மனித வாழ்க்கையில் சுகமும் துக்கமும், சந்தோஷமும் துயரமும் ஒன்றோடு ஒன்று கலந்து மக்களை இயக்குகிறது. ராமன் தன்னை மறக்கவில்லை, தன்னையே நினைத்து நினைத்து வாடித் துயரப்பட்டு வருகிறான், தேடித் தேடியலைந்து துக்கப்பட்டு வருகிறார் என்கிற செய்தி சீதைக்கு மிக்க ஆறுதலும் சந்தோஷமும் தந்தது. ஆனால் கூடவே துயரமும் தந்தது.

சீதை சொன்னாள்: “மனித ஜன்மத்தில் சந்தோஷம், விசனம் என்கிற இரட்டைக் கயிற்றால் உயிரானது கட்டி இழுக்கப் படுகிறது. இதை யாரும் தப்ப முடியாது. ராமனும் லக்ஷ்மணனும், நானும் இந்த இயற்கை விதிக்கு உட்பட்டிருக்கிறோம். பெரும் சுழிக் காற்றில் அகப்பட்டுக் கடலில் தள்ளாடும் படகைப் போல் என் பிராணநாதன் துக்கப்படுகிறார். அவர் எப்போது வருவார்? அன்புக்குரிய வானர சிரேஷ்டனே, இந்த லங்கையையும் ராவணனையும் மற்ற அரக்கர்களையும் எப்போது வந்து வதம் செய்வார்? இந்த ராக்ஷசன் எனக்கு வைத்திருக்கும் காலவரைக்குள் இது நடக்க வேண்டுமே? இதை என் நாதனிடம் சொல்லுவாய். இரண்டு மாதங்கள் தான் மிஞ்சி நிற்கின்றன. ராவணனை நல்வழியில் செலுத்த அவன் தம்பி விபீஷணன் எவ்வளவோ முயன்றான். ‘சீதையைக் கொண்டு போய்த் திருப்பி ஒப்படைத்து விடு, லங்கையும், ராக்ஷச குலமும் தப்பிப் பிழைக்கும்’ என்று விபீஷணன் எவ்வளவோ சொல்லிப் பார்த்தான்; எல்லாம் பயனில்லாமல் போயிற்று. என் உள்ளத்தில் அந்தராத்மா தைரியமாக இருக்கிறது. ராவணன் அழியுங் காலம் நெருங்கி வருகிறது. யமனை அவனே தேடுகிறான். அவன் அழிவது நிச்சயம். நாதன் வந்து என்னைச் சீக்கிரமே வெற்றியுடன் அடையப் போகிறார். இதைப் பற்றி எனக்குச் சந்தேகமில்லை. பாவத்தை யறியாத என் உள்ளத்தில் காணும் நிகழ்ச்சி ஒரு நாளும் பொய்யாகாது.”

ராஜாஜி

இவ்வாறு சீதை கண்களில் நீர் ததும்பப் பேசிக் கொண்டே போனாள்.

சீதையின் துக்கத்தைப் பார்த்து ஹனுமானுக்குப் பொறுக்க முடியவில்லை.

“ஜானகி, தாயே! உடனே போய்ச் சொல்லி ராகவனை அழைத்து வருவேன். பெருஞ் சேனையுடன் வந்து லங்கையில் இறங்குவான். கவலைப்படாதீர். உமக்கு இஷ்டமாயின் சொல்வீர், இப்போதே என் முதுகில்



ஏறி உட்காருவீர், நானே உம்மைத் தூக்கிக் கடலைத் தாண்டி ராமனிடம் போய்ச் சேர்த்து விடுவேன். இதைச் செய்வதற்குப் போதிய பலம் எனக்கு இருக்கிறது. சந்தேகமில்லை. அக்கினி தேவன் இந்திரனிடம் அவியைக் கொண்டு போய்ச் சேர்ப்பதைப் போல் ராமசந்திரனிடம் உம்மைக் கொண்டு போய்ச் சேர்ப்பேன். புண்ணியவதியே! உத்தர விடுவீர். இன்றே ராகவனை நீர் பார்க்கலாம். தம்பியுடன் உட்கார்ந்திருக்கும் ராம சந்திரனிடம் இன்றே நீர் போய்ச் சேருவீர். சந்தேகம் வேண்டாம். ராவணனோடு லங்கை முழுவதையும் தூக்கி ராமன் காலடியில் கொண்டு போய்ச் சேர்ப்பேன். இதுவும் என்னால் முடியும். என்னை யாரும் தடுக்க முடியாது. என் முதுகின்மேல் ஏறி உட்கார்ந்தீரானால் நீரே பார்ப்பீர். ரோஹிணி நட்சத்திரம் சந்திரனிடம் சேருவது போல் ராமசந்திரனை சந்தோஷமாக நீர் அடைவீர். இவ்விடம் எப்படி வந்தேனோ அப்படி இங்கிருந்து அவ்விடம் உம்மை எடுத்துப் போய்ச் சேருவேன், நீரே பார்ப்பீர்.”

இப்படி அன்பும் உற்சாகமும் பொங்கி வர, ஹனுமான் சொல்லிக் கொண்டே போனான். சீதை ஆச்சரியப் பட்டாள். இந்தச் சிறிய வானரம் எப்படி என்னைத் தூக்கிக் கொண்டு கடலைத் தாண்ட முடியும் என்று சந்தேகித்தாள். இதை உணர்ந்து கொண்ட ஹனுமான் தன் சக்தியைப் பிராட்டிக்குக் காண்பிப்பதற்காக மேடையிலிருந்து கீழே குதித்துத் தன் வடிவத்தைப் பெருக்கிக் கொண்டான். பருவதாகாரமாக வளர்ந்தான். சீதை அதைப் பார்த்துப் பெரு மகிழ்ச்சியடைந்தாள்.

“வாயு புத்திரனே! உன் சக்தியை நான் உணர்ந்தேன். ஆயினும் நீ என்னை எடுத்துப்போவது உசிதமல்ல. வழியில் அரக்கர்கள் உன்னைத் தடுத்து யுத்தத்துக்கு இழுப்பார்கள். உன்மேல் பாய்வார்கள். ஆயுதங்களை வீசி எறிவார்கள். நீ என்னைக் காக்க வேண்டியதாகும். கவலைப்படுவாய். யுத்தத்தில் உன் புத்தியைச் செலுத்துவது கஷ்டமாகும். எவ்வளவு பலவானாயினும் யுத்தத்தில் வெற்றி என்பது நிச்சயமான விஷயம் அல்ல. உனக்கு அபாயம் நேர்ந்தால் என் கதி என்ன? உன்மேல் அரக்கர்கள் பாய்ந்தும் ஆயுதங்கள் வீசியும் போர் நடந்து கொண்டிருக்கும்போது நான் தைரியமாய் உன் முதுகின் மேல் உட்கார்ந்து கொண்டிருக்க முடியுமா? நழுவிக் கடலில் விழுவேன். இவற்றையெல்லாம் யோசித்தால் என்னை எடுத்துக் கொண்டு நீ கடலைத் தாண்டுவது சரியல்ல, என்பது வியக்தம். தவிர, ஹனுமானே! நீ வந்து என்னை, அரக்கர்களுக்குத் தெரியாமல் எடுத்துப் போய் விட்டால் அது என் நாதனுடைய வீரத்துக்குக் குறைவாகுமே! ராவணனை எதிர்த்துப் போர் செய்து என்னை மீட்டினால் அல்லவோ க்ஷத்திரிய குலத்துக்குக் கவுரவமாக இருக்கும். ராவணன் என்னைத் திருட்டுத்தனமாக எடுத்து வந்த மாதிரி ராமனும் போர் செய்யாமல் என்னை அடைவது சரியாகுமா? அப்பனே! நீ திரும்பிப் போய் ராமனையும் லக்ஷ்மணனையும் வானர சேனையையும் அழைத்து வா! ராமனுடைய பாணங்களால் லங்கை அழிந்து ராவணன் யமாலயம் அனுப்பப்பட வேண்டும். வெற்றி நமது என்



பதில் சந்தேகமில்லை. ராமனுடைய பாணங்கள் பிரளய காலச் சூரியனைப் போல் இந்த ராவண சமூகத்தை எரித்து நாசமாக்கும்'' என்றாள்.

"**நா**ன் திரும்பிப் போய் ராமனிடம் என்ன சொல்ல வேண்டும் என்று விரும்புகிறீர்? உம்மைக் கண்டு பேசியதற்கு என்ன அடையாளம் சொல்லுவேன்?'' என்று ஹனுமான் கேட்டான்.

இதைக் கேட்டதும் சீதைக்குப் பழைய நினைவுகள் வந்து விட்டன. கண்களில் நீர் பெருகிற்று.

தனக்கும் ராமனுக்கும் மட்டுமே தெரிந்த அந்தரங்க நிகழ்ச்சிகளை ஹனுமான் தன் நாதனிடம் சொன்னால் தன்னைக் கண்டதற்கு அடையாளமும் ஆகும். தன் ஆற்றாமை நிலையையும் காட்டும் என்று இயற்கை வேகத்துக்கு இசையச் சில விஷயங்களைச் சொன்னாள்.

"என்னுடைய ராமன், தண்டக வனத்தில் ஒருவராக நின்று அசுரர்களை நிர்மூலம் செய்த வீரர், இந்த லங்கையை ஏன் இன்னும் அழிக்காம லிருக்கிறார்? அவரால் ஆகாதது ஒன்று உண்டா? ஒரு நாள் நானும் ராமனும் சித்திர கூடத்தில் ஆற்றங்கரையி லிருந்த வனத்தில் விளையாட்டாக அலைந்து, ஓய்ந்து போய் ஒரு இடத்தில் உட்கார்ந்தோம். என் மடியில் அவர் சாய்ந்து அப்படியே தூங்கினார். அப்போது ஒரு காக்கை வந்து என்னை மார்பில் கொத்தித் தொந்தரவு பண்ணிற்று. நான் அதை ஓட்டினேன். திரும்பத் திரும்ப வந்து தொந்தரவு செய்தது. நான் ஒரு சிறு கல்லை எடுத்து அதன் மேல் வீசினேன். அப்போதும் அது கேட்கவில்லை. ராமன் எழுந்து நான் கஷ்டப்பட்டுக் கண்களில் நீர் ததும்பியிருந்த நிலையைக் கண்டு முதலில் சிரித்தார். பிறகு என் உடலில் காக்கையால் கொத்தப்பட்டுக் காயமாகி யிருந்ததைக் கண்டு, இந்தக் காக்கையானது காக்கை

அல்ல. அசுரன் என்பதைக்கண்டு அஸ்திரம் ஒன்று எறிந்தார். அது அவனைத் துரத்தித் துரத்திச் சென்று அசுரன் தப்பிப் பிழைக்க முடியாமல் கடைசியாக வந்து என் நாதன் காலில் விழுந்து சரணடைந்து பிழைத்தான். இதைச் சொல்லுவாய். நான் இன்னும் பல நாள் காத்திருக்க முடியாது. சீக்கிரம் வந்து என் உயிரைக் காப்பாற்ற வேண்டும் என்று சொல்.''

இவ்வாறு சொல்லி விட்டு அழுதாள். மறுபடியும், "இன்னொரு நாள் நாங்கள் இருவரும் தனியாக வனத்தில் நடந்து சென்று கொண்டிருந்தோம். நடந்து நடந்து களைத்துப் போய் வியர்வை வழிந்து நெற்றியிலிருந்த திலகம் கரைந்து போயிற்று. நாதன் வேடிக்கையாக ஒரு மலைப் பாறையிலிருந்த செந்தாதுவைத் தேய்த்துத் தானே என் முகத்திலிட்டார். இது அவருக்கு நினைவிருக்கிறதா என்று கேட்டுப் பார்!'' என்றாள்.

இப்படிப் பழைய நிகழ்ச்சிகளைச் சொல்லச் சொல்லத் தன் தற்கால நிலையை நினைத்து மறுபடியும் துயரத்தில் மூழ்கினாள்.

"ராமனுக்கு நான் ஏதேனும் சொல்ல வேண்டுமா, என்ன? அவர் அறியாதது என்ன இருக்கிறது? நான் சொல்லியா அவருடைய தருமத்தைத் தட்டி எழுப்ப வேண்டும்? நாதனை நான் நமஸ்கரித்தேன் என்று மட்டும் சொல்லுவாய், போதும். அவர் பக்கத்தில் லக்ஷ்மணனும் இருக்கிறான். அவனுக்குச் சமானமான ஒரு தம்பி உண்டா? ராமனுக்குத் துணையாக இருக்கவே பிறந்தவன். நிகரற்ற சாமர்த்தியம் பெற்றவன். என் நாதன் அவன் முகத்தைப் பார்த்துத் தந்தையை இழந்த துயரத்தை மறந்தார். ஒரு களங்கமுமற்ற பரிசுத்த இதயம், பயம் என்பது தெரியாத வீரன். வனத்தில் தன் தாயை மறந்து விட்டு என்னைத் தாயாகப் பாவித்துவந்தவன். என் துயரத்தை அகற்ற வேண்டும் என்று அவனுக்குச் சொல்லுவாய்'' என்றாள்.

ஜானகியின் கண்களில் கண்ணீர் பெருகி, பேச்சுத் தடுமாறிற்று. ராமன் மானைத் தேடி வெகு தூரம் சென்று விட்ட சமயத்தில் இளைய பெருமானைத் தான் கோபித்து மிக அநியாயமாகக் குற்றம் சாட்டினாள் அல்லவா? இது சீதையின் உள்ளத்தை வருத்திக் கொண்டிருக்க வேண்டும்.

உயிரை நீக்க நிச்சயித்த சமயத்தில் வந்து தனக்கு ஆறுதல் தந்த ஹனுமானை விட்டுப் பிரியவும் மனமில்லை; சீக்கிரம் அவன் க்ஷேமமாக ராமனிடம் சேர்ந்து செய்தி சொல்ல வேண்டும் என்றும் ஆசை. இரண்டும் சேர்ந்து சீதையை இவ்வாறு ஒவ்வொரு சமயம் ஒவ்வொருவிதமாகவும்பேசச்செய்தது.

முடிவில், "அப்பனே, இதோ என் விவாக காலத்தில் என் தாய் கொடுத்து தசரத மகாராஜன் என் தலையில் சூட்டிய சூடாமணி. இதை என் நாதனிடம் அடையாளமாகத் தருவாய்'' என்று தன் ஆடைத்



தலைப்பில் முடிந்திருந்த அந்த தெய்வீக ஆபரணத்தை அவிழ்த்தெடுத்து மாருதியினிடம் தந்தாள்.

விவாக காலத்தில் தாயிடம் பெற்றதும் மாமன் தசரத மகாராஜன் கையால் சூட்டப் பட்டதுமான அந்த ஆபரணத்தைச் சீதை எவ்வளவு மதித்திருக்க வேண்டும்! மிக வினயமாக மாருதி அதைப் பெற்றுக்கொண்டான்.

பெற்றுக் கொண்டதும் "கண்டேன் சீதையை" என்று அதை ராமனிடம் கொடுக்கப் போகும் பெருமையையும் மகிழ்ச்சியையும் எண்ணி ஹனுமானுடைய உள்ளம் அப்போதே ராமனிருந்த இடத்துக்குப் பறந்து சென்று விட்டது; உடல்தான் லங்கையில் நின்றது.

"பிரியமுள்ள வானரமே! என்னுடைய துக்கத்தைத் தீர்ப்பதற்கு வேண்டிய யோசனைகளையெல்லாம் நீதான் ராமனுக்குச் சரியாகச் சொல்லி வெற்றி சம்பாதித்துத் தரவேண்டும்" என்றாள். சொல்லியதும் ஹனுமான் புறப்படப்போனான். மறுபடியும் சீதை.

"ஹனுமானே, ராஜகுமாரர்கள் இருவருக்கும் என் அன்பைச் சொல்லுவாய். சுக்ரீவனுக்கும் வானரப் பெரியோர்களுக்கெல்லாம் என் அன்பைச் சொல்லுவாய். துயரக் கடலை நான் தாண்டுவதற்காக ராமனுக்கு எல்லாச் சகாயமும் அவர்களைச் செய்யச் சொல்லுவாய். நீதான் ராமனுக்கு உற்சாகம் தளராமல் சொல்ல வேண்டிய யோசனைகளையெல்லாம் சொல்ல வேண்டும்" என்றாள்.

"துக்கத்தை அகற்றிக் கொள்வீர். நிச்சயம் ராமலக்ஷ்மணர்கள் வானரப் படையுடன் லங்கா தீவில் இறங்கி அரக்கர்களை அழித்து உம்மை வெற்றியுடன் திருப்பிக் கொண்டு போவார்கள். ஒரு சந்தேகமும் படாமல் இருப்பீராக" என்றான் மாருதி.

"இங்கே எங்கேயாவது நீ ஒரு நாள் இருந்து தங்கி இளைப்பாறித் திரும்புவது நல்லதல்லவா? உடனே போக வேண்டுமா?" என்றாள். மறுபடியும் சீதை. "உன்னைப் பார்த்துக் கொஞ்சம் ஆறுதல் அடைந்தேன். என் துக்கத்தை மறந்தேன். மறுபடி நீ மறைந்ததும் நான் துக்கத்தில் மூழ்குவேன். நீ இந்தப் பெருங் கடலைத் தாண்டி வந்தாய். ராமனும் அவருடைய சேனையும் எப்படி இந்தக் கடலைத் தாண்டப் போகிறார்கள்? இதைப் பற்றி உன் யோசனை என்னவோ!" என்று மறுபடியும் சந்தேகப்பட ஆரம்பித்தாள்.

"தேவி! நீர் ஒன்றும் ஐயப்பட வேண்டாம். நான் ஒருவன்தான் கடலைத் தாண்டக் கூடியவன் என்று எண்ணினீரோ? அங்கிருக்கும் வானரர்கள் எல்லாரும் என்னைவிட சாமர்த்தியசாலிகள். சுக்ரீவன் மட்டுமல்ல, அவன் படையிலுள்ளவர்களில் பலர் பூமண்டலம் முழுதும் பறந்து சுற்றித் திரியக் கூடிய சக்தி கொண்டவர்கள். இந்தக் கடல் ஒரு பெரிதல்ல! என்னை விட பலசாலிகளும் சாமர்த்தியசாலிகளும் ஆகாய மார்க்கம் செல்லுபவர்களும் ஆயிரக்கணக்காக எங்களில் இருக்கிறார்கள். ஒரு சந்தேகமும் பட வேண்டாம். உண்மையில் எல்லாருமே என்னைத் தோற்கடிப்பார்கள். எல்லாரையும் விட பலசாலியையா தூதனாக அனுப்புவார்கள்? குறைந்தவனைத் தேடி முதலில் அனுப்பினார்கள். அங்கே இருக்கும் வானரர்களில் பலர் என்னை மிஞ்சினவர்கள். தேவி, துக்கத்தை விட்டுச் சந்தோஷமாக இருப்பீராக. என் முதுகின் பேரில் இரு ராஜ சிம்மங்களையும் ஏற்றிக்கொண்டு வரப் போகிறேன். வந்து இந்த நகரத்தைப் பாணங்களால் பாழாக்குவார்கள். ராவணனைக் குலத்தோடு அழிப்பார்கள். உமக்கு மங்களம்! எதிர்பார்த்த வண்ணமாக இருப்பீராக! துயரக் கடலைத் தாண்டி அக்கரை ஏறுவீர். துக்கமெல்லாம் ஒரு கனவாகும். வெகு நாட்களில்லை. இரு ராஜகுமாரர்களும் வில் பிடித்து லங்கை வாயிலில் நிற்பதைப் பார்ப்பீர். இந்த அரக்கர் கூட்டம் அழிவதைப் பார்ப்பீர்! வானர சேனை வந்து குதித்துக் கூத்தாடி லங்கையைப் பாழாக்குவதைப் பார்ப்பீர். செய்தி தெரிந்த பின் ஒரு கணமும் சும்மா இருக்க மாட்டார்கள். நான் போய்ச் சொல்லுவது தான் தடை. உடனே கிளம்பி வருவார்கள். தைரியமாக இருப்பீராக" இவ்வாறு சொல்லி தேவியைத் தலைவணங்கி நமஸ்கரித்துப் புறப்பட்டான்.

"நான் உயிருடன் இருக்கிறேன் என்று ராமலக்ஷ்மணர்களுக்குச் சொல்லுவாயாக. காரியங்களைத் துரிதப்படுத்துவாயாக. மங்களம்" என்றாள் சீதை.

அஞ்சனா தேவியின் வீரகுமாரன், ஜானகியின் சோகத்தைத் தீர்த்த மகானுடைய அடி பணிவோமாக!

# மாந்தருக்குள் ஒரு தெய்வம்

கல்வி மந்திரி திரு ஸி. சுப்பிரமணியம்

தம்பிக்கு அண்ணன் கதை சொல்வதும் பாடம் சொல்வதும் நாம் எங்கும் எப்போதும் காணக் கூடிய காட்சி. அதே முறையில் கல்கி அவர்கள் தம் தமிழ் நாட்டுச் சகோதரர்களுக்கு விதம் விதமான கதைகளையும் அறிவு ஊட்டக்கூடிய பல அரிய நூல்களையும் இயற்றிக் கொடுத்திருக்கிறார். அந்நூல்களுக் கெல்லாம் முக்கியத்துவம் வாய்ந்தது "மாந்தருக்குள் ஒரு தெய்வம்" என்ற நூல்.

காந்தி மகான் வாழ்ந்த காலத்திலே நம்மில் பலர் வாழ்ந்திருக்கிறோம். அவர்கள் இயற்றிய இயக்கங்களில் பங்கெடுத்துக் கொண்டிருக்கிறோம். சிலர் அவருடன் நெருங்கிப் பழகி இருக்கிறோம். நம் எல்லோருக்கும் வாழ்க்கையிலே எல்லாத் துறைகளிலும் வழிகாட்டியாக இருக்கக் கூடிய ஒரு தெய்வமாக அவர் விளங்குகின்றார். அத் தெய்விகத் தன்மையை மகாத்மாஜி எப்படி அடைந்தார் என்று சொல்லும் சரித்திர நூல்தான் மாந்தருக்குள் ஒரு தெய்வம்.

மற்றவர்களைப் போல் சாதாரணமாகப் பிறந்து வளர்ந்த குழந்தை, எப்படி உலகம் போற்றும் மகாத்மாவாக வளர்ச்சியுற்றார் என்பதை, கல்கி அவர்களுக்கே உரித்தாகிய எளிய கவர்ச்சிகரமான நடையில் சிறுவர்களும் புரிந்து கொள்ளக் கூடிய முறையில் இந்தக் கதையைச் சொல்லியிருக்கின்றார். மகாத்மாஜி அவர்கள் தம்முடைய சுய சரிதையை சத்திய சோதனை என்ற புத்தகத்திலே நமக்குச் சொல்லியிருக்கிறார். அப்புத்தகத்திலிருந்து சில பகுதிகளை அவசியமான இடங்களில் எடுத்துக்கொண்டு இந்நூலுக்கு ஒரு மகத்துவத்தைக் கொடுத்திருக்கிறார்.



மகாத்மாஜி அவர்கள் பிறப்பிலேயே மகாத்மாவாகப் பிறக்கவில்லை. ஒரு வித்து எப்படிச் சிறு செடியாக முளைத்து இயற்கையிலேயே படக்கூடிய வெய்யில், காற்று, மழை இவைகளையெல்லாம் சமாளித்துப் பெரிய மரமாக வளருகின்றதோ அதே முறையில் காந்தி மகான் சாதாரணக் குழந்தையாக இருந்து வாழ்க்கையில் ஏற்படக் கூடிய இன்ப துன்பங்கள் நன்மை தீமைகள் இவைகளால் பாதிக்கப்பட்டுச் சிறிது சிறிதாக வளர்ந்து மனித சமூகத்துக்கே வழி காட்டும் மகானாக விளங்கினார். குழந்தைப் பருவத்திலே தாய் தந்தையர்களின் வாழ்க்கை, அவர்களுடைய குணாதிசயங்கள் எவ்வளவு தூரம் குழந்தைகளைப் பாதிக்கின்றன என்பது மகாத்மாஜியின் குழந்தை வாழ்க்கையில் தெளிவாக விளங்கும். அவர் தந்தையின் நேர்மையும், உறுதியும், அன்னையின் தாய்மையும், அன்பும் குழந்தை உள்ளத்தில் மாறாத குணங்களை ஏற்படுத்தின.

ஏன்? அங்கு வீட்டில் வேலை செய்து வந்த வேலைக்காரி அரம்பையின் வாழ்க்கையும் குழந்தையின் வளர்ச்சிக்குப் பெரிதும் உபயோகமாக இருந்தது என்பதை இந்நூலில் சித்திரித்துக் காண்பித்திருக்கிறார். குழந்தைகளை வளர்க்கும் பெற்றோர்கள் இதை முக்கியமாகக் கவனிப்பார்கள் என நம்புகிறேன். குழந்தைகள் முன்னிலையில் நாம் சொல்லும் ஒவ்வொரு வார்த்தையும் நாம் செய்யும் ஒவ்வொரு காரியமும் குழந்தை உள்ளத்தை நன்மைக்கோ, தீமைக்கோ பாதிக்கின்றன என்பதை யாரும் மறுக்க முடியாது. இது எல்லா மனோதத்துவ ஆராய்ச்சியாளர்களாலும் ஒப்புக்கொள்ளப்பட்ட உண்மை.

பள்ளிக்கூடத்திலே புத்தகம் மூலமாகப் படித்துக் கொண்டதை விட நாடகம் பார்த்ததின் மூலம் அதிகம் கற்றுக் கொண்டார் என்பதைத் தற்காலத்தில் நாம் எல்லாரும் ஊன்றிக் கவனிக்க வேண்டியது மிக அவசியம். சிரவண பித்ரு பக்தி நாடகத்தைப் பார்த்ததின் மூலம் தாய் தகப்பனார் இடத்தில் அன்பையும் பக்தியையும்; அரிச்சந்திர நாடகம் பார்த்ததின் மூலம் சத்தியத்தின் பெருமையையும் காந்தி மகாத்மா நன்கு உணர்ந்தார் என்பதை அறிகிறோம். ஆனால் இன்று நம் முன்னால் சித்திரித்துக் காட்டக் கூடிய நாடகங்களை நாம் பார்க்கும்போது இவை எவ்வளவு தூரம் நம் குழந்தைகளுடைய மன வளர்ச்சிக்கு உதவும் என்பதைப் பற்றி நாம் வியாகூலம் அடையக் கூடிய நிலையிலிருக்கிறோம். "தந்தை சொல் மிக்க மந்திரமில்லை" என்ற வாக்கியத்துக்கு இலக்காக "துஷ்ட நிக்ர சிஷ்ட பரிபாலனம்" செய்யும் வல்லமை பெற்ற வீர ராமனுக்கும் கற்புக்கரசியாம் சீதைக்கும் பதிலாக வேறு விரும்பத்தகாத முறையில் இக்காளில் நாடக மேடையில் காண்பிப்பதனாலும், பிறர் மனைவியைப் பலாத்காரமாக எடுத்துச் சென்ற ராவணனைப்

போற்றுவதற்குரிய வீரன் என்று நாடகப் பாத்திரமாக நடித்துக் காண்பிப்பதினாலும் நம்முடைய குழந்தைகள் முன்னேற்றம் அடைவார்களா என்பதைச் சமூகத்தில் உள்ள ஒவ்வொருவரும் யோசித்துப் பார்க்க வேண்டிய விஷயம்.

இன்று நம்மில் பலர் வக்கீல் தொழில் செய்கின்றோம். மகாத்மாஜியும் வக்கீலாக இருந்து வாழ்க்கை நடத்தி யிருக்கின்றார். இன்று பலர் வக்கீல் தொழிலைப் பற்றிக் குறைவாகக் கூறுகின்றனர். அது தொழிலின் குற்றமல்ல. தொழிலை நடத்துபவர்களின் குற்றமேதான் என்பதை மகாத்மாஜியின் வாழ்க்கை வலியுறுத்துகிறது என்பதை இந்நூலின் மூலம் காணலாம். பொய் என்பதைச் சொல்லாமலேயே வக்கீல் தொழிலை நடத்தவும் முடியும், அதில் வெற்றியும் காணலாம் என்பதை நிரூபித்திருக்கிறது.

மகாத்மாஜியின் தென் ஆப்பிரிக்க வாழ்க்கை பிற்காலத்திலே இந்தியாவில்,– அதாவது நம் தாய்நாட்டில்,–அவர் இயற்ற வேண்டிய பெரிய காரியங்களுக்கு ஒரு பயிற்சிச் சாலையாக அமைந்திருக்கிறது. தென் ஆப்பிரிக்காவில்தான் மகாத்மாஜி அவர்கள் ''சத்தியாக்கிரகம்'' என்னும் புது ஆயுதத்தை ஒரு சமுதாயத்தினுடைய முன்னேற்றத்துக்காகவும் அதை எதிர்த்து நின்ற தீய சக்திகளை எதிர்ப்பதற்காகவும் சரித்திரத்திலேயே முதன் முறையாக உபயோகப்படுத்தி அதிலே கடைசியாக வெற்றியும் கண்டார். இந்நூலின் முதல் பாகம் தென்னாப்பிரிக்க சத்தியாக்கிரகத்தின் வெற்றியுடன் முடிவடைகின்றது.

இந்நூலை நம் தமிழ் நாட்டுச் சிறுவர்கள் எல்லோரும் படிக்க வேண்டும். திரும்பத் திரும்பப் படிக்க வேண்டும். நம்முடைய பண்டைக் காலத்தின் அறிவும் பண்பாடும் தற்கால நாகரிகத்துக்கே அடிப்படையாகக் கொண்ட அறிவும் பண்பாடும், எல்லாம் ஒருங்கே அமைந்து கிடக்கின்றன, மகாத்மாஜியின் வாழ்க்கையில். பலாத்காரத்தில் சிக்குண்டு, அணுகுண்டு போன்ற நாச சக்திகள் பெருகிக் கொண்டிருக்கும் இத்தருணத்தில் காந்திஜியின் வாழ்க்கைதான் மனித சமுதாயத்துக்கே வழிகாட்டும் விளக்காக விளங்குகின்றது. அந்த விளக்கைக் குன்றின் மேல் ஏற்றி வைத்தது போல இந்நூலை நமக்குக் கல்கி அவர்கள் அருளியிருக்கிறார்கள். அடுத்த பாகம் விரைவில் வெளி வரும் என்று நம்புகிறேன். இந்நூலின் மூலம் கல்கி அவர்கள் தமிழ் மக்களுக்கு ஒரு அரிய சேவையைச் செய்துள்ளார்கள். அதை முழுதும் பயன்படுத்திக் கொள்ள வேண்டியது நம்முடைய கடமை.

பிரசுரம்: மங்கள நூலகம், நுங்கம்பாக்கம், சென்னை - 6. விலை: ரூ. 6—0—0.

---

# பி. ஸி. ஜி.

**க்ஷயரோகக் கிருமிகளைப் பக்குவப்படுத்திச் செய்யப்பட்ட பி. ஸி. ஜி. வாக்ஸினேஷனால் ஹானி ஏற்பட இடமிருக்கிறது என்று ராஜாஜி டி. பி. சங்கத்தாரின் ஆண்டு விழாவில் கூறினார். அதைப் பார்த்துவிட்டுக் கோயமுத்தூரிலிருந்து ஒருவர் ராஜாஜிக்குத் தமது அனுபவத்தைத் தெரிவித்திருக்கிறார். அக்கடிதத்தையும், முனிசிபல் ஸானிடரி இன்ஸ்பெக்டரின் அறிக்கையையும் கீழே கொடுத்திருக்கிறோம்.**

ஜி. எம். கிருஷ்ணராஜ் செட்டியார்,
22/886, ரங்கை கவுண்டர் தெரு,
கோயமுத்தூர்
18—5—55

என் ஆறு வயதுப் பெண் குழந்தை வஸந்தா, லண்டன் மிஷன் ஸ்கூலில் முதல் வகுப்பில் படித்துக் கொண்டிருந்தாள். அவளுக்கு 18–11–54 அன்று பி. ஸி. ஜி. குத்தப்பட்டது. இந்த வாக்ஸினேஷனுக்கு முன்பு குழந்தை நன்றாகவும், ஆரோக்கியமாகவும் இருந்தாள். நன்றாகப் படிக்கக் கூடச் செய்தாள். என் அனுமதியின்றி அதிகாரிகள் பள்ளிக்கூடத்தில் பி. ஸி. ஜி. குத்தி விட்டார்கள். அதன் காரணமாக அவள் ஜுரம் கண்டு கண் இழந்துவிட்டாள். ஸானிடரி இன்ஸ்பெக்டரும் வைத்திய அதிகாரியும் கொடுத்துள்ள விவரப் பத்திரங்களை இத்துடன் வைத்திருக்கிறேன். மேலும் இங்கு கோயமுத்தூரில் இதைப்போலப் பல குழந்தைகள் அவதியுற்று வருகின்றன. காது வலி, கடும் ஜுரம், கண்வலி ஆகிய உபாதைகள் ஏற்பட்டுப் பல குழந்தைகள் கஷ்டப்பட்டு வருகின்றன. இதற்கெல்லாம் காரணம், எனக்குத் தெரிந்தவரை பி. ஸி. ஜி. வாக்ஸினேஷன்தான்.

கிருஷ்ணராஜ்.

**டிவிஷன் ஸானிடரி இன்ஸ்பெக்டர் கொடுத்த விவரப் பத்திரத்தின் நகல்:**

குழந்தை வஸந்தா, ரங்கை கவுண்டர் தெருவிலுள்ள லண்டன் மிஷன் பள்ளிக்கூடத்தில் முதல் வகுப்பு B பிரிவிலிருந்த போது 18–11–54 அன்று பி. ஸி. ஜி. குத்தப்பட்டது.

பி. ஸி. ஜி. குத்தப்பட்ட மறுநாள்—அதாவது 19–11–54 அன்று—குழந்தைக்கு ஜுரம் வந்தது. அதே தெருவிலுள்ள டாக்டர் கந்தசாமியிடம் குழந்தையைக் கொண்டு செல்லப்பட்டது. மூன்று நாட்கள் மருந்து சாப்பிட்டாள். ஜுரம் குணமான பிறகு 3–12–54 அன்று பள்ளிக்கூடத்திலிருந்த போது அம்மை குத்தப்பட்டது.

4–12–54 இரண்டு கைகளும் இரண்டு மடங்கு வீங்கி விட்டன. ஜுரம் கண்டது. பிரக்ஞை இழந்து விட்டாள். அம்மை குத்திய ஏழாவது நாள் அதாவது 10–12–54 அன்று காலை ஜுரம் தணிந்து எழுந்திருந்தாள். ஆனால் திடீர் என்று கண் பார்வை இழந்து விட்டாள்!

கடும் ஜுரம் ஏற்பட்டு 24–12–54 அன்று ஆஸ்பத்திரியில் குழந்தைகள் வார்டு படுக்கை எண் 5339ல் சேர்க்கப்பட்டாள். குழந்தை பத்து நாட்கள் ஜன்னிக் கோளாறில், ஞாபக சக்தி முதலிய எல்லாம் இழந்து புத்தி தடுமாறியிருந்தாள். ''டி. பி. மெனன்ஜிடிஸ்'' என்று வைத்தியம் செய்யப் பட்டது. குழந்தை ஆரோக்கியமாக இருக்கிறாள்; நடமாடுகிறாள். ஆனால் கண் பார்வைதான் இல்லை!

மே
27உ முதல்
தென்னாடெங்கும்

ரேவதி புரொடக்ஷன்ஸ்

# மேதாவிகள்

டைரக்ஷன்: K. வேம்பு ஸ்டூடியோ: ரேவதி

கதை, வசனம்: பட்டு

RIGHTS CONTROLLED BY:
GAIETY PICTURES CIRCUIT, MADRAS. 2.

Elegant

**3-6-55** வெள்ளி முதல்

சென்னை

கெயிட்டி – கிரௌன் – சயானி



# அம்பத்தூர் அதிசயம்

முன் காலத்தில் எல்லாம் எதாகிலும் ஒரு ஊருக்குப் போனால் மக்கள் அந்த ஊரில் "கோவில் உண்டா!" என்று கேட்பார்கள். 'உண்டு' என்றால், "சிவன் கோவிலா, பெருமாள் கோவிலா!" என்று கேட்பார்கள். சிவன் கோவில் என்று சொன்னால் 'பாடல் பெற்ற ஸ்தலமா!' என்று கேட்பார்கள். நால்வரும் ஆழ்வார்களும் பாடிய ஸ்தலம் என்றால் அதன் மகத்துவமே தனி; பெருமையே தனி.

ஆனால் இது தொழில் யுகம். ஊருக்கு ஊர் தொழில்கள் பெருகிக் கொண்டு வருகின்றன. அதற்கேற்ப ஆலைகளும் தோன்றிக் கொண்டு வருகின்றன. ஆகவே இப்பொழுதெல்லாம் "இந்த ஊரில் விசேஷத் தொழில் என்ன நடக்கிறது! பெரிய ஆலைகள் உண்டா!" என்றுதான் யாரும் கேட்கிறார்கள்.

அப்படி யாராகிலும் அம்பத்தூர் வாசிகளைக் கேட்டால், அவர்கள் முகத்தைச் சுளித்துக் கொள்ள வேண்டிய அவசியமில்லை. மிக்க பெருமையோடு அவர்கள், "எங்கள் ஊரில் பெரிய தொழிற்சாலை இருக்கிறது! மக்களுக்கு மிக மிக அவசியமான தொழில் நடக்கிறது" என்று சொல்லிப் பெருமைப்பட்டுக் கொள்ளலாம்! ஆம், அம்பத்தூரில் டி. ஐ. சைக்கிள் தொழிற்சாலையிருக்கிறது!

'சைக்கிள்' என்று நினைத்தாலே மனசில் எத்தனை இன்ப எண்ணங்கள் எழுகின்றன! நம்மில் எத்தனையோ பேர் ஒரு சைக்கிள் இருந்து விட்டால் போதும், அகில உலகமும் சுற்றி வந்து விடலாமே என்று நினைத்திருக்கிறோம். ஊர் சுற்றிப் பார்க்க வேண்டும் என்ற உணர்ச்சி ஒரு ரேகையளவு ஒருவர் உள்ளத்தில் இருந்திருந்தாலே போதும், அவர், மேற்கண்ட விதம்தான் நினைத்திருப்பார். ஏனெனில் சைக்கிள் வாகனத்தில் வேறு எந்த வாகனத்துக்கும் இல்லாத வசதிகள் உண்டு. ஒரு தடவை ஒரு நல்ல சைக்கிளாக வாங்கிப் போட்டுவிட்டால் போதும். ஐந்தாறு ஆண்டுகளுக்கு மேற்கொண்டு காலணா செலவழிக்க வேண்டாம். பெட்ரோல் வாங்க வேண்டுமே என்ற அன்றாடக் கவலையோ, வைக்கோல் வாங்க வேண்டுமே என்ற தொல்லையோ கிடையாது. எல்லாவற்றையும் விட அதை எப்பொழுதும் நம்முடன் கூடவே வைத்திருக்கலாம். அதை எங்கே வைப்பது என்ற கவலையே பட வேண்டியதில்லை! பகல் வேளை மட்டுமல்ல, ராத்திரி வேளையில் கூட, நன்றாகப் போடப்பட்ட சாலைகளில் மட்டுமல்ல, ஒற்றையடிப் பாதைகளில் கூட, ஜனநெருக்கடி இல்லாத இடத்தில் மட்டுமல்ல, ஜன நெருக்கடியான இடங்களில் கூட வெகு அலட்சியமாகச் செல்லக் கூடியது சைக்கிள் வண்டிதானே! இப்படித் தொண்டனுக்கும் தொண்டனாக விளங்கும் சைக்கிள் பார்ப்பதற்கு எவ்வளவு எளிய சாதனம் போல் தோன்றுகிறது. 'என்ன ஒரு முக்கோண வடிவமுள்ள இரும்புச் சட்டம், இரண்டு சக்கரங்கள், ஒரு சீட் இருந்தால் சைக்கிள்' என்று சொல்லத் தோன்றுகிறது அல்லவா! ஆனால் உண்மையில் அப்படியல்ல என்பது அன்று டி. ஐ. சைக்கிள் தொழிற்சாலைக்குப் போனபோது தெரிந்தது! எவ்வளவு பெரிய தொழிற்சாலை, எத்தனை












எத்தனை இயந்திரங்கள்! அதைப் பார்த்த போது எனக்குத் திணறிப் போய் விட்டது. பிரமிப்பினுல் மூச்சே நின்று விட்டது! பிறகு சற்று நேரம் பொறுத்துச் சமாளித்துக்கொண்டேன் என்று வைத்துக் கொள்ளுங்களேன்!

மகாத்மா காந்தியின் ஆதாரக் கல்வியின் அடிப்படைத்தத்துவம் அன்று என்னுள் வேலை செய்ததைப் பார்த்தேன். இந்தச் சைக்கிள் தொழிற்சாலையைப் பார்த்து விட்டு வந்த அன்று முதல் சைக்கிள் எப்படித் தோன்றலாயிற்று என்று சைக்கிளின் சரித்திரத்தையே தெரிந்து கொள்ள வேண்டுமென்ற ஆர்வம் ஏற்பட்டது! முதன் முதலில் மிதிக்கிற சாதனமின்றி, பாதங்கள் பூமியில் மிதித்து உந்தி உந்திச் செல்லும் சாதனமாக இருந்தது சைக்கிள். இப்பொழுது எப்படி யெல்லாம் மாறி, எவ்வளவு நேர்த்தியான சாதனமாகி விட்டது! இதைப் பற்றிய விவரங்களைக் கீழேயுள்ள படத்தில் காணலாம்.

இந்த நேர்த்தியான சாதனம், நமக்கு இதுகாறும் மேல் நாட்டிலிருந்துதான் வந்து கொண்டிருந்தது! வருஷத்தில் கோடிக் கணக்கான சைக்கிள்கள் மேல் நாட்டிலிருந்து இறக்குமதியாகி வந்தன. ஆனல் இப்பொழுது சென்னை நகருக்கு அருகிலுள்ள அம்பத்தூரில் சைக்கிள்கள் உற்பத்தி செய்யும் பெரிய தொழிற்சாலை ஏற்பட்டு விட்டது. மூன்று ஆண்டுகளாக இத்தொழிற்சாலை நமக்கு சைக்கிள்கள் உற்பத்திசெய்து கொடுத்து வருகிறது.

பொது மக்களுக்கு, அதிலும் நடுத்தர வகுப்பினருக்கு அத்தியாவசியமான சைக்கிளை நம் தமிழ் நாட்டிலேயே உற்பத்தி செய்ய வேண்டுமென்ற எண்ணம் திவான் பகதூர் ஏ. எம். முருகப்ப செட்டியார் உள்ளத்தில் தான் முதலில் உதித்தது. அவருக்கு இக்காரியத்தில் பக்கபலமாக நின்று உதவியவர் ஸர் ஏ. ராமசாமி முதலியார் அவர்கள். இங்கிலாந்தில் 'ஹெர்குலஸ்' கம்பெனிதான் உலகத்துக்குப் பெருவாரியான உறுதியான சைக்கிள்களை உற்பத்தி செய்து தருகின்றது. இந்தக் கம்பெனியின் மானேஜிங் டைரக்டரான திரு சேம்பர்லேன் அவர்கள் உதவியையும், சைக்கிளுக்கு முக்கிய உறுப்பான இரும்புக் குழல்கள் தயாரிக்கும் பெரிய கம்பெனியான 'ட்யூப் இன்வெஸ்ட்மெண்ட் கம்பெனி'யின் மானேஜிங் டைரக்டரான ஸர் ஐவான் ஸ்டெடி போர்டு அவர்கள் உதவியையும் பெற முடிந்தது.

இவர்களுடன் திரு ஏ. எம். எம். முருகப்பச் செட்டியார் அவர்களும், அவர் சகோதரர் திரு ஏ. எம். அருணசலம் செட்டியார் அவர்களும் இத் தொழிற்சாலையை ஆரம்பிக்க ஆர்வம் காண்பித்தனர். இவர்களையெல்லாம் டைரக்டர்களாகக் கொண்டு தொழிற்சாலை ஆரம்பிக்கப் பட்டது.

ஆம், 1949-ம் ஆண்டு சுமார் 70 லக்ஷ ரூபாய் மூலதனத்துடன் இந்தத் தொழிற்சாலையை பிரிட்டிஷ் பொருள், தொழில் முதலிய உதவிகளுடனும் சென்னையில் தொடங்கப் பாரத சர்க்கார் அனுமதித்தது.

சென்னையிலிருந்து பத்து மைல் தூரத்திலுள்ள அம்பத்தூரில் ஐம்பது ஏக்கர் விஸ்தீரணமுள்ள இடத்தில் இத்தொழிற்சாலையை அமைக்கத் தீர்மானிக்கப்பட்டது. தீர்மானித்த இரண்டு ஆண்டுகளிலேயே தொழிற்சாலையைக் கட்டி முடித்தாகி விட்டது. 1951-ம் ஆண்டில் திறக்கப்பட்டது.

அப்பொழுது சென்னை கவர்னராக இருந்த ஸ்ரீ பவநகர் மகாராஜா இத் தொழிற்சாலையை 51ம் ஆண்டு செப்டம்பர் மாதம் ஆரம்பித்து வைத்தார். அதன்பயனக 1952-ம் ஆண்டு ஜனவரியிலிருந்தே இத்தொழிற்சாலையில் செய்யப்பட்ட சைக்கிள்கள் "ஹெர்குலஸ் இந்தியா" என்ற நாமகரணத்துடன் மார்க்கெட்டில் விற்









பணைக்கு வந்து விட்டன. எவ்வளவு வேகமாகத் தொழில் பெருகி யிருக்கிறது பார்த்தீர்களா!

இப்பொழுது சற்று இத் தொழிற்சாலைக்குள் நுழைந்து பார்ப்போம்!

சமுத்திரத்தையே பார்க்காதவனுக்கு, சமுத்திரத்தைப்பற்றி எவ்வளவு விளக்கினாலும் அதன் பிரம்மாண்டமான தன்மையும், அலைகளின் அட்டகாசமும், எழும்பும் பேரொலியும் மனத்தில் பிடிபடுவதில்லை. நேரில் பார்த்த பிறகுதான் கேட்ட வர்ணனைகள் எல்லாம் உண்மைக்கு அருகில்கூட வர முடியாது என்று தெரியவருகிறது! அப்படித்தான் இருக்கும் இம்மாபெரும் தொழிற்சாலையின் வேலைகளை வார்த்தைகளால் சொல்ல முயல்வதும்; இருப்பினும் சற்று என்னுடன் வாருங்கள்.

ஸ்ரீ ஏ. ராமசாமி முதலியார்

சைக்கிளுக்கு முக்கியமாக வேண்டியது எஃகினால் செய்யப்பட்ட இரும்புக் குழல்கள். இவை நம் நாட்டில் இன்னும் செய்ய ஆரம்பிக்க வில்லை. எஃகு உற்பத்திச் சாலை ஒன்று டாட்டா நகரில் இருக்கிறது. அது போதிய அளவு எஃகு நமக்குத் தரவில்லை. ஆகவே பெரிய எஃகு உற்பத்திச் சாலைகள் ஏற்படுத்த பிரிட்டிஷ் சர்க்காரும் ருஷ்ய சர்க்காரும் நம் சர்க்காருடன் பேச்சு வார்த்தைகள் நடத்தி வருகின்றன. அவற்றின் பயனாகக் கூடிய விரைவில் உற்பத்திச் சாலை ஏற்பட்டு விடும் என்று எதிர்பார்க்க இடமிருக்கிறது. அப்பொழுது நம் நாட்டிலே சைக்கிளுக்கு வேண்டிய மிக உறுதியான எஃகுக் குழாய்கள் செய்யப்படலாம். அதுவரை பிரிட்டனிலிருந்து தான் அந்த இரும்புக் குழாய்களை வாங்கிக் கொள்ள வேண்டும்.

பிரிட்டனி லுள்ள ட்யூப் இன்வெஸ்ட்மெண்டு கம்பெனியார் மிகச் சிறந்த எஃகுக் குழாய்கள் செய்கிறார்கள் என்று புகழ் பெற்றிருக்கிறார்கள். அவர்கள்தான் இங்கிலாந்திலுள்ள "ஹெர்குலஸ்" சைக்கிள் தொழிற்சாலைக்கும் குழாய்கள் வழங்குகிறார்கள். அவர்களிடமிருந்துதான் அம்பத்தூர் டி. ஐ. சைக்கிள் கம்பெனிக்கும் குழாய்கள் வருகின்றன.

அரை அங்குலம், முதல் ஒன்றே கால் அங்குலம் வரை விட்டமுள்ள பல ரக குழாய்கள் வருகின்றன. இக் குழாய்களை அளவுக்குத் தகுந்தபடி வெட்டி, பொருத்தினால் சைக்கிள் ஆகிவிடும்! அடாடா! எவ்வளவு சுலபமாக இருக்கிறது பார்த்தீர்களா! ஆனால் அங்கே போனால் எவ்வளவு வேலைகள் இருக்கின்றன ஒரு சைக்கிள் உருவாவதற்கு என்பது தெரியவரும். சொல்வது எவ்வளவு எளிது; செய்வது எவ்வளவு கடினம் என்பதும் புரியும்!

ஸ்ரீ ஐவான் ஸ்டெடிபோர்ட்

உங்களுக்குச் சொன்னால் நம்பிக்கை ஏற்படாது! ஆனாலும் நம்பித்தான் ஆக வேண்டும்—ஒரு சைக்கிளின் உறுப்புக்கள் 1400-க்கு மேல் இருக்கின்றன! இத்தனையும் செய்து ஆகவேண்டும்; பொருத்தியாக வேண்டும்.

சைக்கிளின் முன் சக்கரத்தை இரண்டு புறமும் இரு இரும்புச் சப்பைக் குழாய்கள் அழுத்திப் பிடித்திருக்கின்றன. அவை கொஞ்சம் வளைந்தாற்போல் காணப்படுகின்றன. அவை கைப்பிடியுடன் இணைகின்றன. இதற்கு 'போர்க்கு' என்று சொல்லுகிறார்கள்.

சாதாரணமாக உருண்டையாக உள்ள குழலை ஒரு யந்திரம் தகுந்த அளவு அழுத்தம் கொடுத்துச் சப்பை யாக்குகிறது. இன்னொரு யந்திரம் பிறைச் சந்திரனைவிடக் குறைந்த அளவுக்கு வளைத்து விடுகிறது. மற்றொரு யந்திரம் காது பண்ணி விடுகிறது. இப்படி ஒவ்வொரு சிறு சிறு காரியத்துக்கும் ஒவ்வொரு யந்திரம் இருக்கிறது. அந்த யந்திரத்தின் அருகில் நின்று வேலை பார்க்க ஒரு தொழிலாளி இருக்கிறார். இப்படி எத்தனை இயந்திரங்கள்!

* * *

முக்கோண வடிவமான சைக்கிள் பிரேம் பொருத்திய பிறகு எப்படிக் கழலாமல் உறுதியாக நிற்கச் செய்கிறார்கள்! இரும்பாயிற்றே! இதை எப்படி ஒட்ட வைக்கிறார்கள் என்ற கேள்வி எழுகிறதல்லவா! சட்டத்தைப் பித்தளை உருக்கில் தோய்த்து எடுத்து விடுகிறார்கள். அது உறுதியாகப் பற்றிக் கொண்டு விடுகிறது.

ஆனால் சைக்கிளின் போர்க்குப் பகுதியிலும், கைப்பிடி பகுதியிலும் பித்தளைத் தூளை உருக்கி ஊற்றி உறுதியான பிணைப்பை உண்டாக்கி விடுகிறார்கள். 'உருக்கி ஊற்றி' என்றால் ஏதோ ஒரு பக்கெட்டு நிறையப் பித்தளையை உருக்கிய குழம்பிருக்கும், அதை ஒரு குழாய்க்கும் மற்றொரு குழாய்க்கும் இடை வெளியில் ஊற்றுவார்களோ என்று எண்ணலாம். அது தான் இல்லை. சைக்கிள் குழாய்களைப் பொருத்தும் போதே அவைகளுக்குள் பித்தளைத் தூளைப் போட்டு விடுவார்கள். பிறகு அதை அக்னி சுவாலை வீசும் தணலில் ஒரு கணம் வைப்பார்கள். அவ்வளவுதான்; அந்தப் பித்தளை உருகி, இடைவெளியுள்ள இடமெல்லாம் பரவிப் பாய்ந்து இரண்டு இரும்புக் குழல்களையும் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு விடுகின்றன! அந்த நெருப்புத் தணலில் போட்டு வெளி



ஸ்ரீ ஏ. எம். எம். முருகப்ப செட்டியார்

யில் எடுக்கப்பட்ட பிரேமைப் பார்த்திர்களானால் செக்கச் செவேர் என்று அருணோதயமானது மாதிரி தோற்றும்.

பொதுவாக சைக்கிள் முக்கோண வடிவமான 'பிரேம்' அல்லது சட்டம் கொண்டிருப்பதைப் பார்க்கிறோம். ஆனால் உண்மையில் சைக்கிள் நான்கு கோணங்கள் பெற்றிருக்கின்றன என்பது சற்று கூர்ந்து கவனித்தால் தெரியும். ஆனால் சில சைக்கிள்கள் ஒன்றன் கீழ் ஒன்று என இரண்டு குறுக்குக் குழல்கள் பெற்றிருக்கும். பெண்கள் விடும் லேடீஸ் சைக்கிளில் குறுக்குக் குழல் வளைந்திருப்பதைப் பார்க்கிறோம். இப்படி ஐந்து வகை பிரேம்கள் இங்கு செய்யப் படுகின்றன.

சைக்கிளின் மூலாதாரமான வடிவம்—எலும்புக்கூடு—ஏற்பட்ட பிறகு, அந்த இரும்புக் குழலில் படிந்துள்ள துரு, அழுக்குகள் முதலியவற்றை நீக்க வேண்டுமல்லவா! அதற்கு என்ன செய்கிறார்கள் என்பதைப் பார்க்கச் சுவாரஸ்யமாக இருக்கும்!

வைரத்தை வெட்ட வைரமே வேண்டும் என்பது போல் இந்த இரும்பைச் சுத்தம் செய்ய இரும்புத் துகள்களையே உபயோகிக்கிறார்கள். எப்படி! ஐந்தடி உயரத்தில் ஒரு பெரிய தண்ணீர்த் தொட்டி மாதிரி பெரிய இரும்புப் பெட்டிகள் இருக்கின்றன. அதற்குள் இந்த சைக்கிள்களின் இரும்புச் சட்டங்கள் போடப்பட்டு விடுகின்றன. பிறகு ஒரு சிறு துவாரம் மூலம் ஒரு ரப்பர் குழாய் வழியாக இரும்புத் துகள்களைக் காற்றோடு கலந்து வேகமாகச் செலுத்துகிறார்கள். அப்படிப் பறந்து பாயும் இரும்புத் துகள்கள் சைக்கிளின் மேலுள்ள துரு முதலிய அழுக்குகளை நீக்கி விடுகின்றன.

இப்படிச் செய்தும் மிச்சம் மீதியுள்ள அழுக்கைக் கத்தி தீட்டுவதுபோல் சாணைக் கல்லில் கொடுத்துச் சுத்தம் செய்து விடுகிறார்கள். இப்படிச் சுத்தம் செய்யப்பட்ட இரும்புச் சட்டங்கள் சில திராவகங்களில் தோய்த்து எடுக்கப்படுகின்றன. அதன்பயனாக இந்த இரும்புச் சட்டங்களில் மீண்டும் துருப் பிடிப்பதே இல்லை. இப்படிப் பரிபூரணமாகச் சுத்தம் செய்யப்பட்ட எஃகு பிரேமில்தான் எனாமல் நன்றாக ஒட்டும்.

நாம் பச்சை வர்ண சைக்கிள்களைப் பார்த்திருக்கிறோம்; கண்ணைப் பறிக்கும் கறுப்பு வர்ணச் சைக்கிள்களைப் பார்த்திருக்கிறோம்.

இந்தக் கறுப்பும் பச்சை வர்ணமும் எப்படிப் பூசுகிறார்கள் என்பது வியப்பு அளிக்கும் விஷயம்! சைக்கிளுக்குப் பச்சையும் கறுப்பும் பூசப்படுவதில்லை.

கறுப்பு எனாமல் தொட்டியுள் அதைத் தோய்த்து எடுக்கிறார்கள்! ஒரு தரம் அல்ல—மூன்று முறை!

ஒவ்வொரு முறையும் முக்கியவுடன் அது காய வேண்டும். அதற்காக 450 டிகிரி உஷ்ணமுள்ள ஒரு அறைக்குள் முக்கியெடுத்த பிரேம்கள் மூன்று முறை செலுத்தப்படுகின்றன. இந்த எனாமல் பூச்சுக் கொடுக்கும் இடம் சீதோஷ்ண ஸ்திதியைக் கட்டுப் படுத்தும் குளிர் மிஷின் கொண்டதாக இருக்கிறது. பச்சை வர்ணம் மட்டும், சைக்கிள் சட்டத்தின் மீது தூவானம் வீசுவதுபோல் வீசிப் பூசப்படுகிறது.

இப்படிப் பச்சை வர்ணம், கறுப்பு வர்ணம் பெற்ற பிரேம்களில் தங்கக் கோடு, சிவப்புக் கோடு போடுவது முதலிய அழகு வேலைப்பாடுகள் செய்யப்படுகின்றன. ஒட்டுப்பொம்மை ஒட்டுவது போல் 'ஹெர்குலஸ்' வர்ணப் படமும் கம்பெனி பெயரும் பிரேமில் ஒட்டப்படுகின்றன. இவை யாவும் மிக நுட்பமும் துரிதமும் கொண்ட வேலைகள்.

நீங்கள் சைக்கிள் கறுப்பாக இருந்தாலும் அதன் கைப்பிடி வெள்ளிபோல் மின்னுவதைப் பார்த்திருப்பீர்கள்! மின்னுவதெல்லாம் வெள்ளியல்ல என்பதும் உங்களுக்குத் தெரியும். அதனால் நிக்கலாக இருக்கும் என்று நம்பியிருப்பீர்கள். ஆனால் அது நிக்கல்கூட அல்ல, எஃகுதான். இருபத்தொன்பது அங்குல நீளமுள்ள இரும்புக் குழாய் நான்கு வளைவுகளும் நான்கு துவாரங்களும் பல யந்திரங்களில் பெறுகின்றன! பிறகு அதற்கும், அதைப் போன்ற இன்னும் சில்லறை உறுப்புகளுக்கும் 'நிக்கல் பிளேட்டிங்' கொடுக்கிறார்கள். அதுமட்டுமல்ல, அதற்கு மேல் குரோமிய பிளேட்டிங் கூடக் கொடுக்கிறார்கள். குரோமிய மூலாம் பெற்றவைதான் அப்படி வெள்ளி போல் மின்னுகின்றன.

இந்த யந்திர சாதனமும் பார்க்க வேண்டியதொன்றாகும். சாதாரண இரும்பு இப்படி வெள்ளிபோல் மின்னப் பல திராவகங்களில் தோய்த்து எடுக்கவேண்டியிருக்கிறது. அவை சில திராவகங்களில் மணிக்கணக்காக ஊற வேண்டியிருக்கின்றன. இவையெல்லாம் தலைக்கு மேல் தோரணம் கட்டி விட்டாற் போல் சுற்றிச் சுற்றி, தோய்ந்து தோய்ந்து வெளிப்படுகின்றன. இந்தத் தோரணத்தின் அழகைப் பார்த்துக் கொண்டிருக்கும்போதே "அடுத்த தொழிற் கூடத்துக்குப் போவோமா!" என்றார் எனக்குத் தொழிற்சாலையைக் காண்பித்துக் கொண்டிருந்த நண்பர்.

உடனே நான், "ஓ, போவோமே!" என்றேன்.

(அடுத்த இதழில் முடியும்)



ஸ்ரீ ஏ. எம். எம். அருணாசலம்



# ஆற்றங் கரையினிலே

பேராசிரியர் ரா.பி. சேதுப்பிள்ளை

## 20. திருவதிகை

கெடில நதியின் வடகரையில் திருவதிகை என்னும் பெயருடைய பெருமை சான்ற பழம்பதி ஒன்றுண்டு. அற்றார்க்கும் அலந்தார்க்கும் அருள் புரியும் திருவதிகைப் பெருமான் அமர்ந்த ஆலயத்தில் திருத் தொண்டு செய்ய ஆசைப்பட்டார் திலகவதியார். அப்பதியிலுள்ள ஒரு திருமடத்தைத் தம் இருப்பிடமாகக் கொண்டார்; சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்; நித்தலும் பொழுது புலர்வதன் முன்னே திருக் கோயிலிற் போந்து அலகிட்டு மெழுக்கிட்டு அரும்பணி செய்தார்; பூமாலை புனைந்து ஈசனுக்கு அணிந்தார். பண்ணோடு இசைபாடிக் கண்ணீர் உகுத்தார்; வற்றிய மேனியராய் நற்றவம் புரிந்தார்.

இவ்வாறு தவநெறியை மேற்கொண்டு திலகவதியார் வாழ்ந்து வருகையில் மாசறக் கற்ற மருள் நீக்கியார் சிவ நெறி துறந்து சமணர் ஆயினார் என்று கேள்வியுற்றார். நஞ்சு தோய்ந்த அம்பு போல் அச் செய்தி அவர் நெஞ்சத்தில் பாய்ந்தது. 'இச் சொல்லைக் கேட்பதற்கோ ஏழையேன் இதுவரை உயிர் தாங்கி நின்றேன்' என்று ஏங்கினார். செந்நெறியாகிய சிவநெறியை விட்டு மற்றொரு நெறியில் மருள் நீக்கியாரது மனம் எவ்வாறு கவிழ்ந்ததோ என்று மயங்கினார். அருமருந்தாகிய திருநீற்றை மறக்கவும் அவர் மனம் இசைந்ததோ என்று மறுக்கமுற்றார். திருவதிகைப் பெருமானிடம் தமது குறையை முறையிட்டுக் கண்ணீர் பெருக்கினார்.

பாடலிபுத்திரப் பள்ளியில் தன் நிகரில்லாத் தலைவராய் விளங்கிய தருமசேனருக்குக் கடுமையான நோய் வந்துற்றது. சூலை நோய் என்று மருத்துவர் சொல்லிய அத்தீப்பிணி அவரை வாட்டி வருத்தியது; அதனை மாற்றுவதற்கு மருத்துவர்கள் கொடுத்த மருந்தெல்லாம் பயனற்றுப் போயிற்று. "பொல்லாத சூலை நோய் தீருமாறு இல்லை" என்று எல்லோரும் கைவிட்டார்.

அந்நிலையில் தமக்கையாரைக் காண வேண்டும் என்ற விருப்பம் தம்பியார் உள்ளத்தில் எழுந்தது. அவரிடம் ஒரு பணியாளனை அனுப்பினார். அவன் திருவதிகையிற் சென்று திலகவதியாரிடம் தம்பியின் நிலைமையைத் தெரிவித்தான்.

"கொல்லாத சூலைநோய்
 குடர்முடக்கித் தீராமல்
எல்லாரும் கை விட்டார்
 இதுசெயல் என் முன்பிறந்த
நல்லாள்பால் சென்று இயம்பி
 நான்உய்யும் படிகேட்டு இங்கு
அல்லாகும் பொழுது அணைவாய்
 என்றார் என்று அறிவித்தான்"

அல்—இரவு

தம்பியின் நிலையறிந்து தளர்ந்தாரேனும் பாடலிபுரம் செல்ல இசைந்தார் அல்லர் திலகவதியார்.

தமக்கையார் கருத்தை அறிந்த தருமசேனர் பொல்லாத வயிற்று நோயைப் பொறுத்துக் கொண்டு வழி நடந்து திலகவதியார் இருந்த திருமடத்தைச் சென்றடைந்தார். பல்லாண்டுகளாகக் காணப் பெறாத தமக்கையின் தவக் கோலத்தைக் கண்டு மனம் உருகினார்; அவர் தாள்களில் விழுந்து வணங்கினார்.

கடும்பிணியால் நலிந்து கதறிய தம்பியைக் கண்டபோது திலகவதியார் மனம் குழைந்து ஈசனது மறக் கருணையை நினைந்து மனமார வாழ்த்தினார். தீரா நோய் தீர்க்க வல்ல திருநீற்றை மறைமொழி ஓதிக் கொடுத்தார். திலகவதியாரே கண்கண்ட தெய்வம் என்று கருதிய தம்பியார் அத் திருநீற்றைப் பணிந்து ஏற்றுப் பண்புற அணிந்தார்.

மனம் திரும்பிய தம்பியை அழைத்துக் கொண்டு திருக்கோயிலை அடைந்தார் திலகவதியார். அங்கு திரு அதிகைப் பெருமானைக் கண்டபோது இருவர் உள்ளமும் அனலிடைப் பட்ட மெழுகுபோல் உருகிற்று; கண்ணீர் ஆறாகப் பெருகிற்று. தமிழ்ப் பாட்டுக்கு இரங்கும் ஈசனார் முன்னின்று தம் குறையை முறையிட்டார் தம்பியார்.

**" கூற்றாயின வாறு விலக்ககிலீர்**
**கொடுமைபல செய்தன நான் அறியேன்**
**ஏற்றாயடிக்கே இரவும் பகலும்**
**பிரியாது வணங்குவன் எப்பொழுதும்**
**தோற்றாதென் வயிற்றின் அகம்படியே**
**குடரோடு துடக்கி முடக்கியிட**
**ஆற்றேன் அடியேன் அதிகைக் கெடில**
**வீரட்டா னத்துறை அம்மானே "**

என்று தம் ஆற்றாமையை அறிவித்தார். " அப்பனே! அதிகையில் அமர்ந்தருளும் ஐயனே! அடியேன் கொடுமை யொன்றும் செய்தறியேன்; நெஞ்சில் வஞ்சகம் நினைத்தறியேன்; எந்நாளும் உம்மை மறந்தறியேன்; கொல்லாமல் கொல்கின்ற கொடிய நோயைத் தீர்த்தருளவேண்டும். சுடுகின்ற சூலையைத் தவிர்த்தருள வேண்டும். வயிற்றோடு துடக்கி முடக்கி வருத்தும் வன்பிணியைத் துடைத்தருள வேண்டும். அஞ்சேல் என்று அருள் புரிவீர் செஞ்சடைக் கடவுளே " என்று இறைஞ்சினார்.

இறைவன் அருள் கூர்ந்தான். பொல்லாத சூலை நோய் அந் நல்லாரை விட்டு

ஒழிந்தது. அந் நோய் தீர்வதற்கு அவர் இசைத்த தமிழ்ப் பாட்டின் அருமையறிந்தது தமிழகம். திருநாவுக்கரசர் என்றும் வாகீசர் என்றும் அவரைப் போற்றிப் புகழ்ந்தது. அன்று முதல் சிவத்தொண்டு செய்யத் தலைப்பட்டார் திருநாவுக்கரசர்.

திருத்தொண்டராகிய நாவுக்கரசர் நாள் தோறும் நல்ல தமிழ்ப் பாட்டிசைத்து நாட்டு மக்களின் உள்ளம் கவர்ந்தது கண்டு கவலையுற்றனர் சமணர். சமண சமயத்தைத் தழுவி நின்ற பல்லவ மன்னனிடம் சென்று தருமசேனரது மதமாற்றத்தால் நேர்ந்த மானக்கேட்டை எடுத்துரைத்தார். சமண நெறியில் சாலச் சிறந்த பற்றுடையவனாகிய பல்லவன் பெருஞ் சீற்றம் உற்றான். தவறு செய்த தருமசேனரைத் தக்கவாறு ஒறுக்கத் துணிந்தான். அமைச்சரையும் படைத் தலைவரையும் அழைத்தான். 'திருவதிகையில் சிவப்பணி செய்து கொண்டிருக்கும் திருநாவுக்கரசரை இப்பொழுதேகொண்டு வருக' என்று ஆணை பிறப்பித்தான்.

மன்னவன் இட்ட பணியை மேற்கொண்டு படைக்கலம் தாங்கிய சேனையோடு தானைத் தலைவரும் அமைச்சரும் திருவதிகையிற் போந்து திருநாவுக்கரசைக் கண்டார்கள்; மன்னன் ஆணையைத் தெரிவித்தார்கள். வேற்படை தாங்கிய வீரர் பலர் தம்மைச் சூழ்ந்து நின்றதை நோக்கினார் நாவுக்கரசர். பல்லவ மன்னனது படைச் செருக்கைக் கண்டு இறையளவும் அஞ்சினாரல்லர். பல்லுயிரும் பலவுலகும் படைத்தளிக்கும் இறைவனுக்கு ஆட்பட்ட அடியாரைப் பல்லவன் ஆணை என்ன செய்யும் என்று எண்ணி மனத் திண்மை கொண்டார். அந் நிலையில் எழுந்தது ஒரு வீரப் பாடல்.

"நாம் ஆர்க்கும் குடியல்லோம்
நமனை அஞ்சோம் நரகத்தில்
இடர்ப்படோம்
நடலை இல்லோம்
ஏமாப்போம் பிணி அறியோம்
பணிவோம் அல்லோம் இன்பமே
எந்நாளும் துன்பம் இல்லை
தாம் ஆர்க்கும் குடியல்லாத்
தன்மையான சங்கரன் நற்
சங்கவெண் குழையோர் காதிற்
கோமாற்கே நாம் என்றும்
மீளா ஆளாய்க் கொய்ம்மலர்ச் சேவடி
இணையே குறுகினோமே"

நடலை—துன்பம், ஆளாய்-அடிமையாய். என்று பாடினார். திருநாவுக்கரசரது உயர்ந்த குறிக்கோளை அறிந்து அவரருகே செல்லத் தயங்கி நின்றார் தானைத் தலைவரும் அமைச்சரும். அந் நிலையில் மன்னவன் ஆணையை நிறைவேற்றும் கடப்பாடுடைய மாந்தர்க்கு யாதும் தீங்கு வரலாகாது என்று கருதிய நாவரசர் அவருடன் செல்ல இசைந்து எழுந்தார். பல்லவன் முன்னே நின்றார்.

"இடையறுப் பேரன்பும் மழைவாரும்
இணைவிழியும் உழவாரத்தின்
படையறுத் திருக்கரமும் சிவபெருமான்
திருவடிக்கே பதித்த நெஞ்சும்
நடையறுப் பெருந்துறவும் வாகீசப்
பெருந்தகைதன் ஞானப் பாடல்
தொடையறுச் செவ்வாயும்
சிவ வேடப் பொலிவழகும்"

கண்டான் பல்லவ மன்னன்.

## டி.கே.சி.யின் கடிதங்கள்

திருக்குற்றாலம்
27—4—45

நல்ல அமைப்பாய் ஒரு கவி (பாடல்) கிடைத்து விட்டால் அந்த ஒரு கவிக்காகவே ஒரு நிலையம் கட்டலாம். அந்த நிலையத்துக்கு யாத்திரை போய்க் கொண்டிருக்கலாம். இது ஏதோ பொருளற்ற படாடோபம் என்று தற்காலத்துப் படாடோபிகள் சொல்லிக் கொண்டிருக்கலாம். ஆனால் ஒரு கவி - உண்மையான கவி - நம்முடைய வாழ்க்கையை எப்படி ஒளி பெறச் செய்யும் என்பதை நம்முடைய Bachellor of Arts-கள், உணர்வார்களானால் நான் சொல்லுகிற சொல் பயனில் சொல் (Cant) அல்ல என்று சொல்லுவார்கள்.

நாடுதும் வா நெஞ்சே!
நாரா யணன்பதிகள் ;—
கூடுதும்வா மெய்யடியார்
கூட்டங்கள் ;—கூடுதும்வா
வீதியெங்கும் கார்அகிலின்
வீசுபுகை வாசம்எழும்
ஆதியிந்த ளூரான் அடி

இந்த ஒரு பாடலுக்காக இந்தளூருக்கு, (மாயவரத்துக்கு வடக்கே மூன்றுமைலில்) யாத்திரை போகலாம் அல்லவா?

இங்ஙனம்
டி. கே. சிதம்பரநாதன்

அதிகமான மைல்களுக்கும்





கூடுதலான பாதுகாப்புக்கும்



எப்போதுமே வற்புறுத்தி
கேட்க வேண்டியது

# Firestone

## பயர்ஸ்டோன்

### கம்-டிப்பிடு

**டயர்கள்**

C. 47



# போலீஸ் சின்னதுரை

துரோணன்

போலீஸ் சின்னதுரையின் நெஞ்சு பீதியுடன் படைபடைத்துக் கொண்டிருந்தது. அந்த நாற்சந்தியின் நடுவில்—'லெவன் நாட் நீ' சின்னதுரை,— தன்னந் தனியனாக நின்றான். 'டிராபிக்' நிலவரத்தை அவனால் சமாளிக்க முடியவில்லை. எப்பொழுதுமே அந்தப் பிரதேசம் அதிக நடமாட்டமுள்ளது தான். அதிலும், பொங்கல் பண்டிகை யென்றால் போக்குவரவுகளுக்குக் குறைச்சல் ஏது!

அவனது பின்புறத்தில், அரிசி மூட்டைகளுடன் வந்து கொண்டிருந்த லாரி இடைவிடாமல் அலறிக் கொண்டிருந்தது. எதிர்த்திசையிலும் பக்கங்களிலுமாக மூன்று பிளஷர் கார்களின் சப்தங்கள் ஊளையிடுவது போன்றிருந்தன. அதைத் தொடர்ந்து, பட்டிக்காட்டுக் கரும்பு வண்டிகளில் இரண்டும், தெருவின் முழுத் தோற்றத்தையும் மறைத்தபடி வந்து கொண்டிருந்த வைக்கோல் வண்டியும், சின்னதுரையின் மூளைக்குக் கடுமையான வேலையைக் கொடுத்தன. இவ்வளவுக்கும் நடுவில், நாழிக்கொரு நடையுடன் தெருவைக் கடந்து கொண்டிருந்த ஒரு நொண்டிப் பிச்சைக்காரன் வேறு!— இத்தகைய நிலைமைகள் யாவற்றையும் அவன் கணப்பொழுதுக்குள்ளாகவே சமாளித்தாக வேண்டும். அவனது மேலதிகாரியான 'டிராபிக் இன்ஸ்பெக்டர்' வேறு மோட்டார் சைக்கிளில் அடிக்கடி ரோந்து வந்தவண்ணமிருந்தார்.

சின்னதுரையின் விழிகள் தத்தளித்தன. ஊதுகுழலை விடாமல் ஊதியபடியே, இடது கையிலிருந்த அபாய அறிவிப்புப் பலகையை மூன்று புறங்களிலும் காட்டிச் சைகை செய்தான். மற்றொரு கையினால் தன் சமீபமாகச் சென்று கொண்டிருந்த பிச்சைக்காரனை நெட்டித் தள்ளினான். அடுத்த கணம் பிச்சைக்காரன் உளறிய வண்ணம் தெருவின் ஓரத்தையடைந்து விட்டான். பக்கத்துப் புறங்களிலிருந்த கார்களும் வண்டிகளும், தெய்வாதீனமாகவே எவ்வித ஆபத்துக்களையும் நிகழ்த்தாமல் கடந்து விட்டன. ஆனால், எதிர்பாராத ஒரு புது சம்பவம் நிகழ்ந்தது!

இடுப்பில் கூடையுடன், வேடிக்கை பார்த்த வண்ணம் வந்து கொண்டிருந்த இளம் பெண்ணின் நிலை சற்று வேடிக்கையான காட்சியாகவே முடிந்தது! சின்னதுரையின் கை வீச்சினால், அவளது இடுப்பிலிருந்த கூடை அந்தரத்தில் பறந்து, அதிலிருந்த உருளைக் கிழங்குகளும் சில்லறை நாணயங்களும் நாலா புறங்களிலும் சிதறின. அவள் 'ஓ'வென்று கூச்சலிட்டபடியே சாலையின் ஓரத்துக்குச் சென்று விட்டான். ஆனால், கீழே சிதறுண்ட கிழங்குகளெல்லாம் வண்டி, கார்களின் சக்கரங்களுக்கும், சாலையோரத்துச் சாக்கடைகளுக்கும் இரையாகி விட்டன! இரண்டொரு பாட்டைசாரிகளோ, சற்றே அனுதாபத்துடன் சென்று அந்தக் கூடையையும், இறைந்து கிடந்த சில நாணயங்களையும் பொறுக்கிக் கொண்டு வந்து அவளிடம் சேர்ப்பித்தனர்.

அந்தப் பெண் கைகளால் முகத்தை மூடிய வண்ணம் விசித்துக் கொண்டிருந்தாள். அவள் சமீபமிருந்த ஒரு வழிப்போக்கனோ, அவளது அஜாக்கிரதையான செயல் குறித்துக் கண்டித்துக் கொண்டிருந்தான். ஆனால், சின்னதுரையின் இளகிய உள்ளத்திற்கு, அப்பெண்ணின் கஷ்டங்களுக்குத் தானே குற்றவாளியெனத் தோன்றிக் கொண்டிருந்தது.

பாவம்! சின்னதுரையின் மனோபாவத்தைப் பொறுத்த வரையில், அவன் இந்த இலாகாவுக்கே அருகதையற்றவன். வாட்ட சாட்டமான உடலும், இலட்சணமான முகமும், இரக்கமான உள்ளமும் கொண்டிருந்த அவன் ஒரு கோழை. இயற்கையாக சங்கோச குணமும் அவனுக்குண்டு.

சின்னதுரை நாலா புறங்களையும் நோக்கினான். நல்ல வேளையாக அவனை எதிர்ப்பட்ட வண்டிகள் ஒரு திக்கிலுமில்லை. ஆகவே சாலையின் ஓரத்துக்கு வந்து அந்தப் பெண்ணை அணுகினான். அவனுக்கு என்ன பேசுவதென்றே புரியவில்லை. ஆனால், அவள் விசித்தபடியே கூறிய சில செய்திகளைக் கேட்டதும், அவன் உள்ளம் எல்லை மீறிய அனுதாபத்தை அடைந்து விட்டது.

அந்தப் பெண் ஒரு ஊழியக்காரி. அவளது எஜமானியம்மாளின் உத்தரவுப்படி, அவள் கடைத்தெருவிலிருந்து ஒரு வீசை உருளைக் கிழங்கும், மீதமுள்ள ஒன்னேகால் ரூபாயை

யும் எடுத்துக் கொண்டு திரும்பிக் கொண்டிருந்தான். இந்த எதிர்பாராத சம்பவத்தினால், அவனுக்கு இரண்டு ரூபாய் நஷ்டமானதுடன், அவனது எஜமானியம்மாளின் கொடூரங்களுக்கு மல்லவா ஆளாகி விட்டான்!

இச்செய்திகளினால் சின்னதுரையின் மனத்தில் துக்கம் மேலிட்டது. சோதனைபோல், இரண்டு தினங்களாகவே அவனிடம் காலணாக் கூட இல்லை.

ஒரு ஒதுக்குப்புறத்திலிருந்த வெற்றிலை பாக்குக் கடையை நோக்கினான் சின்னதுரை. அதிலிருந்த முதலாளி, அவனையும், அப்பெண்ணையும் வெகு நாழிகையாகவே முறைத்துப் பார்த்துக் கொண்டிருந்தான். சின்னதுரை சற்றும் களங்கமின்றி, அவனை யணுகி, தன் குறையைத் தெரிவித்து, தனக்கு இரண்டு ரூபாய் கடனாக வேண்டுமெனவும், மறுதினமே திருப்பித் தந்து விடுவதாகவும் கோரினான். கடைக்காரன், அவனை யொருதரம் ஏற இறங்க நோட்ட மிட்டபடியே, பெட்டியிலிருந்து இரண்டு ரூபாய்களை எடுத்துக் கொடுத்தான். அடுத்த கணம், அவனுக்கு மகிழ்ச்சியின் போதையினால், உள்ளம் துள்ளிக் குதித்தது! கடைக்காரனுக்கு நன்றி தெரிவித்தபடியே பரபரப்புடன் சாலையோரத்துக்கு வந்து, பணத்தை அவளிடம் நீட்டினான்.

அப்பெண்ணின் விழிகளிலிருந்த கண்ணீர் மாயமாய் மறைந்தது! அவள் நன்றி மிகுந்த பார்வையை அவன்மீது செலுத்திய வண்ணம் பணத்தை வாங்கிக் கொண்டாள். அதன் பின்னர், அப்பெண் வெகு தூரம் சென்று மறையும் வரையில் சின்னதுரையின் பார்வை அதே திசையில் லயித்திருந்தது!

மூன்று தினங்களாகி விட்டன. அந்த ஒருநாள் 'டியூட்டி'க்குப் பின்னர், சின்னதுரைக்கு 'டிராபிக்' வேலையே நேரவில்லை. வழக்கம் போல் 'ஸ்டேஷன் பாரா' வேலையிலேயே அவனை அமர்த்தி யிருந்தனர்.

அன்றைய தினத்துக்குப் பிறகு சின்னதுரையின் மனத்தில் ஒரு புது அத்தியாயம் துவங்கியிருந்தது. அந்த — ஒருநாள் வேலையின் பயங்கரத்தினால், அவனுக்குத் தன் இலாகாவின் மீதே வெறுப்புகூடத் தோன்றிற்று. ஆனால், அந்தப் பெண்ணோ! — செந்தாமரையின் இதழ்கள் போன்ற அவளது முகத்தை அவனால் மறக்கவே முடியவில்லை. அந்த மூச்சந்திக் கன்னியின் மோகன உருவம் இரவு பகல் பேதங்களின்றி அவன் இதயத்தில் முடிவுறாத கோட்டைகளை நிர்மாணித்துக் கொண்டிருந்தது! அவளுடைய பெயரையும், இருப்பிடத்தையும் அறிந்து கொள்ளாமல் வந்து விட்ட தன்னுடைய சங்கோசத் தன்மை குறித்து அவனுக்கு ஏக்கமும் மேலிட்டது.

சின்னதுரை இந்த உலகுக்கே ஒரு தனிக் கட்டை. ஏறக்குறைய இருபத்தைந்து வயதை அடைந்திருந்த அவன் இரண்டு வருஷங்களுக்கு முன்பே குடும்பஸ்தனாகிப் பிள்ளைக் குட்டிக்காரனாகவும் கூட ஆகியிருப்பான். ஆனால், தன்னுடனுள்ள மற்ற சகாக்களின் குடும்ப நிலையையும், அவர்களின் பொறுப்புக்களையும் பார்த்த பின்னர், அவனுக்குக் கலியாணம் செய்து கொள்வதிலுள்ள பயங்கரமான எண்ணங்களே மேலோங்கி யிருந்தன. கடந்த மூன்று தினங்களாக, இத்தகைய பயங்கரக் காட்சிகளெல்லாம் கூட அவன் இதயத்தை விட்டு எங்கோ ஓடி விட்டன!

சின்னதுரையின் சிந்தனைகளுக்குத் திடீர் என்று ஒரு தடை ஏற்பட்டது. இரண்டாம் முறையாக அவனது பெயரைச் சொல்லிக் கூப்பிட்ட இன்ஸ்பெக்டரின் குரல் அவனுக்கு அதிசயத்தையும் அதிர்ச்சியையும் அளித்தன! 'ஸார்'—என்ற குரலை விடுத்தபடியே அவன் பரபரப்புடன் இன்ஸ்பெக்டரின் எதிரில் வந்து நின்று ஒரு 'ஸெல்யூட்' கொடுத்தான்.

இன்ஸ்பெக்டர் ஒய்யாரத்துடன் ஈஸிசேரில் சாய்ந்த வண்ணம் புகை பருகிக் கொண்டிருந்தார். இன்ஸ்பெக்டர் தம்வாயிலிருந்த புகையை ரசிப்புடன் வெளியாக்கியபடியே, "ஏம்பா, நீ இன்னும் கண்ணாலமே செய்து கொள்ளவில்லையாமே!" என்றார்.

இக் கேள்வியினால், சின்னதுரையின் உடல் சற்றே அதிர்ச்சியுற்றது. அவன் தன் கையினால் பற்களை மூடியவாறே தலையசைத்தான்.

"இன்னிக்கித்தான் 'லெவன் தர்ட்டீ' சொன்னான்! உம்!" என்று கூறிக்கொண்டே அவர் அவனை யொருதரம் ஏற இறங்க நோக்கினார். உடுப்புக்குள்ளிருந்த சின்னதுரையின் உடல் வியர்த்தது! மேலும் தொடர்ந்து அவர், "ஏம்பா, அப்படீன்னா, இந்த 'அல

மதுரை, இன்ஜினியரிங் காண்ட்ராக்டர் திரு எஸ். முத்தையாத் தேவர் அவர்களின் புதல்வி செல்வி **கமலா**வுக்கும், தேனி, திரு எம். அருணாசலத் தேவர் அவர்களின் குமாரர் செல்வன் **பொன்னையா**வுக்கும் 28-4-55 அன்று மதுரையில் வெகு சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது. திருமணத்திற்கும், வரவேற்புக்கும் பல பிரமுகர்களும், உறவினர்களும், நண்பர்களும் விஜயம் செய்து மணமக்களை வாழ்த்தினர்.

வாழ்க மணமக்கள்!



வன்க லெவன்க'—இந்த வம்பெல்லாம் உனக்குத் தேவையே இல்லேன்னு சொல்லு!" என்றார் ஹாஸ்யமான குரலுடன்.

சின்னதுரை சற்றே நிடுக்குற்றான். "அப்படீன்னு!" என்றான் அவனை யறியாமலே.

இன்ஸ்பெக்டர் வாய் விட்டு நகைத்தார். "பின்னே குட்டியோட, சமுசாரியா இருக்கிறவனுக்குந்தானேப்பா செலவெல்லாம் சாஸ்தி!" இவ்வாறு அவர் முடிக்கவும், சின்னதுரையும் அசட்டு விழிகளுடன் இலேசாக நகைத்தான்.

"சரி, அதெல்லாமிருக்கட்டும்; ஒரு ஏழைப் பொண்ணு ஒன்னு இருக்குது; ஒனக்கு ரொம்பப் பொருத்தம்தான் அது! இப்பொழுதாவது கண்ணாலம் பண்ணிக்கிறயா!"

சின்னதுரை எக்கச் சக்கமாக மாட்டிக் கொண்டான்! இதற்கென்ன பதில் சொல்லுவதென்றே அவனுக்குப் புரியவில்லே.

"ஊம்! என்ன யோசிக்கிறேப்பா!"

சின்னதுரையின் உள்ளத்தில் அப்பொழுது, தோன்றிய அந்த மூச்சந்திப் பெண்ணின் உருவம் 'கலகல'வென்று நகைத்தது! சரியான பதிலேக் கொடுக்க வகையின்றி, அவனது நாவும் முரண் செய்தது!

"என்ன, வேறு ஏதாவது" என்று கூறிய படியே இன்ஸ்பெக்டர் தம் விழிகளின் மூலமே பாக்கி வார்த்தைகளேயும் முடித்தார்.

அடுத்த கணம், சின்னதுரையின் மூளை ஒரு தரம் சுழற்சி யுற்று, தகுந்த பதிலேயும் தயாரித்து விட்டது. "ஆமாங்க, எங்க மாமனுக்கு ஒரே மகள் இருக்குதுங்க; அவர் அதை......" என்று அரைகுறையாகக் கூறினன்.

இன்ஸ்பெக்டர் இலேசாக நகைத்தார். "சபாஷ்! சபாஷ்! அப்படிச் சொல்லு, விஷயத்தை!" என்றார். பாவம், இந்தக் கேள்வியுடனேயே அவர் அவனை விட்டிருக்கக் கூடாதா! "ஒங்க மாமன் வகையருவெல்லாம் எந்த ஊருலே இருக்காங்க!" என்ற அடுத்த தாக்குதலேயும் அவன்மீது பிரயோகித்தார்.

சின்னதுரை சற்றே பிரமித்தான். எப்பொழுதோ, அத்தையின் வீட்டிலிருந்து, இரண்டாம் வகுப்பு வரை படித்துக் கொண்டிருந்த 'ஓமாம்புலியூர்' அவனது ஞாபகத்துக்கு வரவும், அவன் அதையே கூறிவிட்டு, ஒரு முறை இருமிக் கொண்டான்!

"அப்படீன்னு சீக்கிரமே முடிச்சுடப்பா! நானும் இந்த ஊரை விட்டு மாற்றலாகிப் போகிறதுக் குள்ளேயே முடிச்சுடறியா!" என்றார் மகிழ்ச்சி மிகுந்த உரத்த குரலுடன். இத்தகைய மூத்தாய்ப்புக்குப் பின்னர்தான் சின்னதுரையின் கால்கள் நிலேத்து நின்றன! சற்று நேரத்துக்கெல்லாமே, இன்ஸ்பெக்டர் எழுந்து, ஸ்டேஷன் விஷயமான சில செய்திகளேக் கூறிவிட்டு வெளியே சென்று விட்டார்.



## 2

அன்று காலே எழுந்திருக்கும்போதே உற்சாகத்துடனிருந்தான் சின்னதுரை. முதல் நாள் வாங்கியிருந்த சம்பளத்தில் மீதமிருந்த மூப்பது ரூபாயும் அவனது சட்டைப் பையிலிருந்தது. பரபரப்புடன் அவன் முகம் கழுவிக் கொண்டு தெருப்புறம் வந்தான். முதலில், எந்தவிடம் போவது என்பதே அவனுக்குப் பிடிபடவில்லே. காய்கறிச் சந்தைக்குள் நுழைந்து விட்டு, அந்த நாற்சந்திக்கும் போகலாமென்ற எண்ணத்துடன் வேகமாக நடந்தான். அன்றுதான் அவனது காதல் தெய்வத்துக்கும் இரக்கம் தோன்றிற்று போலும்!

சந்தைக்குள்ளிருந்த ஒரு கடையின் எதிரில் கையிலுள்ள பைச் சுமையுடன் நின்று கொண்டிருந்தாள்! அவன் பரபரப்புடன் கூட்டங்களே விலக்கிக் கொண்டு அவளேச் சமீபித்தான்.

அப்பெண் ஒரு கணம் அதிர்ச்சி யுற்றாள். அடுத்த கணம், அவளது முகம் சூரியனேக் கண்ட தாமரையாகி விட்டது!

"அப்பாடி ஒரு வழியா 'துருவ நட்சத்திர'த்தைக் கண்டு பிடிச்சுட்டேன்!" என்றான் சின்னதுரை. அவள் நாணத்துடன் நாலா புறங்களிலும் தன் பார்வையை வீசினள்.

சிறிது நேரம், சம்பாஷணேயின் துவக்கத்துக்காக அவர்களிருவருமே போராடினர்!

"அன்னிக்கு நீங்கள் செய்த உபகாரத்தை நான் மறக்கவே மாட்டேனுங்க!" என்றாள் அப் பெண். அவள் முகத்தில் நாணமும், எல்லேயற்ற மகிழ்ச்சியும் கூத்தாடிக் கொண்டிருந்தன.

சின்னதுரைக்கும் அப்பொழுதுதான் சற்றே துணிவேற்பட்டது. "எந்த உபகாரம்!" என்றான் தன் புருவங்களே நெறித்தபடி.

"அதுதான், அந்தக் கடைக்காரனேக் கேட்டு இரண்டு ரூபாய் வாங்கிக் குடுக்கல்லீங்களா!"

"ஓ! அதுவா!" என்று அசிரத்தையாகவே கூறிவிட்டு, இலேசாக நகைத்தான் சின்ன

துரை. அடுத்த கணமே, "ஆமா, அதுக்கு எனக்கு என்ன பதில் உபகாரம் செய்யப் போறே !" என்றான் பளிச்சென்று.

இக் கேள்வி அவனது இதயத்தில் 'சுரீர்' என்று தைத்தது போன்றிருந்தது. அவள் சட்டெனத் தலைகுனிந்த வண்ணம், தம் காலால் நிலத்தைக் கீறிக் கொண்டிருந்தாள். பின்னர், "இந்த அநாதையாலே உங்களுக்கு என்னுங்க உதவி செய்ய முடியும் !" என்றாள்.

சின்னதுரையின் உள்ளம் சற்றே வருத்த மூற்றது. மேற்கொண்டு ஏதாவதொரு கேள்வி யின் மூலம் அவளைச் சோதனை செய்ய அவன் மனம் இடம் தரவில்லை. "சரி வா, போகலாம், அந்தப் பணத்தைக்கூட நானும் இன்னிக்குத் தான் கடைக்காரன்கிட்டே கொடுக்கப் போகிறேன்" என்று கூறிக் கொண்டே, தன் சட்டைப் பையிலிருந்த கரன்ஸி நோட்டுக்களைப் பெருமையுடன் வெளியில் இழுத்தான்.

அப்பெண் பரபரப்புடன் நகைத்தாள் ! "ஐயையோ ! அந்தக் கடைக்காரனுக்கு நீங்க குடுத்திடாதீங்க !" இவ்வாறு கூறியபடியே அவள் மீண்டும் நகைத்தாள்.

சின்னதுரை மீண்டும் தன் புருவங்களை நெறித்தபடியே, "ஏன் !" என்றான்.

"நீங்கள்தான் குடுத்திட்டீங்களே!" என்றாள்.

"நான் குடுத்திட்டேனா !" என்றான் பரபரப்புடன் சின்னதுரை.

"ஆமாம், நீங்கதான் !" அப்பெண்ணின் கரு நீல விழிகள் சின்னதுரையின் முகத்தையும் இதயத்தையும் ஊன்றித் துழாவின !

"நீ என்ன சொல்லுறேம்மா!" அவனது குரலில் செல்லமும் வாஞ்சையும் பிரதிபலித்தன.

"போன வாரம் நீங்க குடுத்ததாகச் சொல்லி, நானேதான் அவன் மூஞ்சியிலே கொண்டு போய் எறிஞ்சேன் !"

"ஏன் அப்படி!" அவன் உடல் புல்லரித்தது.

"ஏன் அப்படியா ! தெருவிலே போகிற பெண்களை யெல்லாம் 'அக்கா தங்கச்சி' யாகவே அவன் நினைக்கிறதில்லீங்க !"

இத்தகைய பதிலினால், சின்ன துரையின் ஆண்மை உணர்ச்சி எல்லை மீறிப் பரபரப் படைந்தது. "என்னது, என்னது !" என்றான்.

"நான் மறுநாள் அந்தப் பக்கம் போகும் போது, அவன் என்னைக் கூப்பிட்டு, அந்த ரெண்டு ரூபாயும் எனக்காகத்தான் இரக்கப் பட்டுக் குடுத்ததாகச் சொன்னான் ! நான் மறு நாளே, எங்க எஜமானியைக் கெஞ்சிக் கேட்டு வாங்கியாந்து எறிஞ்சுட்டேனுங்க !" அவளது வார்த்தைகள் கபடமின்றி வெளியாயின.

சின்னதுரை ஒருதரம் தன்பற்களைநெறித்துக் கொண்டான். பின்னர், சாந்தமான முகத் துடன், "அது போகட்டும். நீ என்னைப்பத்தி என்ன நினைக்கிறே! என்னையும் அந்தக் கடைக் காரனைப் போலவே தானே !" என்றான் தடுமாறிய குரலுடன்.

அடுத்த கணம் அவள் தன் தலையைக் குனிந்து கொண்டாள். "உங்களைப் பத்தி நான் என்னுங்க நினைக்கிறது ! நான் ஒரு அனாதை. ஏதோ அஞ்சாறு வருசமா சோறு போட்டுக் காப்பாத்தினது போதும்னு, ஒரு கிழவனோ, கட்டியோ பார்த்து, எங்க எஜமானியம்மா என்னைக் கண்ணாலமும் கட்டிக் குடுத்துடுவாங்க. நீங்க கவர்மெண்டு வேலை யிலே இருக்கிறவங்க. நானு எதனாச்சும் நினைச்சுப்பிட்டால் நடக்குதுங்களா !" என்று கூறிய படியே ஒரு பெருமூச்சை விடுத்தாள்.

சின்னதுரையின் முகத்திலிருந்து ஆயிரமா யிரம் எண்ணங்கள் வெளியாகத் துடித்தன ! ஆனால் ஒரு வார்த்தைகூட வெளிவர மறுத்தன. இந்த ரசமான கட்டத்தில்தான், சின்ன துரைக்குச் சோதனையும் ஏற்பட்டது! அவனது பின்புறத்தில் பலத்த ஓசையுடன் வந்துகொண் டிருந்த மோட்டார் சைக்கிள் அவனது நிலை யைக் குலைத்து விட்டது. அடுத்த இமைப் பொழுதுக்குள்ளாகவே அவர்கள் பிரிந்தனர்.

சின்னதுரை எதிர்த் திசையை நோக்கினான். மோட்டார் சைக்கிளைச் செலுத்திய வண்ணம் வந்து கொண்டிருந்த இன்ஸ்பெக்டர் அவனைச் சமீபித்து, அவனது வணக்கத்துக்குப் பதிலும் தெரிவித்தபடி சென்று விட்டார். பாவம் ! அந்த இமைப்பொழுது சம்பவம் அவனுக்குப் பெரும் ஏமாற்றத்தை அளித்து விட்டது.

## 3

**மீ**ண்டும் இரண்டு தினங்கள் வேகமாகச் சென்று விட்டன.

அன்று இன்ஸ்பெக்டரின் வீட்டுக் கூடத்தில் பலமான விவாதங்களும் அதையொட்டிய சிருங்கார ரசமும் நிகழ்ந்து கொண்டிருந்தன. போலீஸ் இலாக்காவின் கெடுபிடிகளையும், தடை உத்தரவுகளையும் தன் மனைவியிடம் அமுல்



நடத்த வழியின்றித் திணறிக்கொண்டிருந்தார் இன்ஸ்பெக்டர் துரை!

இரேழிப்புறத்தின் நடைபாதையில் பீதியுடன் சின்னதுரை மூன்று தினங்களுக்கு ரஜா பெறுவதற்காகக் கையில் மனுவுடன் வந்திருந்தான். சற்று நேரம் யோசித்தபடியே நின்றுவிட்டு, "ஸார்!" என்ற குரலை விடுத்தான்.

இன்ஸ்பெக்டர் தன் பார்வையை வெளிப்புறம் செலுத்தியவாறு, "யாரது!" என்று கேட்டார் உன்னிப்புடன். சின்னதுரை உட்புறம் தலையை நீட்டினான்.

"ஓஹோ, லெவன் நாட் த்ரீயா! என்னப்பா விசேஷம்!" என்றார் சற்றே மிடுக்குடன்.

சின்னதுரை அவரது சமீபமாக வந்து ஒரு 'ஸெல்யூட்'டைக் கொடுத்து விட்டுக் கையிலிருந்த மனுவை அடக்கமாக அவரிடம் நீட்டினான். அவர் அதைவாங்கிப் பார்த்துவிட்டு, "பூ! இவ்வளவுதானு! நான் உனக்குத்தான் கல்யாணமாக்கும்னுல்லே நினைச்சேன்!" என்று சற்றே ஹாஸ்யத்துடன் கூறிவிட்டு, தன் மனைவியின் பக்கமாகத் திரும்பி, "இவனைக்கூடத்தான் நம்ம வீட்டு அபிராமி விஷயமாகக் கேட்டேன்; இவன் மாமன் மகளைத்தான் கட்டிக்கப் போறானும்!" என்றார்.

சின்னதுரை அசட்டுக் களையுடன், தலையைச் சொறிந்தவாறே, தன் பற்கள் முழுமையையும் வெளியாக்கினான்!

"என்ன இருந்தாலும், 'உறவு முறையை' விட்டு விடுவாங்களா!" என்று பதில் கூறியபடியே இன்ஸ்பெக்டரின் மனைவி அவனைக் கூர்ந்து நோக்கினாள்.

"அதெல்லாம் பல பல விஷயமும் இருக்கும்!" இவ்வாறு கண்களைச் சிமிட்டியபடியே கூறிவிட்டு, சின்னதுரையை நோக்கிப் புன்னகை புரிந்தார் இன்ஸ்பெக்டர். அதன்பின்னர் அவர், அவனது மனுவை மேஜையின்மீது வைத்து விட்டு, "என்னப்பா, லெவன் நாட் த்ரீ, பக்கத்து 'ஷெட்'டிலே என் மோட்டார் சைக்கிள் இருக்குது; அதிலே 'பெட்ரோல்' இருக்குதான்னு பார்த்து விட்டு வாயேன்" என்றார் கனிவான முகத்துடன்.

அவன் பரபரப்புடன் புழக்கடைப்புறம் வழியாக, ஷெட்டை நோக்கி நடந்தான். அடுத்த நிமிஷமே, அவன் தன் ஆயுவலை மறக்கும்படியான சம்பவம் நிகழ்ந்தது!

புழக்கடைப் புறத்திலிருந்த மாட்டுத் தொழுவத்தில் பசுவுக்கு மஞ்சள் தீட்டியபடி நின்று கொண்டிருந்தாள் அவனது காதல் கன்னி! அவன் திடுக்குற்றான். ஆனால், அடுத்த கணமே அவனது விழிகளில் பிரமிப்பும், மகிழ்ச்சியும் சேர்ந்து உறவாடின! சின்னதுரை தன் கண்களைக் கசக்கி விட்டுக் கொண்டபடியே அவளை நோக்கி ஓடினான்! கணப்பொழுதுக்குள்ளாகவே அவன் யாவற்றையும் ஊகித்தறிந்து விட்டான்.

சின்னதுரையின் இதயத் துடிப்பு, அவனது மனோவேகத்துடன் போட்டியிடுவது போன்றிருந்தது. சில நிமிஷங்களுக்குள்ளாகவே, அவன் என்ன பேசினான், எப்படி விவரித்தான் என்பதெல்லாம்கூட அவனுக்கே ஆச்சரியமாக இருந்தது. ஆனால், அவளது பெயரையும் இருப்பிடத்தையும் அறிய முடியாதபடி நிகழ்ந்த சம்பவங்களின்மீது அப்பொழுது பழி தீர்த்துக் கொண்டான்! முடிவாக, அவன் தனது இன்ஸ்பெக்டரே அபிராமியைக் கல்யாணம் செய்து கொடுப்பதைப் பிரஸ்தாபித்ததையும், தான் கூறிய பதில்களையும் ஒன்று விடாமல் கூறி விட்டான். அவனது காதல் இதயம் அப்பொழுது அவனுக்கு மட்டற்ற தைரியத்தைக் கொடுத்து விட்டது!

பின்புறத்திலிருந்து எழுந்த ஏளனமான நகைப்பின் ஒலிகள் கேட்டு அவர்களிருவருமே திடுக்குற்றுத் திரும்பினர்.

"என்னப்பா, லெவன் நாட் த்ரீ! இந்தப் பொண்ணைத்தான், 'ஓமாம்புலியூரிலே' இருக்கிற ஒங்க மாமன் மகன்னு சொன்னியோ! அட, எனக்கு எல்லாம் தெரியுமப்பா!"—இவ்வாறு கூறிவிட்டு, மீண்டும் ஆரவாரத்துடன் நகைத்தார் இன்ஸ்பெக்டர். அவரது பக்கத்திலிருந்த மனைவியின் பரிகாசக் குரலும் அத்துடன் இணைந்து கொண்டது!

ஒரே மின்னல் வேகத்துக்குள், அந்த அடிமைப் பெண் சிட்டாய்ப் பறந்துவிட்டாள். வெட்கமும், பரிதாபமும் பிரதிபலிக்க, நிலை தடுமாறிய கள்ளன்போல் நின்றான் 'லெவன் நாட் த்ரீ' சின்னதுரை!



● சாத்தூர் பிரபல தீப்பெட்டித் தொழிலதிபர் திரு வி. ராஜாமணி நாடார் அவர்கள் தமது ஐம்பதாவது வயதில் ஒலவக்கோட்டில் மே 2-ந் தேதி மாரடைப்பால் காலமான செய்தி கேட்டு மிக்க வருந்துகிறோம். திரு வி. ராஜாமணி நாடார் தென்னிந்தியாவிலேயே தலைசிறந்த தீப்பெட்டி—தீக்குச்சி உற்பத்தி ஸ்தாபனங்களில் ஒன்றான சாத்தூர் ஒரிஜினல் மேச் கம்பெனி (1953)யின் அதிபர். தென்னாட்டில் முதன் முதலில் குடிசைத் தீப்பெட்டித் தொழிலைக் கண்டு பிடித்தவர். தென்னிந்திய சுதேசி தீப்பெட்டி உற்பத்தியாளர் சங்கக் காரியதரிசியாக இருந்து மேற்படி தொழில் வளர்ச்சிக்குப் பேருதவி செய்தார். அவரது மறைவினால் தீப்பெட்டித் தொழில் திறமை வாய்ந்த போஷகர் ஒருவரை இழந்து விட்டது. அருமை மனைவியையும், மூன்று பிள்ளைகளையும், நான்கு பெண்களையும், நண்பர்களையும், தொழிலாளர்களையும் ஆறாத் துயரத்தில் ஆழ்த்திச் சென்ற திரு ராஜாமணி நாடார் அவர்களின் ஆத்மா சாந்தி அடைவதாக. ●




அத்தியாயம் 17

## தைரியம் வந்தது!

அந்த ஸ்டேஷனில்தான் ரங்க துரை என்னை அழைத்துக் கொண்டு போவது போல் கனவு கண்டு விழித்தேன். ரயில் வந்து நின்றதும் ஏறிக் கொண்டேன். பெரியவரும், ஒரு வயதான ஸ்திரீயும் அந்த வண்டியில் இருந்தபடியால் எனக்குத் துணையாக இருப்பார்கள் என்ற எண்ணத்துடன் அதில் ஏறினேன். ஆனால் அதில் உட்கார இடமில்லை. ஒவ்வொருவரும் ஒவ்வொரு பெஞ்சியில் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தார்கள். பெட்டியைக் கீழே வைத்து விட்டு நின்றேன்.

அந்தப் பெரியவர் கண்களைத் திறந்து நான் நிற்பதைப் பார்த்து விட்டு மறுபடியும் மூடிக் கொண்டார். அவருக்கு எதிர்ப்புறமிருந்த பெஞ்சியில் அவருடைய மனைவி என்று நான் நினைத்த ஸ்திரீ தூங்கிக் கொண்டிருந்தாள். அவளுக்கு அடுத்தாற்போல் சுமார் எட்டு வயதுச் சிறுமி தூங்கிக் கொண்டிருந்தாள். அந்த அம்மாளை எழுப்பலாமா என்று ஒரு கணம் நினைத்தேன். தூங்குகிறவரை எழுப்ப வேண்டாமென்று நினைத்து நின்று கொண்டே இருந்தேன்.

அவர்களைப் பார்த்ததுமே கிராமாந்தரத்தில் வசிப்பவர்களென்று தெரிந்து விட்டது. அந்த அம்மாள் உடுத்தியிருந்த சுங்கிடிப் புடவையும், பெரியவர் உடுத்தியிருந்த சாய வேஷ்டியும் அதை ஊர்ஜிதம் செய்தன.

ரயிலின் ஆட்டத்தினால் என்னால் நிற்க முடியவில்லை. ஜன்னலைப் பிடித்துக் கொண்டு நின்று கொண்டே இருந்தேன். உடலும் உள்ளமும் ஒரேயடியாகக் களைத்துச் சோர்ந்து போயிருந்தன.

ஜிலுஜிலு வென்று காற்றுவீசிற்று! ஜன்னல் வழியாக இருளை வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தேன். என் மனமும் அவ்வாறுதானே இருந்தது?

நான் நினைப்பது தவறு என்று கூறுவதுபோல் இரண்டொரு நட்சத்திரங்கள் கண்களைச் சிமிட்டின. 'மனம் தளராதே, தைரியமாக இரு! நாங்கள் உனக்குத் துணையாக இருக்கிறோம்' என்று அவை அன்புடன் கூறின.

நான் சிறுமியாக இருந்தபோது, என் தந்தை மந்திரமூர்த்தி கூறிய அற்புதமான கதைகளில் சந்திரன் ரோகிணி கதையும் ஒன்று. நக்ஷத்திர கன்னிகள் சந்திரனை மணந்து கொண்டதையும், சந்திரன் ரோகிணியிடம் மாத்திரம் அன்புடன் நடந்து கொண்டதையும், மற்ற கன்னிகள் புகார் செய்தபடியால் சந்திரன் சாபம் பெற்றதையும் அவர் வெகு ரஸமாகச் சொல்லியிருக்கிறார்.

வீட்டில் ஒரு பழைய காலத்துப் படம் போட்ட புஸ்தகம் இருந்தது.

அதில் ஒரு படம் என் மனத்தில் பதிந்து போயிருக்கிறது. சந்திரனும் ரோகிணியும் பிறைச் சந்திர வடிவில் உள்ள ஊஞ்சலில் உட்கார்ந்திருப்பார்கள். மற்ற கன்னிகள் சுற்றிலும் நிற்பார்கள். அந்தப் படத்தைப் பார்த்த பிறகு எனக்கு வரும் கணவனுடன், அந்தப் பிறைச் சந்திர ஊஞ்சலில் வான வெளியில் நட்சத்திரப் பெண்கள் புடைசூழ ஊஞ்சலாடுவதாகக் கனவு கண்டிருக்கிறேன். அன்றிலிருந்து எனக்கு நட்சத்திரக் கன்னிகள் அத்தியந்த தோழிகளானார்கள். அவர்களுடன் எத்தனையோ நாட்கள் வாய் விட்டுப் பேசியிருக்கிறேன். ரங்கதுரையைச் சந்தித்த பிறகு என் தோழிகளை அவ்வளவாக நான் கவனிக்க வில்லை. ஆனால் இன்று என் அன்புத் தோழிகள் அதைப் பாராட்டாமல் எனக்கு ஆறுதல் கூறுவதற்கு முன் வந்தார்கள்.

பூமியிலிருந்த பொருள்களெல்லாம் எதிர்த் திசையில் ஓடிக் கொண்டிருந்தன. என்னிடமிருந்து விலகுவதற்காகவே அவை அப்படி விழுந்தடித்துக்கொண்டு ஓடுவதாக எனக்குத் தோன்றிற்று. ஆனால் என் தோழிகள் மாத்திரம் என்னைக் கைவிட வில்லை. கூடவே வந்து கொண்டிருந்தார்கள்.

நின்று நின்று காலை வலித்தது. ரயில் திடீரென்று பெரிதாக ஆடவே நிலை தடுமாறினேன். அதை அந்தப் பெரியவர் பார்த்தார் போலிருக்கிறது. எழுந்திருந்து தம் மனைவியை எழுப்பினார். அவளைத் தமது பெஞ்சியில் உட்காரச் சொல்லி விட்டு என்னைப் பார்த்து,

"ரொம்ப நேரமா நிற்கிறயே அம்மா! அப்படி உட்காரு!" என்றார்.

நானும் சந்தோஷமாக உட்கார்ந்து கொண்டேன். "ரொம்ப வந்தனம், தாத்தா!" என்றேன். அவரும் அந்த அம்மாளும் தாங்கள் போய் விட்டு வந்து கொண்டிருக்கும் கல்யாணத்தைப் பற்றி ஏதேதோ பேசிக் கொண்டிருந் தார்கள். ஐந்து நிமிஷத்துக் கெல்லாம் எனக்குக் கண்ணைச் சுழற்றியது. படுத்துக் கொண்டு சற்றுத் தூங்கினால் தேவலை என்று தோன்றியது. நான் தூங்கும் போது இவர்கள் இறங்கிப் போய் விட்டால் தனியாக இருப்போமே என்ற எண்ணம் வேறு எழுந்தது.

ஆகவே பெரியவரைப் பார்த்து, "நானும் இப்படிச் சற்றுப் படுத்துக் கொள்கிறேன், தாத்தா. நீங்கள் இறங்கி விடுவதாக இருந்தால் என்னைத் தயவுசெய்து எழுப்பி விடுங்கள்" என்று கேட்டுக் கொண்டேன்.

"நாங்கள் மத்தியானத்துக்கு மேலே தான் இறங்குவோம். நீ நிம்மதியாகத் தூங்கு அம்மா!" என்றாள் அந்த அம்மாள். நான் படுத்துக் கொண்டேன்.

"பாவம் ஒண்டியாகப் போகிறுப் போலே தோணுது. அறியாப் பொண்ணு. பயமா இருக்கு" என்று அந்த அம்மாள் கூறியது என்னுடைய காதிலும் விழுந்தது.

"ஆமாம்! முகத்தைப் பார்த்தால் பட்டணத்துப் பொண்ணு மாதிரி இருக்கு" என்றார் தாத்தா.

"நம்ம சிவபாக்கியம் மாதிரி இல்லே? அவ இன்னும் சித்தே கறுப்பு. இந்தப் பொண்ணு எலுமிச்சம்பழ நிறக் கணக்கால்ல இருக்கு!"

"ஆமாம், செத்துப் போனவளைப் பற்றி ஏன் பேசறே? ஏழுமலையான் புண்ணியத்திலே இந்தப் பிஞ்சாவது ஆயுசோடே கிடக்கட்டும்" என்று பெரியவர் கூறினார்.

அதன் பிறகு அவர்கள் என்ன பேசிக் கொண்டார்களென்று எனக்குத் தெரியாது. நித்திரா தேவி என்னை வந்து தழுவிக் கொண்டாள். என் துன்பத்தை யெல்லாம் மறக்கச் செய்து எனக்கு அப்பொழுதெல்லாம் ஆறுதல் அளித்தவள் தோழி நித்ரா தேவி. எவ்வளவு கவலை இருந்தாலும் அப்போதெல்லாம் தூங்கி விடுவேன். ஆனால் இந்தச் சிறைக்கு வந்த பிறகுதான் நித்திரா தேவி என்னிடம் சண்டை போட்டுக் கொண்டு போய் விட்டாள். ஒரு வேளை





இந்தச் சிறை அவளுக்குப் பிடிக்க வில்லையோ, என்னமோ!

நான் கண் விழித்தபொழுது நன்ருகப் பொழுது புலர்ந்திருந்தது. என்னை ரயிலில் காண எனக்கே முதலில் மிகவும் வியப்பாக இருந்தது. ஒரு கணம் சென்ற பிறகுதான் எல்லாம் நினைவுக்கு வந்தது. ரயில் ஏதோ ஒரு ஸ்டேஷனில் நின்று கொண்டிருந்தது. அந்தச் சிறுமியும் உட்கார்ந்துகொண்டு ஜன்னல் வழியாக வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தாள்.

ஸ்டேஷனில் ஒரு குழாய் இருந்தது. நான் அங்கே போய் முகத்தைக் கழுவிக் கொண்டு வந்தேன். பெரியவர் ஒரு கூஜாவில் காப்பி வாங்கிக் கொண்டு வந்தார். தன் மனைவியைப் பார்த்து, "நான் காப்பி சாப்பிட்டாச்சு. அந்தக் குழந்தைக்கும் சேர்த்து வாங்கிண்டு வந்திருக்கேன். அவளுக்கும் கொடு" என்ருர்.

என் மனம் நன்றியால் நிறைந்தது. காப்பி சாப்பிடும்போது, அது வெறும் சர்க்கரை போட்ட வெந்நீர் மாதிரி இருந்ததுகூடத் தெரிய வில்லை.

சிறுமியைப் பார்த்து என் அருகில் வந்து உட்காரும்படி கூறினேன். அவள் சங்கோசப்பட்டாள். பெரியவர் அவளிடம், "என்ன வெட்கம் வள்ளி? கூப்பிட்டால் பேச வேண்டாமா?" என்ருர். அவர் மனையாள் என்னைப் பார்த்து, "உன் பெயர் என்னம்மா?" என்று கேட்டாள்.

"இந்துமதி" என்று அவளுக்குப் பதில் சொன்னேன்.

"எங்கே யிருந்து வரே, அம்மா?" இது அடுத்த கேள்வி.

"சென்னைப் பட்டணத்திலேயிருந்து வரேன்" என்றேன்.

"பார்த்தாயா? நான்தான் சொன்னேனே, படித்த பெண்மாதிரி இருக்கிறது என்று. ஆமாம்! தனியாகவா போகிருய்?" என்ருர் பெரியவர்.

"என்ன செய்யறது? தனியாகத்தான் வந்தேன். ஆனல் இப்போது தனியாக இல்லை. நீங்கள்தான் துணையாக இருக்கிறீர்களே!" என்றேன். இது நான் உபசாரமாகச் சொன்ன வார்த்தை யில்லை. உண்மையாகவே தான் அவ்வாறு நினைத்தேன்.

"பேச்சைப் பார்த்தாலே தெரிகிறதே, கெட்டிக்காரப் பெண் என்று. எங்கே போய்க்கொண்டு இருக்கிறாய் அம்மா?" என்று இன்னொரு கேள்வி கேட்டாள் அந்த அம்மாள்.

"நான் கூனூருக்குப் போகிறேன். அங்கே ஒரு சேவா ஆசிரமம் இருக்கிறதாமே. அதில் போய்ச் சேருவதற்காகப் போகிறேன்" என்றேன். எனக்கென்னமோ அவர்களிடம் பேசுவதில் தயக்கம் ஏற்படவே யில்லை. ஏதோ உறவினர்களிடம் பேசுவது போலத் தோன்றியது. கபடமில்லாதவர்கள் என்று அவர்களைப் பார்த்த உடனேயே தோன்றியது.

வள்ளி தன் பாட்டியின் காதோடு, "அம்மா, பசிக்கிறது" என்று கூறி



னாள். உடனே அவள் கட்டுச் சாத மூட்டையை அவிழ்த்து இலைகளை எடுத்தாள். வள்ளிக்கும் பெரியவருக்கும் இலைகள் கொடுத்து விட்டு எனக்கும் கொடுத்தாள். நான் வேண்டாமென்றேன். இருவரும் ரொம்ப வற்புறுத்தவே வாங்கிக் கொண்டேன். இட்டிலியும், தயிர் சாதமும் சாப்பிட்டேன். அவர்களுக்கும் என்னை ரொம்பப் பிடித்து விட்டதாகத் தோன்றியது.

சாப்பிட்டுக் கொண்டே, "இவள் உங்களுடைய பேத்தியா?" என்று அந்த அம்மாளிடம் கேட்டேன்.

"ஆமாம், பேத்திதான்! எனக்கு உன் மாதிரியே ஒரு மகள் இருந்தாள். ராஜாத்தி மாதிரி இருப்பாள். அவளை ஒரு பாவிக்குக் கட்டிக் கொடுத்தேன். அவன் குடிச்சுட்டு வந்து விட்டை ரெண்டு பண்ணி விடுவான். சிவபாக்கியத்தை அடி அடின்னு அடித்து நொறுக்குவான். அந்த ஏக்கத்திலேயே செத்துப் போய் விட்டாள். இது அவளுடைய மகள். இதை அவங்க அப்பாவிடம் விடுவதற்குப் பிரியப் படாமல் நாங்களே வைத்துக்கொண் டிருக்கிறோம்" என்றாள்.

"வள்ளிக்கு என்ன வயதாகிறது?" என்று கேட்டேன்.

"எட்டு வயது ஆகப்போகிறது!" என்றாள்.

வள்ளியின் முகம் அழகாக இல்லாவிட்டாலும் புத்திசாலித்தனம் கண்களில் பிரகாசித்தது. துறு துறுவென்று ஏதோ விஷமம் செய்துகொண்டே இருந்தாள்.

"ரயிலு எப்படித் தாத்தா ஓடறது?" என்று கேட்டாள் வள்ளி.

பாவம் அவர் பதில் சொல்லத் தெரியாமல் விழித்தார். நான் வள்ளியிடம், "நீ என்கிட்ட வந்தால் நான் சொல்லுவேன்" என்றேன். தயக்கத்தோடு வந்து உட்கார்ந்து கொண்டாள். ரயில் ஓடுவதைப் பற்றி நான் சொன்னது அவளுக்குப் புரியவில்லை. பிறகு நான் "அதெல்லாம் சின்னக் குழந்தைகளுக்குப் புரியாது. நான் உனக்குப் பாட்டுச் சொல்லித் தருகிறேன். பாடுகிறாயா?" என்று கேட்டேன்.

"எல்லாம் பாடுவாள். நீ சொல்லிக் கொடு" என்றாள் வள்ளியின் பாட்டி.

வள்ளியின் தாத்தா, "நீ பாட்டுக் கற்றுக் கொள்கிறாயா அம்மா?" என்று கேட்டார். வள்ளியும் பலமாகத் தலையை ஆட்டினாள்.

நானும் கற்றுக் கொடுத்தேன்.

"கணபதி ராயன்—அவனிரு
காலைப் பிடித்திடுவோம்.

குணமுயர்ந்திடவே விடுதலை
கூடி மகிழ்ந்திடவே.

ஓம்சக்தி ஓம்சக்தி ஓம்—பராசக்தி
ஓம்சக்தி ஓம்சக்தி ஓம்."

என்று பாடினேன். வள்ளிக்குக் குரல் நன்றாக இருந்தது. இருந்தாலும் அவளுக்குச் சரியாகப் பாட வரவில்லை. ஆயினும் அது அவளுடைய பாட்டிக்கும் தாத்தாவுக்கும் அளவில்லாத சந்தோஷத்தை யளித்தது. என்னை

முழுதும் பாடச் சொன்னார்கள். அது வரை மெதுவாகப் பாடிக் கொண்டிருந்தேன். அவர்கள் வற்புறுத்திய தன் பேரில் நன்றாகப் பாடினேன்.

"வெற்றி வடிவேலன் அவனுடை
வீரத்தினைப் புகழ்வோம்
சுற்றி நில்லாதே போ பகையே
துள்ளி வருகுது வேல்"

என்று பாடியபோது, பெரியவருக்கு உற்சாகம் பொங்கி விட்டது. எனக்கே அந்த அடி மிகவும் தைரியத்தை அளித்தது. அதன் பிறகு நானும் பெரியவரிடம் அவரைப் பற்றி விசாரித்தேன். அவருக்குக் கோயமுத்தூர் நகரத்திலிருந்து பத்துப் பன்னிரண்டு மைல் தூரத்தில் உள்ள கிராமத்தில் கொஞ்சம் நிலபுலம் இருக்கிறது என்பதையும், அவர் பெயர் முனுசாமி கவுண்டர் என்பதையும் தெரிந்து கொண்டேன். அவரிடம் எனக்கு நம்பிக்கையும், மதிப்பும் ஏற்பட்டன.

அத்தியாயம் 18

# எதிர்பாராத உதவி

வெய்யில் ஏறிக்கொண்டு வந்தது. என்னைப் பற்றி இன்னும் பல கேள்விகள் கேட்டாள் வள்ளியின் பாட்டி. எனக்கு ஒருவருமே இல்லை என்று கூறியதும் இருவரும் ரொம்பப் பரிதாபப் பட்டார்கள்.

வள்ளி என்னிடம் சிநேகமாகி விட்டாள். பிறகு ஒரு கதை சொன்னேன். மிக ஆவலுடன் கேட்டாள். எல்லாக் குழந்தைகளுமே ஒரே மாதிரிதான் இருக்கிறார்கள் என்று எண்ணினேன். வள்ளியைப் பார்த்த போது மீராவின் நினைவு வந்து கொண்டே இருந்தது. மீராவை அழகாக அலங்கரித்திருப்பார்கள். புதிய துணிமணிகளும் இரட்டைப் பின்னலுமாக நகரத்துச் சிறுமியாக அவள் காட்சியளிப்பாள். வள்ளிக்கோ இப்போதே மூக்கைக் குத்தித் திருகாணி போட்டிருந்தார்கள். பின்னலின் நுனியில் வாழை நார் முடியப்பட்டிருந்தது. பாவாடையும் சொக்காயும் சாயம் போயிருந்தன. அதைத் தவிர உள்ளத்தில் ஒரு வித்தியாசமும் இல்லை. மீராவுக்கும் கதையும் பாட்டும் பிடித்திருந்தது. இவளுக்கும் பிடிக்கிறது.

இப்போது மீரா என்ன செய்து கொண்டிருப்பாள்? என்னைக் காணவில்லையென்று எல்லாருக்கும் தெரிந்து போயிருக்கும். சுலோசனா காலையில் பணம் எடுப்பதற்காக மேஜை டிராயரைத் திறந்து பார்த்திருப்பாள். என் கடிதத்தைப் படித்து விட்டுக் கண்ணீர் விட்டிருப்பாள். பாவம்! பாலு கண்மணிக்குக் கூட நான் இல்லாதது மிகவும் குறையாக இருக்கும். மீராதான் என்னை ரொம்பத் தேடுவாள். அவளுக்கு யார் கதை சொல்லுவார்கள்?

ரமேஷ் விஷயத்தை அமைதியாகக் கேட்டிருப்பார். அவரை எந்த விஷயமும் அசைக்க முடியாது. வக்கீலுக்கும் ஈசுவரமூர்த்திக்கும் தான், பாவம் ரொம்ப ஏமாற்றம் ஏற்பட்டிருக்கும். அதை நினைக்கும்போது எனக்குச் சிரிப்பு வந்தது. என்னை எப்படியும் அடைந்து விடலாமென்று ஈசுவரமூர்த்திதான் எவ்வளவு திடமாக நம்பினார்? எனக்கு இவ்வளவு துணிச்சல் இருக்குமென்று அவர்கள் யாரும் எதிர்பார்த்திருக்க மாட்டார்கள். ஏன்? சுலோ கூட நினைத்திருக்க மாட்டாள். கோமளவல்லி அம்மாள்தான் உண்மையிலேயே நான் இல்லாத குறையை உணர்வார். என் மாதிரி யார் அவ்வளவு வசதியாகக் காரியம் செய்து கொடுப்பார்கள்? பாவம்! இனிமேல் மூத்து வைத்ததுதான் சட்டமாக இருக்கும். நன்றாகத் திண்டாடட்டும். என் அருமை அப்படியாவது தெரியட்டும். குழந்தையைப் பார்த்துக் கொண்டு, மீராவைக் கவனித்து, வீட்டு வேலையையும் செய்து பார்க்கும்போது நான் எவ்வளவு வேலை செய்தேனென்று தெரியும். நன்றாக வேண்டும். இவ்வாறெல்லாம் சிறுபிள்ளைத்தனமாக எண்ண மிட்டேன்.

'சே! என்னவெல்லாம் நினைக்கிறேன். எப்படியாவது எல்லாரும் சௌக்கியமாக இருக்கட்டும். என்னுடைய துரதிர்ஷ்டம்தான் அவர்களையும் பிடித்ததோ என்னமோ? நான்

# நீங்கள் இன்று
# புரோடெக்ஸ்
# உபயோகித்தீர்களா?



நீங்கள் நாள் முழுதும் புதுமையுடனும்
வாசனையுடனும் இருக்க, உயர்ந்த,
புதிய புரோடெக்ஸ் ஆல்-பர்பஸ் டாய்லட்
பவுடர். மென்மையும், நறுமணமும்
சேர்ந்த புரோடெக்ஸ் குடும்ப முழுதுக்கும்
வெப்பத்தில் குளுமையும்
இனிமையும் தருகிறது.




ஸ்நானத்துக்குப் பின்
வாசனைப் பூஷணம். ஈரத்தை
உறிஞ்சி புதுமை தருகிறது.





குளுமை! குதூகலம்!
கோடையின் கொடுமையில்

நேர்த்தியும் மென்மை!
யும்-குழந்தைக்கு ஏற்றது.





மிக எடுப்பானது
உங்கள் வதனத்தை அழகு
படுத்தும் பவுடர்.

கால்கேட்டின் புதிய
சிறந்த தயாரிப்பு

# புரோடெக்ஸ்
# ஆல் பர்பஸ்
# டாய்லட் பவுடர்

# ‘வெயிற்காலத்து வயிற்றுக் கோளாறுகளை’ தளதளக்கும் பானம் நிறுத்துகிறது



வெயில் காலத்தில் உங்கள் வயிறு மிகச் சுலபமாகக் கெட்டுவிடுகின்றது. உங்கள் வாயில் ஒரு வித துர்க்கந்தம் ஏற்படுகிறது. தவிர நீங்கள் தளர்ச்சியாயும், சோம்பலுடனும் இருக்கின்றீர்கள். ஈனோ உங்கள் வயிற்றை சீராக்கி உங்கள் தேகநிலையை நேர்செய்து அதை ஆரோக்கியமாயும், சுறுசுறுப்பாயுமாக்குகின்றது.

ஈனோ எளிமையானது எனினும் வயிற்றில் புளிப்பை நீக்குவதில் அற்புத சக்தி வாய்ந்தது. எவ்வித கெடுதியும் செய்யாமல் அது புளிப்பு மிகுதியாலுள்ள அஜீர்ணம், நெஞ்செரிச்சல், வாயுப்பொருமல் முதலிய உபாதைகளை துரிதமாயும், நிச்சயமாகவும் நிவர்த்திக்கிறது. எட்டே செகண்டுகளில் நீங்கள் சுகம் பெறுகிறீர்கள் — வயிற்றுக்கு மட்டுமல்ல, வாய்க்குக்கூட!

மிதம் மீறி புசிப்பதாலோ அல்லது உண்பது உங்கள் உடம்புக்கு ஒத்துக்கொள்ளாமலிருந்தாலோ ஈனோவின் விசேஷசக்தி, ஜீரண உறுப்புகளை மீண்டும் ஒழுங்குபடுத்த உதவுகிறது. உங்களுக்கு லேசாய் பேதியாக விரும்பினால் காலி வயிற்றில் கொஞ்சம் பெரிய ‘டோஸ்’ உட்கொள்ளவும். எப்பொழுதும் ஈனோஸ் ‘ப்ரூட் ஸால்ட்’டை கையிருப்பில் வைத்துக் கொள்ளவும்.

## அது உங்களுக்கு குணம் செய்வதுடன் குளுமையையும் புத்துணர்ச்சியையும் தருகிறது

# ஈனோஸ் ‘ப்ரூட் ஸால்ட்’




பெரிய புட்டி ரூ. 3/12
சிறிய புட்டி ரூ. 2/6
உள்ளூர் வரிகள் பிரத்யேகம்

‘ஈனோ’ மற்றும் ‘ப்ரூட் ஸால்ட்’ என்ற வார்த்தைகள் ரிஜிஸ்தர் செய்யப்பட்ட டிரேட் மார்க்குகளாகும்

ENO. [illegible] (Tam.)

வந்த பிறகாவது அவர்கள் க்ஷேமமாக இருக்கட்டும்' என்று மனமுருகிப் பிரார்த்தித்தேன்!

இவ்வாறெல்லாம் யோசித்துக் கொண்டே இருந்தேன். வள்ளி வண்டியில் ஓடிக் கொண்டே இருந்தாள். அப்போது ரயிலில் கூட்டம் குறைந்து விட்டது. இரண்டொருவர்தான் இருந்தார்கள். வள்ளியை "ஜன்னலுக்கருகில் போகாதே, எட்டிப் பார்க்காதே, கதவுகிட்டே போகாதே" என்று மாற்றி மாற்றிப் பாட்டியும் தாத்தாவும் எச்சரித்துக் கொண்டே இருந்தார்கள். அவளோ லட்சியமே செய்யாமல் அலைந்து கொண்டிருந்தாள். வெய்யில் ஏற ஏற எனக்குக் கண்களில் எரிச்சல் உண்டாயிற்று. கண்களை மூடிக் கொண்டு உட்கார்ந்திருந்தேன். பெரியவரும் படுத்துக் கொண்டு தூங்கிவிட்டிருந்தார். வள்ளி ஜன்னலுக்கு வெளியே தலையை நீட்டினுளென்று அவள் பாட்டி அவளைக் கோபித்துக் கொண்டிருந்தாள்.

"நீ காசு தந்தா நான் சமர்த்தாயிருக்கேன்" என்ருள் வள்ளி.

அவள் பேரம் பேசுவதைக் கேட்டு எனக்குச் சிரிப்பு வந்தது. அவளைப் பார்த்து, "ஏன் வள்ளி! பாட்டி சொன்னதைக் கேட்க வேண்டாமா?" என்றேன். அதற்குள் அவளுடைய பாட்டி வெற்றிலைப் பையிலிருந்து அரையணா எடுத்து வள்ளியிடம் கொடுத்து, "இப்படிப் பேசாமல் உட்காரு" என்ருள். வள்ளியும் கையைக் கட்டிக்கொண்டு பேசாமல் உட்கார்ந்தாள்.

நான் மறுபடியும் கண்களை மூடிக் கொண்டேன். ரயில் நின்றது. ஸ்டேஷன் என்று அறிவிப்பதற்கான பலவித சப்தங்கள் தொடர்ந்து வந்தன. ரங்கதுரையுடன் நான் பிரயாணம் செய்ததாக விடியற்காலம் கண்ட கனவை நினைவுபடுத்திக் கொண்டு மனத்தில் அனுபவித்துக் கொண்டிருந்தேன். ரயில் புறப்பட்டது. "வள்ளி! வள்ளி!" என்று வள்ளியின் பாட்டி கத்தும் சத்தம் கேட்கவே திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தேன். அதற்குள் பெரியவரும் எழுந்து உட்கார்ந்து "என்ன? என்ன?" என்று கேட்டார்.

ரயில் கதவு திறந்திருந்தது. வள்ளி கையில் ஒரு பொட்டலத்துடன் ஓடி வந்து கொண்டிருந்தாள். ஓடும் ரயிலில் ஏறும்போது தடுக்கி விழுந்தால் என்ன ஆகும்? பெரியவர் கதவுக்கு அருகில் ஓடினுர். நான் அவரைப் பிடித்து நிறுத்தி, அபாய அறிவிப்புச் சங்கிலியைக் காட்டி, "அதை இழுங்கள்" என்று சொல்லிக் கொண்டே பிளாட்பாரத்தில் குதித்து விட்டேன். ஓடி வந்த வள்ளியைப் பிடித்து நிறுத்தினேன். நான் அப்படி நிறுத்தியிருக்கா விட்டால் அவள் நிச்சயமாக ஓடி வந்து ரயிலில் ஏற முயன்றிருப்பாள். அது பெரிய கண்டமாகத்தான் போயிருந்திருக்கும். நான் பிடித்த வேகத்தில் அவளுடைய கையிலிருந்த பட்சணமெல்லாம் சிதறிப் போயிற்று.

சில கஜ தூரம் சென்ற பிறகு ரயில் நின்றது. பலர் தலையை நீட்டி எட்டிப் பார்த்தார்கள். ரயிலின் கார்டு வந்தார். அவரிடம் விஷயத்தைச் சொன்னதும், "சரி! வண்டியில் ஏறிக் கொள்ளுங்கள். நல்ல வேளையாகப் போயிற்று. குழந்தைகளை நீங்கள் ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ள வேண்டாமா?" என்று எச்சரித்து விட்டுப் போனுர்.

பத்து நிமிஷத்தில் மறுபடியும் வண்டி கிளம்பிற்று. வள்ளியிடம், "இப்படிச் செய்யலாமா, வள்ளி! நீ ரயில் ஓடும்போது ஏறி, விழுந்திருந்தாயானுல் என்ன ஆகியிருக்கும்?" என்றேன். அவள் அழத் தொடங்கினுள். பாட்டி, தாத்தா இருவரும் அவளைத் திட்டினுர்கள். "இந்த அக்கா மட்டும் இல்லாவிட்டால் நீ, நான் இரண்டு பேரும் இன்னிக்கு ரயிலடியிலே மாட்டிக்கொண்டிருப்போம்" என்று கத்தினுர் பெரியவர்.

"நமக்கு அந்தச் சங்கிலியைப் பிடித்து இழுக்கலாமென்று தோன்றியதா பாருங்களேன்" என்று வியந்தாள் அவர் சம்சாரம்.

"நீ ஏன் காசு கொடுத்தே அவள் கிட்டே? எல்லாம் உன்னுலே வந்த வினைதான்" என்று தம் மனைவியிடம் சீறி விழுந்தார். பாவம்! வள்ளியின் பாட்டிக்கு அவமானமாகப் போய் விட்டது. "இந்தத் துக்கிரியினுலே தான் எனக்குத் துன்பமெல்லாம். இது பிறந்ததும் ரதியாட்டமா யிருந்த எம் பொண்ணு போயிட்டா. இன்

னும் என்ன வெல்லாம் பாக்கி யிருக்கிறதோ?" என்று கூறி அவள் அழ ஆரம்பித்தாள்.

நான் எல்லோரையும் சமாதானப் படுத்தினேன். "ஆனது ஆகி விட்டது. குழந்தை வேறு கலங்கிப் போயிருக் கிறன். நீங்கள் இப்படிக் குழந்தையின் எதிரே சண்டை போட்டுக் கொள்ளக் கூடாது, தாத்தா!" என்றேன். எனக்குத் திடீரென்று மிகுந்த சுதந்திரம் உண்டாகி விட்டது.

அவர்களும் பலவிதமாக எனக்கு நன்றி தெரிவித்தார்கள். "உன்னுலே தான் இன்னிக்கு ஒன்றும் ஆகாமல் இருந்தது. ஏழுமலையான் தான் உனக்கு அந்தச் சமயத்தில் அப்படிச் செய்ய வேண்டுமென்று தோன்றச் செய்திருக்கிருர்" என்றெல்லாம் அவர்கள் சொன்னுர்கள்.

பிறகு பெரியவர், "ஏம்மா! நீ உடனே கூனூருக்குப் போகா விட்டால் என்ன? எங்களுடன் வந்து ஒரு வாரம், பத்து நாள் எங்க கிராமத்தில் இருந்து விட்டுப் போயேன்" என்று கேட்டுக் கொண்டார்.

அதை அவருடைய மனைவியும் பலமாக ஆமோதித்தாள். "ஆமாம். உனக்குப் பத்து நாளைக்கு விருந்து வைச்சால் தான் எனக்குத் திருப்தியாக இருக்கும்" என்ருள்.

நான் வேடிக்கையாக, "பத்து நாளைக்குத்தான் விருந்து வைப்பீர்களா? அதுக்கு மேலே இரண்டு நாள் இருந்தா சாப்பாடு போட மாட்டீர்களாக்கும்" என்றேன்.

"என்ன அப்படிச் சொல்லிட்டே? நீ எங்களோடேயே இருந்தாலும் எனக்கு சந்தோஷந்தான். செத்துப் போன சிவபாக்கியம் எங்கிட்ட மறுபடியும் வந்து விட்டாள் என்று நான் நினைத்துக் கொள்வேன்" என்ருள் பாட்டி. என் மனம் நெகிழ்ந்தது.

மறுபடியும் மறுபடியும், "எங்களோடு நீ இறங்கிவிட வேண்டும்" என்று அவர்கள் பல தடவை சொல்லிக் கொண்டிருந்தார்கள்.

"எனக்கு மறுபடியும் கூனூருக்கு டிக்கட் வாங்கப் பணமில்லையே, தாத்தா!" என்றேன்.

"நான் தருகிறேன், குழந்தே! உனக்கு இது கூடச் செய்ய மாட்டோமா?" என்ருர் பெரியவர்.

வள்ளியும் நச்சரித்தாள். கடைசியில் ஒரு வாரம் இருந்து விட்டுப் போவதாகச் சம்மதித்தேன். எனக்கும்தான் இப்படி அன்புடன் அழைக்க யார் இருந்தார்கள்? பாலைவனத்தில் பூஞ்சோலையைக் கண்டது போல் அவர்களுடைய அன்பு என் உள்ளத்தைக் குளிரச் செய்தது.

ஈசுவரனுடைய விளையாடல்களை நம்மால் எப்படி அளந்து அறிய முடியும்? நான் அவர்களோடு கிராமத்துக்குச் சென்றதால் என் வாழ்க்கை எவ்வளவு மாறுதலடைந்தது? நான் நேரே கூனூருக்குப் போயிருந்தால் என்ன ஆகி யிருக்குமோ? இறைவன் அவர்களை எனக்கு உதவி புரிவதற்காகவே அனுப்பி வைத்ததாக எனக்குத் தோன்றுகிறது.

ரங்கதுரையைக் கனவில் கண்டதைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டே இருந்தேன். கம்பீரமான நெற்றியும், எடுப்பான நாசியும், களையான வதனமும் நினைவுக்கு வந்தன. கனவில் அவர் ஐரோப்பிய உடை தரித்திருந்தார். மிகவும் நாகரிகமாக இருந்தார். ரங்கதுரை ஒருவேளை சீமையி லிருந்து திரும்பி வரும்போது அப்படித்தான் இருப்பார் போலிருக்கிறது. 'தோற்றத்தில் மாறி யிருந்தாலும், மனம் மாருமல் அப்படியே இருப்பாரா? கனவில் பார்த்ததைப் போலவே அன்புடன் என்னை உள்ளம் குளிரப் பார்ப்பாரா? ஒரு வேளை இந்தக் கனவு சீக்கிரம் பலிக்குமோ? நிஜமாகவே ரங்கதுரை என்னை வந்து அழைத்துச் செல்வாரோ?' என்றெல்லாம் மனோராஜ்யத்தில் ஆழ்ந்து விட்டேன். என் மனம் ஒவ்வொரு சமயம் எரிகிற அக்னி குண்டம் மாதிரி தகித்தது. சில சமயம் ஸ்படிகம் போல் நீரையுடைய தடாகத்தைப் போல் குளிர்ந்திருந்தது. என்னுடைய கற்பனைக்கு ஏற்றவாறு மன நிலை வேறுபட்டதைப் பார்த்து எனக்கே அதிசயமாக இருந்தது.

"இறங்க வேண்டிய ஸ்டேஷன் வந்து விட்டது. வள்ளி! அக்காவைத் தயாராகச் சொல்லு!" என்று முனுசாமி கவுண்டர் கூறியது காதில் விழுந்தது. மனோராஜ்யத்தி லிருந்து இறங்கி வந்தேன். (தொடரும்)

# EMPIRE'S *FORWARD LEAP*

## NEW BUSINESS

| | | | |
|---|---|---|---|
| 1954 (Exceeds) | ... | Rs. | 3,82,00,000 |
| 1953 ... | ... | Rs. | 3,22,00,000 |

This substantial increase is symbolic of the growing confidence of the insuring public in the strong financial position and satisfactory service of the Company.



**Applications For Agency invited**

## The EMPIRE OF INDIA LIFE ASSURANCE CO., LTD.

(ESTD. 1897)

Head Office: EMPIRE HOUSE

D. NAOROJI ROAD, BOMBAY-1

BRANCHES ALL OVER INDIA

---

## ஜம்மியின் லிவர்க்யூர்



குழந்தைகளின் ஈரல், குலைக்கட்டிகளுக்கு

**வழக்கமான மாதாந்திர விஜயம்**

நோயாளிகளின் சௌகரியத்தை முன்னிட்டு எமது டாக்டர் மேற்குறித்த ஊர்களுக்கு அதனதன் எதிரே குறித்த தேதிகளில் பிரதி மாதமும் விஜயம் செய்வதால் அவரிடம் ஆலோசனை பெறலாம்.

ஆலோசனைநேரம் : காலை 9 - லிருந்து 11 மணி வரை ; மாலை 3 - லிருந்து 5 மணி வரை

| இடம் | தேதி | | இடம் | தேதி | |
|---|---|---|---|---|---|
| கரூர் | 1 | காலை | திருநெல்வேலி ஜங்ஷன் | 10 | காலை & மாலை |
| சேலம் | 2 | காலை & மாலை | திருநெல்வேலி டவுன் | 11 | காலை |
| ஈரோடு | 3 | காலை | ஸ்ரீவைகுண்டம் | 11 | மாலை |
| திருப்பூர் | 3 | மாலை | அம்பாசமுத்திரம் | 12 | காலை |
| கோயமுத்தூர் | 4 | காலை & மாலை | தென்காசி | 12 | மாலை |
| பாலக்காடு | 5 | காலை | திருவனந்தபுரம் | 13 | காலை & மாலை |
| உடுமலைப்பேட்டை | 5 | மாலை | ராஜபாளையம் | 14 | காலை |
| பழனி | 6 | காலை | ஸ்ரீவில்லிபுத்தூர் | 14 | 2 to 3 p. m. |
| திண்டுக்கல் | 6 | மாலை | காரைக்குடி | 15 | காலை & மாலை |
| மதுரை | 7 & 8 | காலை & மாலை | தேவகோட்டை | 16 | காலை |
| கோவில்பட்டி | 9 | காலை | புதுக்கோட்டை | 16 | மாலை |
| தூத்துக்குடி | 9 | மாலை | | | |

ஆலோசனை இடம் வழக்கப்படியே

விவரங்களுக்கு எழுதவும் :

**ஜம்மி வெங்கடரமணய்யா & சன்ஸ்**

சென்னை-4 ★ திருச்சிராப்பள்ளி (தெப்பக்குளம்) ★ கும்பகோணம் (பெரிய தெரு)

# விலையில்லா முத்து

"அசோக்"

"அம்மா! நம் ஊரில் முத்துக் குளித்தல் நடந்து எத்தனை வருடங்கள் இருக்கும்!"

"இங்கு முத்துக் குளித்தல் நடந்து கொண்டிருக்கையில்தானே, நீ பிறந்தாய். இருபத்தேழு வருஷம் ஆகிறது!" என்று தன் மகனுக்குச் சாதம் பரிமாறிக் கொண்டே சொன்னாள் ராஜாத்தி.

"தூத்துக்குடியில் இத்தனை ஆண்டுகளுக்குப் பிறகு முத்துக் குளித்தல் நடக்க விருக்கிறது. என்னம்மா இப்படி உற்சாகமின்றி இருக்கிறாய்! போர்த்துகீசியருக்குக் கப்பப் பணத்துக்கு ஈடாகத் தென்னாட்டுச் சிற்றரசர்கள் முத்துக்களை அளந்து கொடுத்ததாகவும், டச்சுக்காரர்களும், பிரஞ்சுக்காரர்களும் தூத்துக்குடியிலிருந்து சாக்குச் சாக்காக முத்துக்களை அள்ளிக் கட்டிக் கொண்டு போனதாகவும் சரித்திரம் கூறுகிறது. இவ்வளவு புகழுக்கும் சிறப்புக்கும் உரிய நம் தூத்துக்குடியில் இத்தனை ஆண்டுகளுக்குப் பின் நடக்கவிருக்கும் முத்துக் குளித்தல் உனக்குப் பெருமையைத் தரவில்லையா!"

"அப்பா! போதும் போதும்; முத்துக் குளித்தலைப் பற்றி என்னைப் பெருமை கொள்ளச் சொல்கிறாயா! கடந்த முத்துக் குளித்தலை நினைத்து நினைத்து நான் பொருமுவது போதாதா! என் இதயக் குமுறலை நீ அறிய மாட்டாயா!" ராஜாத்தியின் கண்களிலிருந்து நீர் முத்து முத்தாக உருண்டது.

பொங்கி வரும் கண்ணீரைத் துடைத்துக் கொண்ட ராஜாத்தியம்மாள் மகனைப் பார்த்து "அப்பா! இந்த முத்துக் குளித்தலை நினைத்தாலேயே உள்ளுக்குள் புகைந்து கொண்டிருக்கும் எரிமலையின் ஜுவாலை வெளிக் கிளம்புகிறது......உம்! சாப்பிடு" என்றாள்.

ஏதோ குற்றம் செய்து விட்டுத் தவிப்பவன் போல் இலையின் முன் உட்கார்ந்தான் முத்து.

தன் கண்களில் தேங்கி நிற்கும் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு, கூடத்தில் வந்து உட்கார்ந்தாள் ராஜாத்தி. கடந்த கால நினைவு அலைகள் அவள் இதயக் கடலில் வந்து மோதத் தொடங்கின.

* * *

கட்டு மரத்தைக் கட்டிக் கொண்டு பரந்த கடலில் பயமின்றி வெகு தூரம் சென்று மீன் பிடிக்கும் தொழிலைப் பிறவித் தொழிலாகப் பெற்ற பரத குலத்தில் பிறந்தவள் ராஜாத்தி. சிறு வயதிலேயே தாயை இழந்து, தந்தையின் அரவணைப்பில் செல்வமாக வளர்ந்தவள். தாய் தந்தையற்ற சின்னத் தம்பியும், ராஜாத்தியின் தந்தையான நல்லகண்ணுவால் வளர்க்கப்பட்டான். நல்லகண்ணுவின் தங்கை மகன் தான் சின்னத்தம்பி. ராஜாத்தியும், சின்னத் தம்பியும் அவர்களுக்கு நினைவு தெரிந்ததிலிருந்து ஒரே வீட்டில் ஒரே இடத்தில் ஒன்றாகவே, ஆடிப்பாடி வளர்ந்தவர்கள்.

ராஜாத்தியும், சின்னத் தம்பியும் வளர வளர அவர்களின் அன்பும் வளரத் தொடங்கியது. சின்னத் தம்பி தன் மாமாவுடன் சென்று மீன் பிடிக்கும் பெரிய தம்பியாகி விட்டான். ராஜாத்தியும் யௌவனம் மிளிரும் பருவ மங்கையாகி, வீட்டுக் காரியங்களில் பொறுப்பேற்றுக் கொண்டாள். சின்னஞ்சிறு குழந்தைப் பருவத்தி லிருந்து ஒன்றாகவே இணைந்து வாழ்ந்த ராஜாத்தி—சின்னத்தம்பி இவர்களின் வருங்கால வாழ்வைக் கலியாணமென்ற பந்தத்தினால் அசைக்க முடியாத கற்கோட்டையாக்கி விட்டார் நல்லகண்ணு.

வருடங்கள் ஐந்து ஓடிமறைந்தன. ராஜாத்தி சின்னத்தம்பியின் காதல் சோலையில் அன்பு மலர் அரும்ப வில்லை. பேரக் குழந்தையின் பொக்கை வாய்ச் சிரிப்பைக் காணாமலேயே விண்ணுலகை அடைந்தார் நல்லகண்ணு.

காலையிலிருந்து மாலை வரை தன்னுயிருக்கும் அஞ்சாமல், இடுப்பில் பையுடன் சின்னத்தம்பி கயிற்றைப் பிடித்துக் கொண்டு, கால் இரும்பு வளையத்தில் மாட்டிக் கொண்டு, மூச்சை அடக்கிக் கடலில் மூழ்கிச் சிப்பிகளைச் சேகரித்தான். தன் பங்கு சிப்பிகளைச் சலாபத் துறையிலேயே விற்று விட்டு இருட்டிய பின் வீடு திரும்பிய கணவனின் பக்கத்தில் அமர்ந்து அவன் கால்களைப் பிடித்து விடலானாள் ராஜாத்தி. ராஜாத்தியின் பூப்போன்ற மெல்லிய கரங்களின் ஸ்பரிசத்தினால் மெய் மறந்த சின்ன தம்பி, ராஜாத்தியின் கரங்களைப் பற்றினான்.

"ராஜாத்தி! நாங்கள் நாளையிலிருந்து தொளாயிரம் பாறையில் முத்துக் குளிக்கப் போகிறோம். அங்குள்ள சிப்பிகளில் முத்துக்கள் நன்றாக வளர்ந்திருக்கின்றனவாம்! அங்கே நான் குளித்தெடுக்கும் சிப்பிகளில் கிடைக்கும் முத்துக்கள் அனைத்தும் வைத்து என் ராஜாத்திக்கு முத்துச் சேலையாகச் சாத்தப் போகிறேன்" என்றான் ஆசையோடு.

கன்னங் குழியச் சிரித்தாள் ராஜாத்தி. "அத்தான்! நீங்கள் என்னமோ, குஷியாக முத்துக்குளிக்கப் போய் விடுகிறீர்கள். நீங்கள் வீடு திரும்பும் வரை என் மனம் ஒரு நிலையில் இருப்பதில்லை. நீங்கள் சுகமாக, வீடு வந்து சேர்ந்தாலே போதும்!" என்று தன் மனக் குறையை வெளிப்படுத்தினாள் ராஜாத்தி.

"ஆமாம்; நிறைமாத கர்ப்பிணியாக இருக்கும் உன்னைத் தனியாக விட்டுப் போவது சரி இல்லைதான்! நீ இவ்வளவு பயப்படுவதாயிருந்தால் இனிமேல் போகவில்லை. நாளை ஒரு நாள் மட்டும் போகிறேன். நீ எதையோ நினைத்துக் கொண்டு மனத்தை அலட்டிக் கொள்ளாதே!" என்று ஆறுதல் கூறினான் சின்னத்தம்பி.

ராஜாத்தியும் ஒருவாறு நிம்மதி அடைந்தாள்.

* * *

மறுநாள் காலை வழக்கம் போல் முத்து சலாபத் துறைக்குப் போக ஆயத்தமானான் சின்னத்தம்பி. ராஜாத்தி கட்டிக் கொடுத்த சோற்று மூட்டையை வாங்கிக் கொண்டான். வாட்டத்துடனிருக்கும் ராஜாத்தியின் முகத்தைத் தூக்கி, "நீ ஒன்றும் மனத்தைக் குழப்பிக் கொண்டிருக்காதே! தைரியமாயிரு. நான்

சீக்கிரமே திரும்பி வந்து விடுவேன்" என்று சொல்லி விட்டுச் சென்றான்.

அன்று மத்தியானமே ராஜாத்திக்குப் பிரசவ வேதனை ஆரம்பமாயிற்று. பக்கத்து வீட்டுப் பாட்டியும், அக்கம் பக்கத்திலுள்ளவர்களும் அவளுக்கு உதவினர். மாலை ஐந்து மணி சுமாருக்கு ஓர் ஆண் குழந்தையைப் பிரசவித்தாள் ராஜாத்தி. இந்த சந்தோஷ செய்தியைத் தன் கணவனுக்குத் தெரிவிக்கும்படி பாட்டியிடம் கேட்டுக்கொண்டாள் ராஜாத்தி. மூத்து சலாபத்துறையில் நடந்ததை அந்தப் பேதைப் பெண் எப்படி அறிவாள்!

என்ன சொல்லி என்ன! இறைவனின் திருவிளையாடல் இப்படியிருக்கிறது. சின்னத் தம்பி அதிக நேரம் மூச்சையடக்கிக் கடலுக்குள் இருந்ததினால் உயிர் இழந்து விட்டான்.

* * *

சின்னத் தம்பியின் மரணத்தைக் கேட்டு நினைவிழந்த ராஜாத்தி மூன்று நாட்களுக்குப் பின்னர்தான் சுய நினைவடைந்தாள். தன் கணவனின் அகால மரணத்தை நினைந்து நினைந்து புழுங்கினாள். துயரத்துக்கு மத்தியில் தன் கணவனின் பிரதிபிம்பமான குழந்தையைப் பார்த்து ஆறுதலடைந்தாள். சுருங்கச் சொன்னால், தங்கள் குலவிளக்கான அந்தக் குழந்தையைக் காப்பாற்றவே உயிர் வாழலானாள் ராஜாத்தி. தன் துயரக் கடலைத் தீர்க்க வந்த குழந்தைக்கு 'முத்து' என்று பெயரிட்டாள்.

ராஜாத்தி முத்துவைச் சிறு வயதிலிருந்தே, மீன் பிடிக்கும் தொழிலில் அணுக விடாதபடி கல்வித் துறையிலேயே அவனை முன்னேறச் செய்தாள். தன் இன்ப வாழ்க்கையைப் பாழாக்கி விட்ட கடல் பக்கமே, எட்டிப் பார்க்காதவிதமாக முத்துவைத் தன் கண்காணிப்பில் வைத்துக் கொண்டாள் ராஜாத்தி. முத்து எல்லாவிதங்களிலும் தன் தாயின் சொற்படியே நடந்து வந்தான். ஆனால் கடலை நோக்கிப் போகாமல் அவனால் இருக்க முடியவில்லை. விடுமுறை நாட்களில் தாயாருக்குத் தெரியாமல் முத்து தன் சகாக்களுடன் சேர்ந்து கடலோரத்தில் அரட்டையடிப்பான். பிறந்த வாசனை போய்விடுமா, என்ன! சிறுகச் சிறுகக்கடலில் நீந்தவும் படகைவிடவும் கற்றுக் கொண்டான் அவன். மகனின் செயல்களை அறிந்த ராஜாத்தி மிகவும் வருத்தமடைந்தாள்.

ஒருவாறாக முத்துவின் படிப்பு முடிந்தது. வேலை தேட ஆரம்பித்தான். கப்பலில் நல்ல வேலை கிடைத்தது அவனுக்கு. அவன் ஆசையும் கப்பலில் வேலை பார்க்க வேண்டுமென்பதுதான். ஆனால் ராஜாத்தி இதற்குச் சம்மதிக்கவில்லை. தன் தாயாரின் ஆணையை மீறவும் விருப்பமில்லை முத்துவுக்கு. கடைசியில் ஒரு ஆபீஸில் குமாஸ்தா வேலைக்கு அமர்ந்தான் முத்து. குமாஸ்தா வேலை சற்றும் பிடிக்கவில்லை அவனுக்கு. அவன் ஆர்வமெல்லாம் நீலக் கடலின் அலைகளைக் கிழித்துக் கொண்டு செல்லும் கப்பலில்தான் இருந்தது.

விரைவில் தன் மகனுக்குக் கலியாணம் செய்து தன் கடமையை முடித்துக்கொள்ள எண்ணினாள் ராஜாத்தி. இதற்குச் சரியான பதில்கூறாமல் தட்டிக் கழித்து வந்தான் முத்து.

"அம்மா! மோர் வேணும்" என்ற தன் அருமை மகனின் குரலைக் கேட்டதும் ராஜாத்தியின் நினைவு அலைகள் கலைந்தன.

* * *

ஆறு மாதங்களுக்கு முன்பு தூத்துக்குடி துறைமுகத்தில் பெரிய கப்பல் ஒன்று தங்கியிருந்தது. ஊரிலுள்ள ஜனங்கள் அந்தக் கப்பலைக் காணக் கும்பல் கும்பலாகப் புறப்பட்டனர். அவர்கள் எல்லோரையும் முந்திக் கொண்டு சென்றான் முத்து. அந்தக் கப்பலைப் பார்த்து விட்டுத் திரும்பும்போது கப்பலைச் சுற்றிப் பார்க்க வந்திருந்த கட்டழகி ஒருத்தியிடம் தன் மனத்தைப் பறி கொடுத்தான் முத்து. அவன் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட மங்கையின் பெயர் தங்கம். நாளடைவில் முத்து – தங்கத்தின் காதல் வளர்ந்து வலுவடையத் தொடங்கியது.

இருபத்தேழு ஆண்டுகளுக்குப் பின் மறுபடியும் தூத்துக்குடியில் முத்துக் குளித்தல் ஆரம்பமாகியது. தேசத்தின் பல பாகங்களிலிருந்தும் முத்து வியாபாரிகள் தூத்துக்குடியில் முகாமிட்டனர்.

அந்தி மயங்கும் அழகான மாலை நேரம். ஒருபுறம் கதிரவன் மறைந்து கொண்டும் மறுபுறம் சந்திரன் தன் வெண் கிரணங்களை நீல ஆகாயத்தில் பரப்பிக்கொண்டுமிருந்தான். கடற்கரை மணலில் உட்கார்ந்து கொண்டு இந்த அழகிய காட்சியை மிகவும் ரஸித்துக் கொண்டிருந்தனர் இளம் காதலர்களான முத்துவும் தங்கமும்.

"தங்கம்! நம் கலியாணத்தைப் பற்றி உன் தந்தை என்ன சொல்கிறார்!" என்றான் முத்து.

"முத்து! என் விருப்பத்துக்கு மாறாக என் தந்தை ஒன்றும் சொல்ல மாட்டார். ஆனால் அவர் தனக்கு வரப் போகும் மருமகன் கடல்..." என்று தங்கம் சொல்லி முடிக்கும் முன்பே, முத்து, "என்ன! கடலில் என்ன செய்ய வேண்டுமாம்! சொல், கடலில் குதிக்க வேண்டுமா!..!" என்று துடித்தான்.



தங்கம் சிரித்துக் கொண்டே, "அவசரப் பட வேண்டாம், முத்து! நான் சொல்லுவதை முழுவதையும் கேளுங்கள். வரப் போகும் மருமகன் கடல் தொழிலில் ஈடுபட்டவராக இருக்க வேண்டு மென்பது அவர் ஆசை! பிறவித் தொழிலில் அப்பாவுக்கு அதிக மோகம்! நீங்கள் கடலில் குதித்து விட்டால் அப்புறம் என்ன செய்வதாம்!" என்றாள்.

"அடேயப்பா! இவ்வளவுதானே! நான் குமாஸ்தா வேலை செய்வது உன் தந்தைக்குப் பிடிக்க வில்லை! கடல் தொழில் என் தாயாருக்குப் பிடிக்க வில்லையே! நான் என்ன செய்யட்டும்!" என்றான் முத்து.

தங்கம் ஒன்றும் பேசாதிருந்தாள்.

ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவன் போல் முத்து, "சரி, தங்கம்! உன் தந்தையின் விருப்பம் போல் செய்ய முயல்வேன். தங்கத்தைப் பெற, என்ன வேண்டுமானாலும் நான் செய்யத் தயார்! அது சரி, நீ முத்துசலாபத் துறைக்குப் போகவில்லையா!"

"நானும் அதையே கேட்க இருந்தேன். நாளைக்கு என் அப்பாவுடன் முத்துசலாபத் துறைக்குப் போகலா மென்றிருக்கிறேன். நீங்களும் வருவீர்களா!"

"நானும்தான் நாளைக்குப் போக வேண்டு மென்று இருக்கிறேன். ஆனால் நாளைக்கு ஒரு முக்கியமான வேலை இருக்கிறது. நீ உன் அப்பாவுடன் செல். நான் மாலைக்குள் சலாபத்துறைக்கு வந்து சேருகிறேன்."

* * *

மறு நாள், தங்கம் தன் தந்தையுடன் முத்து சலாபத்துறைக்குச் சென்றாள். சலாபத் துறையைச் சுற்றிப் பார்த்து விட்டு, முத்துவின் வருகைக்காகக் காத்திருந்தாள் தங்கம். ஆனால் முத்துவைக் காணவில்லை. ஏமாற்றமடைந்த தங்கம் தன் தந்தையுடன் கடற்கரை யோரத்தில் உட்கார்ந்தாள். வீட்டுக்குப் புறப்பட இருந்த சமயத்தில் முத்துக் குளிக்கச் சென்றிருந்த சில படகுகள் திரும்பி வந்துகொண்டிருந்தன. அந்தப் படகுகள் கரை சேருவதைப் பார்க்க வேண்டு மென்ற ஆவலினால் தங்கமும் அவள் தந்தையும் சற்றுத் தாமதித்தனர். சில நிமிடங்களில் படகுகள் கரையை அடைந்தன. குளியாட்கள் தங்கள் தங்கள் பங்கு சிப்பிகளை அங்கேயே பொது மக்களுக்கு விற்கலானார்கள். அவர்களில் ஒரு குளியாள் தங்கத்தின் அருகில் வந்து, "அம்மா! சிப்பிகள் வேணுமா!" என்று பணிவுடன் கேட்டான்.

"ரூபாய்க்கு எத்தனை!"

"என்னம்மா! நாங்கள் எங்கள் உயிருக்கும் அஞ்சாமல் கடலில் குதித்துச் சிப்பிகளைக் கொண்டு வருகிறோம். உங்கள் அதிர்ஷ்டத்துக்கு விலை மதிக்க முடியாத நல் முத்துக்கள் கிடைக்கும்! நீங்கள் பேரம் பேசுகிறீர்களே!"

"அதில் ஒன்றும் இல்லாவிட்டால் எங்களுக்கு நஷ்டம்தானே!"

"உங்களுக்கு நஷ்டம் ஒன்றும் வராதம்மா! தயங்காமல் எடுங்கள். ஐயா, அம்மா சந்தேகப்படுறாங்க! நீங்களாவது இந்தச் சிப்பிகளைப் பெற்றுக் கொள்ளுங்கள். இதற்கு ஈடாக உங்கள் தங்கத்தைக் கொடுத்து விடுங்கள்" என்றான் அவன்.

தங்கமும் தங்கத்தின் தந்தையும் அவனை முறைத்துப் பார்த்தனர்.

"ஐயா, தங்கத்தைப் பெற நான் எவ்வளவு சிரமத்துடன் முத்துக் குளித்திருக்கிறேன்! நீங்கள் ஏன் இப்படி என்னை முறைத்துப் பார்க்கிறீர்கள்!" என்றான் சிப்பிக்காரன்.

கோபமுற்றிருந்த தங்கமும், தங்கத்தின் தந்தையும் வியப்போடு, "யார், முத்துவா!" என்றனர் ஏககாலத்தில்.

தங்கத்தின் தந்தை, "முத்து! தங்கத்துக்காக நீ முத்துக் குளித்தாயா! உனக்கு முத்துக் குளிக்கக்கூடத் தெரியுமா!" என்று கேட்டார். பிறகு தங்கத்தின் பக்கம் திரும்பி, "என்னம்மா! இது உன் ஏற்பாடா!" என்றார்.

"அப்பா! இவருக்கு முத்துக் குளிக்கத் தெரியு மென்று எனக்குத் தெரியவே தெரியாது. என்னிடம் இவர் சொல்லவுமில்லை! எனக்கும் ஆச்சரியமாக இருக்கிறது" என்றாள்.

"ஆமாம்; மாமா! இது தங்கத்துக்குத் தெரியாதுதான். 'கடல் தொழில் தெரிந்தவனுக்குத்தான் தங்கத்தைக் கொடுப்பேன்!' என்று சொன்னீர்களாம். ஆறு மாதங்களாகவே நான் முத்துக் குளிக்கப் பழகிக் கொண்டு வந்தேன். இன்று என் திறமையைக் காட்டியுள்ளேன். என் எண்ணமும் ஈடேறியது. இந்தச் சிப்பிகளைத் தங்கத்துக்குப் பரிசமாக நீங்கள் ஏற்றுக் கொள்ள வேண்டும்!" என்றான் முத்து.

தங்கத்தின் தந்தை சிரித்துக் கொண்டே, "பலே ஆளப்பா, நீ! வீட்டுக்குப் போய், உன் தாயாரிடம் பேசலாம் வா!" என்றார். மூவரும் முத்துவின் வீட்டுக்குச் சென்றனர்.

முத்து தன்னிடம் சொல்லாமல் கொள்ளாமல் முத்துக் குளிக்கப் போனதை அறிந்த ராஜாத்தி, திக்பிரமை அடைந்தாள். கடந்த முத்து சலாபத்தின் போது தன் கணவனைக் கடலுக்குப் பலி கொடுத்த அந்தத் தாயின் உள்ளம் பல எண்ணங்களினால் தத்தளித்தது. 'முத்து' 'முத்து' என்று புலம்பத் தொடங்கினாள் அவள். அக்கம் பக்கத்திலுள்ளவர்கள் அவளைத் தேற்றிக் கொண்டிருந்தனர்.

இந்தச் சமயத்தில்தான் முத்து, தங்கம், அவள் தந்தை மூவரும் ராஜாத்தியின் வீட்டில் நுழைந்தனர். அங்கு நடந்த அமளியை ஒருவாறு ஊகித்தறிந்தனர். முத்துவைக் கண்டதும், ராஜாத்தி ஓடிவந்து, தன் மகனைக் கட்டி அணைத்துக் கொண்டாள். "முத்து! வந்து விட்டாயா? என்னிடம் சொல்லாமல் முத்துக் குளிக்கப் போகலாமா! என் விலை மதிப்பற்ற முத்து நீ இருக்க, வேறு முத்துக்கள் எதற்கு!" என்று ஏங்கிக் கொண்டே கூறிய அவள் கண்களில் ஆனந்தக் கண்ணீர் பொங்கியது.

"அம்மா! உங்கள் மகன் முத்துக் குளிக்க மட்டும் போகவில்லை! முத்துக் குளித்து அதற்கு ஈடாகத் தங்கத்தையும் பெற்று வந்திருக்கிறான். இதோ என் மகள் தங்கம் இன்றிலிருந்து உங்கள் முத்துவுக்குத்தான் சொந்தம்!" என்று சொல்லித் தங்கத்தின் கையை முத்துவின் கரத்தில் வைத்து, ராஜாத்தியிடம் ஒப்படைத்தார் தங்கத்தின் தந்தை.

தங்கம் தன் முத்துப் பல்வரிசை நன்றாகத் தெரியும்படி மோகனமாகச் சிரித்தாள்!



# பிரார்த்தனை நிறைவேறியது

ராமப்ரியா

கணவன் காரியாலயத்துக்குச் சென்றதும், குழந்தைகளைப் பள்ளிக்கூடம் அனுப்பி விட்டு ஜானகி சாப்பிட உட்கார்ந்தாள். வாசற் கதவைப் படபட வென்று இடிக்கும் சப்தம் கேட்டதும், யாராக இருக்கலாம் என்று யோசித்தவாறே விரைந்து சென்று திறந்தாள். அவளுடைய சகோதரன் கோபாலன் நின்று கொண்டிருந்தான்.

"அண்ணாவா! வாருங்கள்! ஏது இந்த வெளியில் திடீரென்று வந்திருக்கிறீர்கள்! மன்னியும் உஷாவும் வரவில்லையா! உள்ளே வாருங்கள்!" என்று வரவேற்றாள் ஜானகி.

"என்னவோ திடீரென்று இங்கே சாப்பிட வரவேண்டுமென்று தோன்றியது, வந்தேன்!" என்றான் கோபாலன் சிரித்துக் கொண்டே.

"இன்னும் நீங்கள் சாப்பிடவில்லையா! வாருங்கள், இலை போடுகிறேன்!" என்று கூறியவாறு உள்ளே சென்றாள்.

கோபாலன் சாப்பிட்டு விட்டுக் கையலம்பிக் கொண்டு நாற்காலியில் வந்து உட்கார்ந்தான். வெற்றிலைத் தட்டைக் கோபாலன் அருகில் வைத்து விட்டு நின்றாள் ஜானகி.

"உட்கார், ஜானகி!" என்றான் கோபாலன் வாத்ஸல்யத்தோடு. "நீங்கள் சற்று இளைப்பாறுங்கள்! நான் இன்னும் சாப்பிடவில்லை. இதோ ஒரு நொடியில் சாப்பிட்டு விட்டு வந்து விடுகிறேன்!" என்று சொல்லி விட்டு உள்ளே சென்று சாப்பிட உட்கார்ந்தாள் ஜானகி.

ஜானகிக்குச் சாப்பாட்டில் கவனமே செல்லவில்லை. கோபாலன் திடீரென்று தன் வீட்டுக்குச் சாப்பிட வந்தது வியப்பை அளித்தது. அவள் தமையன் கோபாலன் நகரத்திலேயே பிரபல டாக்டர். ஓய்வு ஒழிச்சல் இல்லாமையினால் அவன் அவள் வீட்டுக்கு வருவதே அபூர்வம். ஜானகிதான் அடிக்கடி சகோதரனைப் போய்ப் பார்த்துவிட்டு வருவாள். இன்றைக்கு அவனுடைய திடீர் விஜயத்தை நினைத்துப் பார்த்த பொழுது மன்னியுடன் ஏதாவது மனஸ்தாபமாயிருக்குமோ என்று தோன்றியது ஜானகிக்கு. சாப்பிட்டு விட்டுக் கோபாலன் அருகில் போய் அவள் உட்கார்ந்தாள்.

"ஏன் அண்ணா மன்னியைக் கூட்டிக் கொண்டு வரவில்லை! உஷா சௌக்கியம் தானே! நான் கூட மன்னியைப் பார்க்க அந்தப் பக்கம் வரவேண்டுமென்றிருந்தேன்!" என்றாள் ஜானகி.

"உன் மன்னிக்கு வர வரப் பைத்தியம் பிடித்து விட்டது, ஜானகி!" என்று கோபாவேசமாகச் சொல்லிவிட்டு நிமிர்ந்து உட்கார்ந்தான் கோபாலன்.

"ஏன் அண்ணா! என்ன விஷயம்! மன்னி என்ன செய்தாள்!" என்று பரபரப்புடன் கேட்டாள் ஜானகி.

"உஷாவுக்கு டைபாய்டு சுரம் வந்தபோது உன் மன்னி திருப்பதி போய் வருவதாகப் பிரார்த்தனை செய்து கொண்டாளாம். சரியென்று சம்மதித்து இந்த வாரத்தில் ஒரு நாள் திருப்பதி போய் வரலாமென்று நான் சொன்னால், இன்று ஒரு பெரிய புதிரை அவிழ்த்து விடுகிறாள். குழந்தை பிழைத்

தெழுந்தால் நாலு பேரிடம் பிச்சை வாங்கி அதை உண்டியில் செலுத்துவதாகவும், திருப்பதி மலைக்கு நடந்தே வருவதாகப் பிரார்த்தனை செய்து கொண்டிருப்பதாகவும் சொல்லுகிறாள். அதைக் கேட்டதும் எனக்குப் பிரமாத கோபம் வந்து விட்டது. நகரத்திலேயே பெரிய டாக்டரின் மனைவி நாலு பேரிடம் பிச்சை கேட்பதென்றால் அதை விட அவமானம் என்ன இருக்கிறது! அப்படி எதற்குப் பைத்தியக்காரத்தனமாக வேண்டிக் கொள்ள வேண்டும் என்று கேட்கிறேன்! என்னுடன் என் சகா டாக்டர் ஒருவரும் வருவதாக இருக்கிறார். அவர் எதிரில் நாம் மலைக்கு நடந்து போகலாமா! அது நன்றாகத்தான் இருக்குமா! உன் மன்னி என் கௌரவத்தைக் கொஞ்சம்கூடக் காப்பாற்ற மாட்டாள் போல் இருக்கிறது! இதற்காக இன்று காலை எங்கள் இருவருக்கும் பெரிய தகராறு. பிரார்த்தனை செய்து கொண்டபடி நடத்தாவிட்டால் குழந்தைக்கு ஏதேனும் வந்து விடும் என்று அவள் பயப்படுகிறாள். இந்தமாதிரி அவளை யார் வேண்டிக் கொள்ளச் சொன்னார்கள்! குழந்தைக்கு என்ன வந்தாலும் நான் பார்த்துக் கொள்கிறேன் என்று சொன்னேன். வார்த்தை தடிக்கவே எனக்கு வீட்டுக்குப் போகப் பிடிக்கவில்லை. சுத்த கர்நாடகங்களைக் கட்டிக் கொண்டால் இந்தத் தொல்லைதான்!" என்று வெறுப்புடன் படபடவென்று பொரிந்து தள்ளினான் கோபாலன்.

ஜானகிக்கு இப்பொழுதுதான் ஒருவாறு விஷயம் புரிந்தது. அண்ணாவின் கோபத்துக்குக் காரணமும் தெரிந்தது. அவள் மன்னி சாந்தாவுக்குத் தெய்வ பக்தி ரொம்ப உண்டு. அதுவும் குழந்தை உஷாவுக்கு ஏதேனும் இலேசாக உடம்புக்கு வந்து விட்டாலும் பிரமாதமாக எல்லாத் தெய்வங்களுக்கும் பிரார்த்தித்துக் கொள்ள ஆரம்பித்து விடுவாள். அண்ணாவும் தெய்வ பக்தி இல்லாதவர் என்று சொல்ல முடியாது. அநாவசியமாகக் கர்நாடகமான முறையில் தேகத்தைச் சிரமப்படுத்திக் கொண்டோ, கௌரவத்தை விட்டுக் கொடுத்துக் கொண்டோ சுவாமிக்குச் செய்வதில் இஷ்டம் கிடையாது. ஜானகி அண்ணாவுக்கு ஆறுதல் சொல்லும் பாவனையில், "வீணாகக் கோபிக்கிறீர்கள், அண்ணா! உங்களுக்குப் பிடிக்காத விஷயம் எதையுமே மன்னி செய்ய மாட்டாள். நீங்கள் வேண்டாம் என்று சொல்லிவிட்டீர்கள் அல்லவா! தானாக அவள் உங்கள் வழிக்கு வந்து விடுவாள்!" என்றாள். கோபாலனும் ஒருவாறு கோபம் தணிந்து தன் காரியத்தைக் கவனிக்கச் சென்றான்.

அன்று சாயங்காலமே சாந்தா, உஷாவையும் அழைத்துக் கொண்டு ஜானகி வீட்டுக்கு வந்தாள். ஜானகி சாந்தாவை வரவேற்று உபசரித்தாள். சற்று



நேரம் பொதுவாக இருவரும் பேசிக் கொண்டிருந்தார்கள். ஜானகியாகவே, "அண்ணா காலையில் சாப்பிட இங்கு வந்திருந்தார்!" என்று மெதுவாகப் பேச்சை ஆரம்பித்தாள்.

"ஆமாம்! அவருக்கு என் மேல் கோபம். நீயே சொல், ஜானகி! நாம் எல்லாரும் என்ன, சீமையிலிருந்தா வந்து விட்டோம்! சுவாமி பிரார்த்தனை செய்வதில்கூடவா சட்டமும்திட்டமும் வேண்டும்! எனக்கிருந்த கவலையில் அப்படி வேண்டிக் கொண்டு விட்டேன். 'இப்பொழுது அதெல்லாம் ஒன்றும் கூடாது. வெறுமனே ஜம்மென்று காரில்தான் தரிசனம் செய்து விட்டு வர வேண்டும்!' என்று ஒரே பிடிவாதமாகச் சொல்லுகிறார். எனக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. இப்பொழுது எதற்காக இங்கு வந்தேன், தெரியுமா! நாலு பேரிடம் பிச்சை வாங்கி உண்டியல் சேர்க்கிறேன் என்று வேண்டிக் கொண்டேன். அவர் கூடாதென்கிறார். அதனால் உன் அண்ணாவின் கௌரவமே குலைந்து போய் விடுமாம். உன் ஒருத்தியிடமாவது பிச்சை வாங்கிப் போகலாம் என்றுதான் வந்தேன்!" என்று கூறினாள்.

ஜானகிக்குச் சாந்தாவைப் பார்க்கப் பரிதாபமாக இருந்தது. "நீங்கள் ஒன்றுக்கும் கவலைப்படாதீர்கள், மன்னி! கணவன்தானே பெண்களுக்குத் தெய்வம்! ஆகையால் நீங்கள் அண்ணா இஷ்டப்படியே காரில் போய் வாருங்கள். நாலு பேரிடம் கேட்பதற்குப் பதிலாக, நான் ஒருத்தி காசு போட்டு விடுகிறேன். பக்கத்து வீட்டு அம்மாளை ரகசியமாக அழைத்து வருகிறேன். அவரிடமும் வாங்கிக் கொள்ளுங்கள். இப்படி வேண்டிக் கொள்ளுமாறு புத்தியைக் கொடுத்த அந்தச் சுவாமியே பிரார்த்தனையை நிறைவேற்றிக் கொள்ளுவான்" என்று ஒரு ரூபாயைச் சாந்தாவிடம் கொடுத்தாள்.

சாந்தா எழுந்து வெகு பயபக்தியுடன் பணத்தைப் பிச்சை வாங்குவது போலவே வாங்கிக் கொண்டாள். ஜானகி அடுத்த வீட்டு அம்மாளையும்; எதிர் வீட்டு அம்மாளையும் அழைத்து விஷயத்தைச் சொன்னாள். அவர்களும் தலைக்கு எட்டணா போட்டார்கள். சாந்தாவுக்கு அப்புறம் மனசு கொஞ்சம் சமாதானமடைந்தது.

* * *

சாந்தாவும் கோபாலனும் திருப்பதி போய் மூன்று நாட்களாகியும் திரும்பி வரவில்லை. ஜானகிக்கு ஒரே கவலையாகப் போய் விட்டது. போகும் பொழுது கோபாலன் ஏட்டிக்குப் போட்டியாகப் பேசிக் கொண்டும் தகராறு செய்து கொண்டும் போனதால் ஆபத்து ஏதும் நேர்ந்து விடாமலிருக்க வேண்டுமே என்று கவலைப்பட்டுக் கொண்டிருந்தாள்.

நான்காம் நாள் சாயங்காலம் கோபாலனும் சாந்தாவும் வந்தார்கள். சாந்தா திருப்பதிப் பிரசாதங்களெல்லாவற்றையும் நாத்தனாரிடம் எடுத்துக் கொடுத்தாள். "பிரார்த்தனையையெல்லாம் செலுத்தி விட்டீர்களா, மன்னி! பிரயாணம் எப்படி இருந்தது!" என்று குசலம் விசாரித்தாள் ஜானகி.

## புதிய யோசனை!



காக்கை:— நல்ல காலம்! கற்களுக்குப் பதில் வைக்கோல் குழல் கிடைத்ததே!

---

"ஜானகியிடம் முதலிலிருந்து எல்லாம் விவரமாகச் சொல்லட்டுமா!" என்று சாந்தா கோபாலனிடம் கேட்டாள். அவன் முகத்தில் விஷமப் புன்னகை அரும்பியது. அதைக் கவனித்த ஜானகி வியப்புடன் தன் தமையனையும் மன்னியையும் மாறி மாறிப் பார்த்தாள்.

"எல்லாவற்றையும் சொல்லுவதற்குத் தானே என்னையும் அழைத்து வந்திருக்கிறாய்! சொல்லேன்!" என்றான் கோபாலன், பொய்க் கோபத்தை வருவித்துக் கொண்டு.

"இதைக் கேள், ஜானகி! அன்றைக்கு உன் அண்ணா என்னைக் கர்நாடகமாக வேண்டிக் கொண்டதற்குப் பலவாறு கோபித்துக் கொண்டு, 'நடந்து போகக் கூடாது, காரில் தான் போக வேண்டும்' என்று கண்டிப்பாகச் சொல்லி விட்டார். நானும் அரை மனத்தோடு சம்மதித்தேன். இங்கேயே சாப்பாடெல்லாவற்றையும் முடித்துக் கொண்டு பன்னிரண்டு மணி சுமாருக்குப் புறப்பட்டோம். திருச்சானூர் போகும்போது மணி நான்கு. அங்கே பிதவஸ்தான சத்திரத்தில் இறங்கிக் காப்பி, பலகாரம் சாப்பிட்டோம். இன்னொன்று சொல்ல மறந்து விட்டேனே. உன் அண்ணாவுடன் அவரது சகா டாக்டர் ஒருவரும் வந்திருந்தார். இருட்டுவதற்குள் மலைக்குப் போய்விட வேண்டுமென்று தீர்மானித்திருந்தோம். மலையடிவாரத்துக்குப் போகும் வழியிலேயே காரில் ஏதோ வெடிகுண்டு போட்ட மாதிரி சத்தம் கேட்டது. கார் நின்று விட்டது. டிரைவர், உன் அண்ணா, இவருடைய நண்பர் எல்லாருமாக இறங்கி என்ன

## பதிலுக்குப் பதில்!




கோளாறு என்று பார்த்தார்கள். புதிய காரின் இரு டயர்களும் வெடித்துப் போய் விட்டன. இனி பிரயோசனப்படாது என்று மூவருமாக முடிவுக்கு வந்து விட்டனர். ஒரு டயர் போனாலும் மாற்று டயரை மாட்டிக் கொண்டு போகலாம். இரண்டும் போனதால் என்ன செய்வதென்று தெரியவில்லை. இனி கார் நகர வேண்டுமென்றால் இரண்டு புதிய டயர்கள் வாங்கிப் போட்டால்தான் முடியும் என்று தீர்மானமாகத் தெரிந்து விட்டது. திடீரென்று இப்படி டயர் வெடிக்கக் காரணமே இல்லையே என்று உன் அண்ணா சொன்னார். நான் வாயறியாமல், 'வேறென்ன காரணம்!' என்று மெதுவாக ஆரம்பித்தேன். அப்பப்பா! அப்பொழுது இவர் என்னைப் பார்த்த பார்வை. இப்பொழுது நினைத்துக் கொண்டாலும் பயமாக இருக்கிறது!'' என்று சொல்லிச் சற்று நிறுத்தினாள் சாந்தா.

''பயப்படுகிற ஆளைப் பார்த்தால் தெரியவில்லை!'' என்று சிரித்தான் கோபாலன்.

''அப்புறம் சீக்கிரம் சொல்லுங்கள், மன்னி! ரொம்பவும் சுவாரசியமாக இருக்கிறதே!'' என்று ஆவலுடன் கேட்டாள் ஜானகி.

''அதெல்லாம் கொஞ்சம் கூடக் கோணாமல் அழகாகச் சொல்லுவாள். சற்று மூச்சு விட்டு விட்டு வரட்டும்!'' என்றான் டாக்டர் கோபாலன் பரிகாசமாக.

''நான் என்ன கதையா சொல்கிறேன்! நடந்தவற்றைத் தானே சொல்லுகிறேன்! கேள், ஜானகி! காரை எல்லாருமாகத் தள்ளிக் கொண்டு சத்திரத்தின் வாசலுக்கு வந்தோம். மேற்கொண்டு என்ன செய்வது என்று மூவரும் மகாநாடு கூடினார்கள். கடைசியில் டிரைவரைச் சென்னைக்கு அனுப்பிப் புது டயர்களை வாங்கிவரச் சொல்வது என்று தீர்மானித்தார்கள். அதற்குள் தேவஸ்தான மானேஜரும் அங்கு வந்து சேர்ந்தார். இரு புதிய டயர்கள் வாங்கவும், டிரைவர் சென்னைக்குப் போய்த் திரும்பி வருவதற்கும் சரியாக நூற்றைம்பது ரூபாய் ஆகும் என்று கணக்குப் போட்டார்கள். அவ்வளவு பணம் நாங்கள் கொண்டு போகவில்லை. தேவஸ்தான மானேஜர் ரொம்ப தங்கமான மனிதர். நாங்கள் படும் அவஸ்தையைப் பார்த்துத் தாமாகவே முன் வந்து உதவினார். அவருக்கு எவ்விதம் நன்றி தெரிவிப்பது என்று தெரியவில்லை. வேங்கடாசலபதியே மலையிலிருந்து இறங்கி வந்து உதவி செய்வது போல் தோன்றியது. பணத்தைக் கொடுத்து டிரைவரை இரவு வண்டியில் சென்னைக்கு அனுப்பினோம். அவன் டயர்களுடன் மறுநாள் சாயங்காலம் தான் வந்து சேர முடியும். அதுவரை கீழ்த்திருப்பதியிலேயே இருப்பது என்று உன் அண்ணாவும் அவர் நண்பரும் பேசிக் கொண்டார்கள். நான்தான் சும்மா இராமல், 'நடந்து போனால் என்ன!' என்று கேட்டேன். சத்திரத்து மானேஜர், 'தாராளமாகப் போகலாம். நடந்து போவது ரொம்ப விசேஷம்!' என்றார். உடனே உன் அண்ணாவின் நண்பரும், 'ஆமாம், ஸார்! நேரத்தை வீணாக்காமல் நடந்தேதான் போய் விடுவோம்!' என்றார். உன் அண்ணாவுக்கு வாயைத் திறக்க வழியே இல்லை. எனவே, சரியென்று சம்மதித்தார்.

''மறுநாள் விடியற்காலை நான்கு மணிக்கெல்லாம் எழுந்து குளித்து விட்டு மலை ஏற ஆரம்பித்தோம். என்ன குதூகலமாக நடந்து சென்றோம், தெரியுமா! நானும் உங்கள் அண்ணாவும் மாறி மாறி உஷாவைத் தூக்கிக் கொண்டு வேறு சென்றோம். உன் அண்ணாவின் பிடிவாத குணத்துக்கு மாறாக, பகவானே நான் செய்து கொண்ட பிரார்த்தனைகளையும் நிறைவேற்றிக் கொண்டு விட்டார். நான் பிச்சை எடுப்பது ஒருபுறம் இருக்கட்டும். உன் அண்ணாவே சத்திரத்து மானேஜரிடத்தில் கை நீட்டிப் பணம் வாங்கும் நிலைமை ஏற்பட்டுவிட்டதே! காரில் போக வேண்டும் என்று சொன்னவருக்கு நூற்றைம்பது ரூபாய் செலவில் காலிலேயே போகும்படி ஆகிவிட்டது. இதிலிருந்து என்ன தெரிகிறது! நம்மையும் மீறிய சக்தி நம்மை ஆட்டி வைக்கிறது என்பது தானே!'' என்று கூறி முடித்தாள்.

''நான் தெய்வம் இல்லை என்று எங்கே சொன்னேன்! ஆனாலும் உன் பிரார்த்தனை தானாகவே இப்படி அற்புதமாக நிறைவேறும் என்று நான் நினைக்கவில்லை. நான் அன்று சொன்னதெல்லாம் தப்புதான்!'' என்றான் கோபாலன் சிரித்துக்கொண்டே.

''ரொம்ப ஆச்சரியந்தான், மன்னி! நம் பெரியோர்கள் தெரியாமலா ஓரேயடியாகத் தெய்வத்தை நம்பிக் கொண்டிருந்தார்கள்! அவர்களுக்கு என்ன குறைந்து போய் விட்டது!'' என்று வேதாந்தம் பேசினாள் ஜானகி.

''சரி சரி, இருவருமாக வேதாந்த விசாரணையில் இறங்கி விட்டீர்களே! நான் அன்று சொன்னது தப்பு என்றுதான் ஒப்புக் கொண்டாகி விட்டதே! அப்புறம் எதற்காக இந்தப் பேச்சு!'' என்று பேச்சுக்கு முற்றுப்புள்ளி வைத்தான் கோபாலன்.

# டூமெக்ஸ் பால் உணவு விலையில் அதிகமானதா ?

இல்லை. கடைகளில் விற்கப்படும் எல்லாப் பால் உணவுகளின் விலையைப் போன்றே டூமெக்ஸ் பால் உணவும் விலையிடப்பட்டிருக்கிறது. பார்ப்பதற்கு டின் சிறியதாக காணப்பட்ட போதிலும் எடையில் சரியானது. இதிலுள்ள பால் உணவு வெகு சன்னமான மாவாக இருப்பதனுல் டின்னில் நிறைந்து இருக்கிறது. இது தண்ணீரில் வெகு சுலப மாகக் கரையக்கூடியது, குழந்தைகள் எளிதில் ஜீரணிக்கக்கூடியது.

டூமெக்ஸ் பால் உணவு டூபர்கொலின் டெஸ்டெட் பசுக்களின் பாலினின்றே தயாரிக்கப்படுகிறதென்பது குறிப்பிடத்தக்கது. இதில் விடமின்கள் அதிகமாகவும் கொழுப்புச் சத்து குறைவாகவும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. ஆகவே இது உங்கள் குழந்தைகளுக்கு வேண்டிய போஷாக்கு அளிக்கக் கூடியது. நிர்பயமானதோடு மிகவும் பரிசுத்தமானது. ஆனுல் விலை அதிகமில்லை. குழந்தைகள் டூமெக்ஸ் பால் உணவை அருந்தி போஷாக்குடன் வளருவதில் சந்தேகமில்லை.

# டூமெக்ஸ்
# பால் உணவு

உங்கள் குழந்தைகளுக்கு டூமெக்ஸ் பால் உணவைக் கொடுத்து அவர்களது வளர்ச்சியைக் கவனியுங்கள்

# ஆரோக்கிய வாழ்வு

சீதாலக்ஷ்மி குமாரசாமி

## 20. உணவில் கலப்படம்

இன்றைய உலகத்தில் எல்லாமே கலப்படமாக இருக்கின்றன. எதை எடுத்தாலும் கலப்படம் தான். சுத்தமான பொருள் கிடைப்பது குதிரைக் கொம்பாகி விட்டது. மற்ற எதில் வேண்டுமானாலும் கலப்படம் செய்வதைச் சகிக்கலாம். ஆனால் உணவுப் பொருள்களில் கலப்படம் செய்வது சகிக்க முடியாத, பொறுக்க முடியாத குற்றமாகும்.

அன்றாட தினசரி வாழ்க்கையில் நாம் உபயோகிக்கும் உணவு வகைகளைப் பற்றிச் சற்று சிந்தித்துப் பார்த்தால் உள்ளம் கொதியாமல் இருக்க முடியவில்லை. தற்கால அவசர அலங்கோல வாழ்க்கையில் எல்லா வஸ்துக்களையுமே சொந்தமாய்த் தயாரித்துக் கொள்ள முடிவதில்லை. கடைகளில்தான் வாங்கி உபயோகித்துக் கொள்ள வேண்டியிருக்கிறது.

ஒரு பொருளைத் திருடினால் திருடன் என்று சொல்லுகிறோம். ஒருவனைக் கொலை செய்தால் கொலைகாரன் என்று சொல்லுகிறோம். ஒருவர் பொருளை வாங்கிக் கொண்டு திருப்பித்தரவில்லையென்றால் மோசக்காரன் என்று சொல்லுகிறோம். ஆனால், உயிரை வளர்க்கும் உணவில் கலப்படம் செய்து மக்களின் ஆரோக்கியம், ஆற்றல், ஏன், உயிரையே சிறிது சிறிதாக மாய்க்கும் நபர்களை என்ன என்று சொல்லுவது !

இதற்காகவென்று உணவு கலப்படத் தடைச் சட்டங்கள் பல உண்டு. ஆனால் அவை சரிவர அமுலில் இருப்பதாகத் தெரியவில்லை. பெரும் அளவில் இவைகளை விஸ்தரித்துக் கண்டிப்பான முறையில் அமுல் நடத்தப்பட வேண்டும். அப்பொழுதுதான் பொதுஜனங்களின் ஆரோக்கியம் காப்பாற்றப்படும்.

நாம் முக்கியமாய் உபயோகிக்கும் அரிசியை எடுத்துக் கொள்வோம். லாபத்தைக் கருதி அதில் கல், மண் எவ்வளவு சேர்க்கப்படுகின்றன ! ஏதோ கடையில் வாங்கிக் கொண்டு வந்தோம், உபயோகித்தோம் என்ற நிம்மதி இல்லையே ! ஒரு மூட்டை அரிசி கொண்டு வந்தால் வீட்டுப் பெண்மணிகளுக்கே ஒரு வாரத்துக்கு வேலை இருக்கும். புடைத்துச் சிறு நொய்களை நீக்க வேண்டும். இல்லையானால் சாதம் குறைந்து விடும். நொய் ஒரு மூட்டைக்கு 2 படி முதல் 5 படிவரை போவதும் உண்டு. பின் கல், நெல் பொறுக்கும் படலம் ஆரம்பமாகும்.

முன் காலத்தில் வீட்டுக்கு வேண்டிய அரிசிக்கு வீட்டில் நெல் குத்திக் கொள்வார்கள். பருப்பு வகைகளையும் வீட்டில் தயாரித்துக் கொள்வார்கள். வேண்டிய நல்லெண்ணெய்க்கு எள் சுத்தம் செய்து ஆட்டி வைத்துக் கொள்வார்கள். தேங்காய் கொப்பரை வாங்கித் தேங்காயெண்ணெய் ஆட்டிக் கொள்வதும் உண்டு. மற்றும் புளி ஒரு வருஷத்துக்கு வேண்டியது தயாராகி விடும். வெல்லமும் நன்றாகக் காய்ச்சி வருஷத்துக்கு வேண்டியது வீட்டில் வந்து சேர்ந்து விடும். மற்றும் வற்றல், வடாம் வகைகள், ஊறுகாய் தினுசுகள் வருடத்துக்கு வேண்டியவை அந்தந்தக் காலத்தில் தயார் செய்து கொள்வார்கள்.

இவ்வாறு செய்ய இக்காலத்திய அவசர அலங்கோல வாழ்வில் எல்லோராலும் முடிவதில்லை. மாதச் சம்பளம் பெறும் குடும்பத்தில் நடவாத காரியம். மாதா மாதம் கடைகளில் வேண்டியதை வாங்கித்தான் ஆக வேண்டும்.

அரிசி விஷயத்தில் தற்போது அரசாங்கம் சற்றுக் கவனம் செலுத்தியிருப்பது வரவேற்க வேண்டிய விஷயம்தான். அதாவது, இனி, புதிதாக நெல் அரைக்கும் இயந்திரங்கள் அமைக்க லைசென்ஸ் கொடுப்பதில்லை, கைக்குத்தல் அரிசிக்கு ஆக்கம் அளிப்பது என்று முடிவு செய்திருக்கிறார்கள். ஆனால் இந்தக் கைக்குத்தல் அரிசி தயாரிப்பவர்களில் சிலர் நெல்லை ஒரு தடவை மெஷினில் கொடுத்து, இரண்டாவது தடவை பாலிஷ் செய்யாமல் கைக்குத்தல் அரிசி என்று சொல்லி மக்களை ஏமாற்றுகின்றனர். தொழில் நுணுக்கமறியாத பொதுஜனங்கள் சத்துள்ள அரிசி என்று நினைத்து இவைகளை வாங்கி ஏமாந்து போகின்றனர். அரிசியில் போஷணை உள்ள பாகம் அரிசியின் மேல் ஒட்டியுள்ள தவிடும், அரிசி முனையில் இருக்கும் கருவாகிய முனையும்தான். மெஷினில் ஒரு தடவை தீட்டுவதினால் அரிசித் தவிடு அவ்வளவு போகாவிட்டாலும், அரிசியின் கருவாகிய முனை மடியத்தான் செய்யும். தீட்டிய அரிசியைவிட இது பரவாயில்லைதான். நெடு நாளையப் பிரசாரத்தினால் பொது மக்கள் ஆரோக்கியத்தின்மேல் தற்போது சிறிது அக்கறை கொண்டுள்ளனர். அவர்கள் கைக்குத்தல் அரிசியை வாங்கும்போது ஏமாற்றப் படுகிறார்கள். இதனை நன்கு கவனித்துத் தக்க பாதுகாப்பளிக்க வேண்டும்.

பருப்பு வகைகளை எடுத்துக் கொள்வோம். துவரம்பருப்பு நம் அன்றாட உணவில் உபயோகப்படும் முக்கிய உணவுப் பொருள். இதில் நிறையப் புரதச் சத்து இருக்கின்றது. புலால் உண்ணாதவர்களுக்குப் பருப்பு வகைகள் இல்லாமல் வாழவே முடியாது. அவ்வளவு முக்கியமான உணவுப் பொருள் நல்ல முறையில் கிடைப்பது கிடையாது. லாபத்துக்காகவென்றே கல், மண், உமி, தூசி ஒரு மூட்டைக்குக் குறைந்தது இரண்டு படி முதல் ஐந்துபடி வரை தாராளமாய்க் கலக்கிறார்கள். சிறிய அளவில் வாங்குபவர்களுக்கு அவ்வளவாகத் தெரியாது. ஏதோ கால் ஆழாக்கு, அரை ஆழாக்கு சேதமாயிற்று, பரவாயில்லை

என்று நினைக்கலாம். மூட்டைக் கணக்கில் வாங்கிச் சுத்தம் செய்தால் கல், மண், தூசி, தும்பு ஒரு மூறம் சேர்ந்து விடுகின்றன. சரி, இவைகளை நாம் சாப்பிடப் போவது கிடையாது. எப்படியும் சுத்தம் செய்துதான் உபயோகிப்போம். ஆனால் பருப்பு வகைகளிலேயே மோசடி நடந்தால் என்ன செய்வது!

துவரம் பருப்புடன் அதே தோற்றமுள்ள கேஸரி பருப்பு எனும், 'லாதிரஸ் சாடிவஸ்' எனும், ஒருவகை விஷச் சத்துள்ள பருப்பைக் கலந்து விற்பனை செய்கின்றார்கள். இவ் விஷயம் அநேகருக்குத் தெரியாது. தெரியாத மக்கள் வாங்கி உபயோகிப்பதனால் அவ் விஷப் பருப்பு நாளடைவில் உடலில் தன் வேலையைச் செய்ய ஆரம்பிக்கின்றது. நரம்புகளைப் பலவீனப் படுத்துகிறது. அதன் மூலமாய் நாளடைவில் பாரிச வாயு உண்டாகி விடுகிறது. இந்த வகைப் பருப்பை உண்டால் நாளடைவில்பாரிச வாயு உண்டாகும் என்று ஆராய்ச்சியாளர்களே கண்டு பிடித்திருக்கின்றார்கள். ஆனால் இன்று நடப்பதென்ன! பாரிச வாயுவின் ஆரம்பமாகிய கை, கால் வலித்தல், மூட்டுகள் வலித்தல், முதுகு வலித்தல் முதலியன ஏற்படுகின்றன. பருப்பையே சாப்பிட வேண்டாம் என்று வைத்தியர்கள் சொல்லி விடுகின்றனர். சரி, இனிச் சாப்பிடாமல் வாயைக் கஷ்டப்பட்டுக் கட்டுவோம். ஆனால் இதுவரை சாப்பிட்டதினால் உண்டான கோளாறுகளுக்கு என்ன செய்வது! டாக்டர், மருந்து, ஆஸ்பத்திரி இம்மாதிரி வாழ்க்கையில் ஒரு பகுதியைக் கழிக்க வேண்டியதுதானா! எத்தனை பேர் இம் மாதிரிப் பாரிசவாயு ஏற்பட்டுத் தங்கள் வாழ்நாளையே வீணாகக் கழிக்கின்றனர். இதை நினைக்க, நினைக்க நெஞ்சம் பொறுக்கவில்லை.

பாரிச வாயு வர மற்றும் பல காரணங்கள் உண்டு. குடும்ப பாரம்பரியம், ஒழுக்கம் முதலியவைகளும் இதற்குக் காரணங்களாகும். ஆனால் அதனையும் நாளடைவில் மாற்றலாம், உணவு மட்டும் சீராக அமைந்து விட்டால். உடலையே உருவாக்கும் உணவின் தன்மை கெட்டால் இந்தப் பாரிச வாயு மட்டுமல்ல; மற்றும் என்ன வேண்டுமானாலும் வரலாமல்லவா!

உளுத்தம் பருப்பை எடுத்துக் கொள்வோம். கனிசத்தைக் காணப் பருப்பு வகைகளில் தண்ணீர் தெளித்து அதிகமாக்குவது ஒருவகை மோசம். அதிருக்கட்டும், உளுத்தம் பருப்புடன் சிறு காராமணிப் பருப்பைக் கலந்து விடுகிறார்கள். பார்க்கப் பார்வையாய் இருக்கிறது என்று தோசைக்கு, இட்டிலிக்கு ஊறப்போட்டு, உரலில் ஆட்டினால் உரலுடன் இருக்கிறதே அன்றி வெண்ணெய் போலத் திரண்டு வருவதில்லை. பாசிப் பயறிலும் கலப்பு. இவைகளினால் உடலுக்கு என்ன கெடுதல் நேர்ந்து விடப் போகிறது எனலாம். துவரம் பருப்பு என்றால் அசல் துவரம்பருப்பே கிடைக்க வேண்டும். உளுத்தம்பருப்பு என்றால் அசல் உளுத்தம் பருப்பே கிடைக்க வேண்டும். விலை கொடுத்து வாங்கக் கூடியவர்களுக்கு மட்டுமல்ல, ஏழைகளுக்கும் நம்பிக்கையுடன் கிடைக்க வேண்டும். இதனைப் பாதுகாப்பது அரசாங்கத்தின் கடமை ஆகும்.

புரதச் சத்தை அளிக்கும் அரிசி, பருப்பு விஷயத்தை விட்டுக் கொழுப்புச் சத்தை அளிக்கும் நெய், நல்லெண்ணெய், தேங்காயெண்ணெய் முதலியவைகளைக் கவனிப்போம்.

நெய் விஷயம் மிக மிக மோசம். அசல் நெய் கிடைப்பதே கிடையாது. அப்படிக் கிடைத்தாலும் விலையோ அதிகம். நெய்யை உபயோகிக்கக் கூடியவர்கள் நூற்றில் பத்து பேர் இருப்பார்கள். மற்றவர்கள் டால்டா, நல்லெண்ணெய், தேங்காயெண்ணெய், கடலெண்ணெய் இவைகளில்தான் வாழ்கின்றார்கள். நெய்யில் ஏதேதோ தாராளமாய்க் கலக்க முடிகின்றது. அதனால் நெய் வியாபாரிகளுக்கு நல்ல லாபம்தான். ஆனால் மக்கள் ஏமாற்றப் படுகிறார்கள் என்பது மறுக்க முடியாத உண்மை. எத்தனை ஓட்டல்களில் நெய் ஒரு டின்னும், கலப்பு நான்கு டின்னும் கலந்து நெய் பட்சணமென்று விற்கிறார்கள்!

ஏழைகளும் வாங்கி உபயோகிக்கும் அளவுக்கு நெய்யின் விலை குறைய வேண்டும். அதில் கலப்படம் கூடாது. பன்றிக் கொழுப்பு, பாம்புக் கொழுப்பு, மாட்டுக் கொழுப்பு, மார்கோ போன்றவை சேர்த்துக் கலப்படம் செய்யக் கூடாது.

* * *

நல்லெண்ணெய் விஷயம் சொல்ல வேண்டாம். இப்பொழுது விற்கும் விலையில் எள் மூட்டையை வாங்கி, சுத்தம் செய்து, நல்ல வெல்லம் போட்டு, செக்குக்குக் கூலி கொடுத்து ஆட்டினால் எண்ணெய் மண்டிக் காரர்கள் எப்படி இவ்வளவு குறைந்த விலையில் விற்பனை செய்கிறார்கள் என்று எண்ணத் தோன்றும். விற்கும்விலையைவிட அதிகக்கொள் முதலாகிறது. ஆனால் குறைந்த விலையில் விற்கிறார்களே என்றால், எல்லாம் கலப்படம்தான் காரணம். சுத்தம் செய்வது பெயரளவில்தான். நல்லவெல்லம், பனைவெல்லம் கனவிலும் போடுவதில்லை. மொலாசிஸ் என்ற சர்க்கரை ஆலையில் கழித்த சேற்றைப் போன்ற கழிவுதான் உபயோகிப்பார்கள். பிண்ணாக்கு அதிகமாக்க ஊற வைத்த, புளித்த கடலைப் பிண்ணாக்கு நீர் கலப்பார்கள். இத்தனைக்கும் பிறகு கடலெண்ணெய்க் கலப்பு வேறு நடக்கும். "வைத்தியருக்குக் கொடுப்பதை வாணியருக்குக் கொடு" என்ற பழமொழியுண்டு. அவ்வளவு உயர்ந்தது நல்லெண்ணெய். சுத்தமாகக் கிடைக்கவில்லையென்றால் யாரிடம் முறையிடுவது! தேங்காய் எண்ணெயிலும் பல கலப்பு உண்டு. கடலெண்ணெயின் வாசனையை நீக்கி விட்டு எதனுடன் கலந்தாலும் இரண்டறக் கலந்து விடும்.

இப்பொழுதெல்லாம் மக்கள் ஆரோக்கிய அறிவு அடைந்து விட்டார்கள் என்று, வனஸ்பதிகளில் டப்பாவின் மேலேயே ஏ, டி வைடமின்கள் சேர்க்கப்பட்டுள்ளது என்று அச்சடித்தே வருகிறது. இதைச் சரிவரச் செய்கிறார்களா என்பதையும் கண்காணிக்க வேண்டும். ஏனெனில் இவைகளில் இக் குறையிருந்தால் தான் இதை உபயோகிப்பவர்களின் கண் பார்வை மங்கி விடுகிறது என்ற புகார் இருக்கிறது. இக் குறை நீக்கப்பட்டு விட்டதென்றால் வரவேற்கக் கூடியதே. ஜீரணம் ஆகச் சற்றுக் கடினம் என்பது தவிர வேறு குற்றமில்லை. ஆனால் எதையும் அளவாக உபயோகிக்க வேண்டும். (தொடரும்)

# ஹாஸ்யக் களஞ்சியம்



"என்ன மாமா! தலை கீழாப் படிச்சுண்டு இருக்கேள்?"
"இது சிரசாசனப் புஸ்தகம்டா!"
"இருந்தா என்ன? நேரா வெச்சுண்டு படியுங்கோளேன்!"



"ஆமாம், ஆபீஸ் பையன் ரொம்ப நல்ல பையன். லீவே எடுப்பதில்லை, சிகரெட் பிடிப்பதே இல்லை. வேலையும் செய்வதே இல்லை."




"மழைக் கோட்டு ஒழுகுமா என்று பார்த்துத்தான் வாங்குவேன் என்றார்!...!"



"நான் ஒரு சங்கீத வித்வான், உங்கள் வீட்டில் குடி இருக்க இடம் கொடுக்க முடியுமா?"
"எங்கே கொஞ்சம் பாடிக் காட்டுங்கள். அப்புறம் சொல்கிறேன்."

# சாமு






"சோப்பை ஏன் கீழே வைத்து விட்டுப் போனீர்கள்?"
"ஏன், குழந்தை தின்று விட்டானா?
"தின்று விட்டு அதோடு இல்லாமல் இன்னும் கொஞ்சம் வேணும் என்று கத்துகிறான்."

"பார்த்தீங்களா! ஒரு துரும்பு கூட அவள் எடுக்க மாட்டாள் என்றேனே!
"அம்மா, அதை வாங்கிண்டாங்களா? எங்களுடையது அல்லாததை நாங்களும் தொடமாட்டோம்."



"அவ்வளவு பெரிய சமாசாரத்தை இந்த வாண்டுப் பயலிடம் சொல்லி அனுப்பினீர்களே! ஏன் வீட்டில் இதை விடச் சின்னக் குழந்தை இல்லையோ?"
"இருக்கிறான், அவன் தூளியில் தூங்கிக் கொண்டு இருக்கிறான்."






## 35. முடிசூட்டு விழா

ஆனந்த தீர்த்தருக்கும் சியாமளா தேவிக்கும் துறவி சொன்ன அதிசய விவரங்களைக் கேட்கக் கேட்க ஆச்சரியம் தாங்கவில்லை. வருஷக் கணக்கில் கல்லறையில் மந்திர சக்தியின் வசப்பட்டு உணர்வு இழந்து கிடந்த அவர்கள் இருவருக்கும் தங்களைப் பற்றிய பழைய நினைவுகள் கொஞ்சம் கொஞ்சமாக வரத் தொடங்கின.

மகாராஜாவா யிருந்த ஆனந்த தீர்த்தர் இப்போது சிறையிலிருந்தவர் மாதிரி யல்லவா காணப் படுகிறார்! ராணி சியாமளா தேவி மாத்திரம் என்ன! அவளும் அவரைப் போலத்தான் இருந்தாள்.

நடந்தவைகளை யெல்லாம் நினைக்க நினைக்க ஆனந்த தீர்த்தருக்கு மனம் பொறுக்கவே இல்லை.

"குருதேவா, ஒரு உயிரைக் கொன்றவனுக்கே கடுமையான தண்டனை விதிக்கிறோம். ஆனால் நாட்டு மக்களையும் அரசனையும் அவன் குடும்பத்தையும் சொல்லொணாக் கொடுமைகளுக்கு உள்ளாக்கிய கொடியவனுக்கு என்ன தண்டனை விதிப்பது? பாவி, எங்கள் சுய நினைவையே அபகரித்து விட்டானே!" என்று ஆனந்ததீர்த்தர் கோபத்தினால் துடித்துக் கொண்டே கூறினார்.

"ஆனந்ததீர்த்தரே, கொடியவர்களுக்கு அழிவு காலம் நெருங்கி விட்டது. இனி உங்களுக்கு எல்லாம் நன்மையாகவே சம்பவிக்கும்!" என்று மிகவும் அமைதியுடன் துறவி சொன்னார்.

"சுவாமி, எங்களை உயிருடன் மீட்ட குழந்தை பிரபாகரனை எவ்வளவு பாராட்டினாலும் தகும். எங்கள் கண்மணி உமாவும் அவனுக்குப் பக்கபலமாக இருந்து உதவி யிருக்கிறாள்! பாவம், குழந்தைகள் இருவரும் பல விதக் கொடுமைகளுக்கு உள்ளாகி வாடிப் போய் விட்டனர்!" என்று மிகுந்த உணர்ச்சியோடு கூறினார் ஆனந்ததீர்த்தர்.

இவர்கள் இப்படிப் பேசிக் கொண்டிருக்கும்பொழுது அவர்கள் எதிரில் ஒரு காகம் பறந்து வந்து உட்கார்ந்தது. அடுத்த விநாடியில் காகம் ஓர் கிழவியாக மாறிற்று. அதைப் பார்த்த உமா, "அப்பா! அம்மா! இந்தக் கிழவிதான் எங்களை வயல் காட்டில் வைத்துக் காப்பாற்றி வந்தாள். நல்ல கிழவி!" என்று கூறி அவளருகே நெருங்கினாள். உடனே பிரபாகரன் "என்ன பாட்டி, சௌக்கியமா?" என்று கேட்கவே, வயல் காட்டுக் கிழவி ஒன்றும் சொல்ல முடியாமல் திருதிருவென்று விழித்தாள்.

"என்ன விழிக்கிறாய்? உன்னை இப்பொழுது என்ன செய்கிறேன், பார்! எனக்கும் என் குழந்தைகளுக்குமே தீங்கு இழைத்த உன்னை இப்பொழுது சும்மாவிடப் போகிறதில்லை. இதோ உன்னுடைய மந்திர சக்தியை என்

னிடம் காண்பி. அதற்குள் உன்னை எமலோகத்துக்கு அனுப்புகிறேன்!'' என்று கோபத்துடன் கூறிக் கிழவியிடம் நெருங்கினர் ஆனந்ததீர்த்தர்.

ஏற்கெனவே நடுங்கிக் கொண்டிருந்த கிழவியின் உடல் மேலும் நடுங்க ஆரம்பித்தது. அவள் காக்கை ரூபம் எடுத்து வந்ததினால் கையில் ஊன்றிக் கொள்ளத் தடியும் இல்லை. அவளைக் கீழே விழுந்து விடாதபடி குலகுரு தாங்கிப் பிடித்துக் கொண்டார்.

"ஆனந்ததீர்த்தரே, அவளை ஒன்றும் செய்ய வேண்டாம். அவளது உதவி இல்லாவிட்டால் நீங்கள் உயிருடன் உங்கள் குழந்தைகளைச் சந்தித்திருக்க முடியாது. பாவம், அவள் என்ன செய்வாள்? வீரசிம்மனுடைய கையில் அவள் சிக்கிக் கொண்டு அரசனுடைய உத்தரவுப்படி காரியங்களைச் செய்து கொண்டு வந்தாள். அவள் பேரில் என்ன குற்றம்? எல்லாம் ஈசன் செயல்'' என்றார் குலகுரு.

கிழவி ஆனந்த தீர்த்தரின் காலில் பொத்தென்று விழுந்தாள். "பிரபாகரனும், உமாவும் மிகுந்த புத்திசாலிகள். நான் பத்து வருஷ காலமாக அவர்களை வளர்த்து வந்தேனுகையால், அவர்களிடம் என்னை அறியாமல் ஒரு பாசம் ஏற்படுகிறது. நான் அவர்களுக்கு வேண்டுமென்று தீங்கு செய்ய வில்லை. நான் வீரசிம்மனின் வற்புறுத்தலினால் தீங்கு செய்ய யத்தனித்த பொழுது, கடவுளின் கிருபையால் பிரபாகரனும், உமாவும் தப்பித்துக் கொண்டே வந்தார்கள். கடவுளின் கிருபை உங்கள் பக்கம் இருக்கிறது. நீங்கள் சிறையிலிருந்து விடுதலை யானது யாரும் நம்ப முடியாததும் எதிர் பார்க்காதது மான ஒரு அதிசய சம்பவம். எனது ஆயுள் முடியும் காலமும் நெருங்கி விட்டது. நான் செய்த தவறுகளை நான் இறப்பதற்குள் உங்களிடம் கூறி மன்னிப்புக் கேட்கவே இப்பொழுது இங்கு வந்தேன்'' என்று கூறினுள் வயற்காட்டுக் கிழவி.

ஆனந்த தீர்த்தர் அவளை மன்னித்தது போலக் கிழவியின் கைகளைப் பிடித்துத் தூக்கி நிறுத்தினர். உடனே குலகுரு, "கிழவி! வீரப்ப தேவன் இறந்து விட்டது பற்றிக் கேள்விப்பட்டாயோ?'' என்று கேட்டார்.

"தெரியும். நான் பிரபாகரன், உமாவுக்காகச் செய்த சூழ்ச்சிக்கு அவன் பலியானன்; அதுவும் அரசன் வீரசிம்மன் கைகளினுலேயே அவனுக்கு மரணம் கிடைத்தது. வீரசிம்மனுக்குத் துர்ப்போதனை செய்த கொடியவர்களில் அவனும் ஒருவன். அவன் இறந்தது பற்றி ஒருவரும் வருந்த மாட்டார்கள். ஏன், அரசன் வீரசிம்மனேகூட அவன் இறந்ததைப் பற்றி வருந்த வில்லை!'' என்ருள் கிழவி.

பிறகு அவள் ஆனந்த தீர்த்தரைப் பார்த்து, "ஆனந்த தீர்த்தரே, உங்களுக்கும் உங்கள் மனைவி மக்களுக்கும் சகல மங்களமும் உண்டாகட்டும். நான் என் கடைசி மந்திரங்களை உங்கள் நன்மைக்காகவே உபயோகப்படுத்துகிறேன்'' என்று ஏதோ மந்திரங்களைச் சொல்லியபடியே நான்கு திக்குகளிலும் தனது இரு கைகளையும் காட்டினுள். உடனே அவள் 'தொப்'பென்று கீழே விழுந்தாள். அவள் உடலிலிருந்து உயிர் பிரிந்தது.

என்ன ஆச்சரியம்! அடுத்த நிமிஷத்தில் கல்லறைத் தீவிலுள்ள சிலைகளெல்லாம் உயிர் பெற்று எழுந்தன. கணக்கற்ற குதிரை வீரர்களும், துப்பாக்கி வீரர்களும், "ஆனந்த தீர்த்தருக்கு ஜே! சியாமளா தேவிக்கு ஜே!'' என்று பலத்த கோஷம் இட்டார்கள்.

அந்தச் சமயத்தில் பிரபாகரன் குலகுருவிடம் ஓடி வந்தான். "குருவே, எல்லாச் சிலைகளும் உயிர் பெற்று விட்டனவே? நாய்ச் சிலை மறுபடியும் உயிர் பெற்று விட்டால் என்ன செய்வது என்று பயந்தேன். நல்ல வேளையாக அந்தச் சிலை மாத்திரம் உயிர் பெற வில்லை'' என்ருன் பிரபாகரன்.

"பிரபாகரா, நீ சொல்லியதைப் போல நாய்ச் சிலை மாத்திரம் உயிர் பெருமல் இருப்பதைக் கண்டு நானும் ஆச்சரியப் பட்டேன். அந்தச் சிலையை அருகில் சென்று கூர்ந்து



வாத்துக்குஞ்சு பலூன் ஊதும் மனிதனுக மாறும். திருப்பிப் பாருங்கள்.

கவனித்தேன். அதன் மீது கத்தியினால் வெட்டப்பட்டது போலக் காயங்கள் இருந்தன. பின்னம் அடைந்த சிலை மந்திர சக்தியினால் உயிர் பெற முடியாது. அதனால்தான் அந்தச் சிலைக்கு உயிர் வரவில்லை" என்றார் குலகுரு.

ஆனந்த தீர்த்தர் குலகுருவை நமஸ்கரித்து, "குலகுருவே, இப்பொழுதே நாம் அனைவரும் மாயா மகேந்திர புரத்துக்குச் செல்லுவோம். என்னை மறைமுகமாகத் தாக்கிச் சிறைப்படுத்திய வீரசிம்மனைக் கொல்வதே என் முதல் நோக்கம். அதற்குப் பிறகு எனது புதல்வன் பிரபாகரனுக்குப் பட்டம் கட்ட வேண்டும்" என்று சொன்னார்.

"ஆனந்த தீர்த்தரே! வீரசிம்மன் என் வார்த்தைக்குக் கட்டுப்பட்டு உங்களையும் உங்களது குடும்பத்தாரையும் கொல்லாமல் விட்டு வைத்தான் அல்லவா? அதற்காக அவனை நீங்கள் மன்னிக்க வேண்டும். மன்னித்து அவனை எங்கேயாவது தேசப் பிரஷ்டம் செய்து விடலாம். ஆனால் நீங்கள் சிறையி லிருந்து வெளி வந்ததை அறிந்து அவனாகவே தூரதேசத்துக்குப் போய்விட்டான் என்பதை இப்பொழுது நான் அறிந்தேன். ஆதலால் வீரசிம்மனைப்பற்றிய சிந்தனையே உங்களுக்குத் தேவையில்லை. நாம் அனைவரும் இப்பொழுதுமாயாமகேந்திரபுரப் பட்டணத்துக்குச் சென்று பிரபாகரனின் முடிசூட்டு வைபவத்தைக் கொண்டாடலாம்" என்றார் குலகுரு. ஆனந்த தீர்த்தர் தம் குடும்பத்துடனும் தமது வீரர்களுடனும் மாயா மகேந்திர புரத்தை நோக்கிச் சென்றார்.

மாயா மகேந்திரபுரத்து ஜனங்கள் தங்களது உண்மையான அரசர் ஆனந்ததீர்த்தரும் அவருடைய மனைவியோமளா தேவியும் உயிருடன் இருக்கிறார்கள் என்று கேள்விப்பட்டதும் மிகுந்த சந்தோஷம் கொண்டார்கள். அதுவும் பிரபாகரன் பட்டத்துக்கு வரப் போகிறான் என்ற செய்தியைக் கேட்டவுடன் ஜனங்களின் உற்சாகம் கரைபுரண்டோடியது. வீரசிம்மனும் மாயா மகேந்திரபுரத்தை விட்டுத் தூர தேசத்துக்குப் பிரயாணமான செய்தியும் காட்டுத் தீபோல் எங்கும் பரவியது.

பிரபாகரனின் மகுடாபிஷேகத்தன்று மாயா மகேந்திரபுரப் பட்டணம் பிரமாதமாகத் தோரணங்களினாலும், பல வர்ணமுள்ள விளக்குகளினாலும் அலங்கரிக்கப் பட்டது. பல வாத்தியங்கள் முழங்கத் தன் அண்ணாவின் முடிசூட்டு வைபவத்தைச் சந்தோஷமாக அனுபவித்தாள் உமா. (முற்றுப் பெற்றது)




காட்டில் ஒரு பெரிய மரம். அந்த மரத்தின் நிழலில் ஒரு கல்லும் ஒரு இலையும் இருந்தன. "இலையே! இலையே! நீயும் நானும் சிநேகமாக இருக்கலாம். ஒருவருக்கொருவர் துணையாக இருக்கும்!" என்று கல் கூறியது.

இதைக் கேட்ட இலை, "நீயும் நானும் எப்படி ஒருவருக் கொருவர் உதவியாக இருக்க முடியும்?" என்று கேட்டது.

"இதென்ன கேள்வி? இப்பொழுது காற்றடிக்கிறது என்று வைத்துக் கொள். உடனே நான் உருண்டு வந்து உன்மேல் உட்கார்ந்து கொள்கிறேன். அப்போது காற்று உன்னை அடித்துக்கொண்டு போக முடியாது, இல்லையா?"

இதைக் கேட்டதும் தன்னால் கல்லுக்கு எந்த விதமான உதவியும் செய்ய முடியாதே என்று இலை ஏங்கலாயிற்று.

இதைப் பார்த்த கல் கூறியது: "நீயும் எனக்கு உதவியாக இருக்கலாம்! மழை பெய்கிறது என்று வைத்துக் கொள். உடனே நீ வந்து என் மேல் உட்கார்ந்து விட்டால் நான் மழையில் நனைய மாட்டேன், இல்லையா?"

இலைக்குச் சந்தோஷம் தாங்கவில்லை.

இவை இரண்டும் இப்படிப் பேசிக் கொண் டிருந்ததை யெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த நரிக்கு அடக்க முடியாமல் சிரிப்பு வந்தது. "ஹி ஹ் ஹி......"

"என்ன நரியாரே! அப்படி என்ன சிரிப்பு?" என்று கேட்டது கல்.

"ஒன்றுமில்லை. நீங்கள் பேசிக் கொண் டிருந்ததை யெல்லாம் கேட்டுக் கொண் டிருந்தேன். சிரிப்பு வந்தது, சிரித்தேன்."

"அப்படி சிரிக்கும்படி நாங்கள் ஹாஸ்யமாகப் பேசவில்லையே!" என்றது கல்.

"அது இல்லை! எனக்கு ஒரே ஒரு சந்தேகம். மழை பெய்தாலும் சரி, காற்றடித்தாலும் சரி, நீங்கள் ஒருவருக்கொருவர் உதவி செய்து கொள்ளலாம். ஆனால் மழையும் காற்றும் சேர்ந்தடித்தால்?..."

இதற்குக் கல்லுக்கு என்ன பதில் சொல்வதென்றே புரியவில்லை! இலையும் திகைத்துப் போய் நின்றது.

நரி தன் காரியம் முடிந்தது என்று எடுத்தது ஓட்டம்!

# ரவிசந்திரிகா

## 7. மனக் கதவு திறந்தது!

"**மி**ஸ்டர் ரவீந்திரன், உங்களைக் கலெக்டர் கூப்பிடுகிறார்!" என்று சொன்னார் ஒருவர், வேகமாக நடந்து வந்து கொண்டே! ஆஸ்பத்திரிப் பையன் கொடுத்த கடிதத்தைக் கையில் வைத்துக்கொண்டே தயங்கினான் ரவீந்திரன்.

'கடிதம் நாகரத்தினத்திடமிருந்து வந்திருக்கிறது; என்ன கந்தரகோளமோ தெரியவில்லையே!' என்று எண்ணி ஒரு விநாடி காலத் தேய்த்தான். கேட்டான், அந்தப் பையனிடம்: "ஏன் தம்பி. இந்தக் கடிதத்தைக் கொடுத்தது யார்?"

"பன்னிரண்டாம் நம்பர் அறையிலே ஒரு அம்மா இருக்காங்களே, அவங்களோட பேசிக்கிட்டிருக்கிற ஐயாதான் இதைக் கொடுத்தாரு—"

"என்ன! அந்த அம்மா பேசிக் கொண்டு இருக்காங்களா?"

"ஆமாங்க. காலிலே அடிபட்டிருக்கிறதனாலே நகர முடியாது. கட்டில்லே படுக்க வைச்சிருக்கிறாங்க—" என்றான் அந்த ஆஸ்பத்திரிப் பையன்.

"அப்படியானா அந்த அம்மா சுயநினைவோடுதான் இருக்காங்களா?"

"ஆமாங்க. மத்தியானமே அவங்களுக்கு மூர்ச்சை தெளிஞ்சிட்டுதுங்க. பயம் ஒண்ணும் இல்லீங்க!"

ரவீந்திரனுடைய மனத்தில் ஒரு நிம்மதி உண்டாயிற்று.

"சரி. நீ ஆஸ்பத்திரிக்குப் போ. நான் கொஞ்ச நேரத்தில் வருவேன்" என்று சொல்லி விட்டு, ரவீந்திரன் 'தேவர் மன்ற'த்தில் கலெக்டர் உட்கார்ந்திருந்த இடத்துக்கு வேகமாக நடந்தான்.

ஜில்லா கலெக்டர் ரவீந்திரனிடம்ஏதோ சொல்லி விட்டு, நாற்காலியைச் சற்று நகர்த்தி ஆங்கிலமும் தமிழும் கலந்து—அதாவது ஆங்கிலத்திலே கொஞ்சம் தமிழைக் கலந்து—இந்த நிமிஷம் வழக்கமாகப் பேசுகிற உபசார வார்த்தைகளைப் பேசி விட்டு, வெள்ளிப்



பேழையைச் சந்திரிகாவுக்கு வழங்கினார். அவருடைய பேச்சு எப்படியிருந்த போதிலும், கலெக்டர் பதவியின் கனத்தினால் ஜனங்களின் 'கை தட்டும் கனமாகவே இருந்தது! பின்னர், 'நாட்டிய மணி'யின் நடனம் தொடர்ந்து நடந்தது. உத்சாகமாக இரவு ஒன்பது மணி வரை நடந்தது.

கச்சேரி முடிந்த பிறகு, ரவீந்திரன் சந்திரிகாவை ஒரு காரிலே ஏற்றிக் கொண்டு வீடு போய்ச் சேர்த்து விட்டு, புகழ் பெற்ற பாலக்கரையில் இருந்த பழைய ஆஸ்பத்திரியை நோக்கி அதே காரில் விரைந்தான்.

அப்பொழுது இரவு பத்து மணியிருக்கும். மரங்களும், செடி புதர்களும், அவற்றை யடுத்துக் கல்லறைகளுமாக இருந்த பாலக்கரை ஆஸ்பத்திரிக்குள்ளே நுழைந்தபோது, ரவீந்திரனுடைய மனம் துக்கித்தது. அவனுடைய மென்மையான இதயத்துக்கு ஆஸ்பத்திரியின் சூழ்நிலையும், ஆஸ்பத்திரிகளுக்கே உள்ள அந்த ஒரு தனியான வாடையும் வயிற்றைக் குமட்டின.

உள்ளே போய் வராந்தாவில் ஏறியதும், நாகரத்தினம் வராந்தாவில் உலாத்திக் கொண்டிருந்தது தெரிந்தது. ஆனால் என்ன ஆச்சரியம், ரவீந்திரன் வருவதைத் தொலைவிலே பார்த்ததுமே, சட்டென்று திரும்பி அறைக்குள்ளே போய் நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டு உட்கார்ந்து விட்






டான் நாகரத்தினம். நாற்காலியை அவன் இழுத்துப் போட்ட ஓசை வெளியே ரவீந்திரனுக்குக் கேட்டது. எரிகிற நெருப்பில் நெய்யைக் கொட்டினால் 'குபீர்' என்று ஜ்வாலை கிளம்பும் அல்லவா? அதுபோலச் சீற்றம் எழுந்தது ரவீந்திரனுக்கு. அதை அடக்கிக் கொண்டு, பன்னிரண்டாம் நம்பர் அறையினுள் நுழைந்தான் அவன்.

கட்டிலில் கல்யாணி படுத்திருந்தாள். அவளுக்குப் பக்கத்தில் நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு, நாகரத்தினம் ஒரே மௌனமாக இருந்தான். ஏற்கனவே என்னென்ன பேச வேண்டுமோ—அதாவது, பேசக் கூடாதோ—அதை யெல்லாம் பேசித் தீர்த்து விட்டான் போலும்!

கல்யாணி கண்களைத் திறந்து பார்த்தாள். கணவனைக் கண்டதும் எங்கிருந்து புறப்பட்டதோ, அந்தக் கண்ணீர் அருவி! விம்மலும், விக்கலும் 'குபு குபு' என்று பாய்ந்து வந்தன. கதறிக் கதறி அழுதாள் அந்த அபலை.

ரவீந்திரன் அவளுக்கு அருகிலே சென்று கட்டிலில் உட்கார்ந்தான்.

"கல்யாணி, ஏன் இப்படி அழுகிறாய்? காலில் பலமாக அடிபட்டு விட்டதா? கல்யாணி, கல்யாணி!"

கல்யாணி என்ற பெயரைப் பல முறை சொன்னான் ரவீந்திரன். அழுகை நிற்கவில்லை. பதில் வார்த்தையும் வரவில்லை. என்ன செய்வதென்று புரியாமல், நாகரத்தினத்தைக் கோபத்தோடு திரும்பிப் பார்த்தான் ரவி.

"என்னை ஏன் இப்படிப் பார்க்கிறீர்கள் அத்தான்?" என்று கேட்டான் நாகரத்தினம். அந்தக் கேள்வியிலே தான் எத்தனை விஷம்!

"நாகரத்தினம்! நீ ஏன் அந்த மாதிரி ஒரு பொய்க் கடிதம் எழுதினாய், கல்யாணிக்கு ஜன்னி அதிகமாக இருக்கிறது என்று?"

நாகரத்தினம் நாற்காலியில் நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டான்.

"அப்படி ஒரு கடிதம் எழுதினதால் என்ன ஆகிவிட்டதாம் இப்பொழுது? உங்களுக்கோ, உங்கள் கச்சேரிக்கோ இடையூறு ஒன்றும் நேர்ந்து விட வில்லையே!"

இப்படி நாகரத்தினம் சொன்னபோது "உங்கள்" என்ற வார்த்தையில் விஷமத்தனமாக ஒரு அழுத்தம் கொடுத்துச் சொன்னான். ரவீந்திரனுக்குக் கண் சிவந்தது.

"அத்தான், ஜன்னி என்று எழுதியனுப்பினாலாவது நீங்கள் வரமாட்டீர்களா என்று பார்த்தேன். ஆனால் நீங்களோ அதற்கும் சாந்தி. அதற்கு மேலும் சாந்தி. ஓம் சாந்தி சாந்தி சாந்தி என்று..."

ரவீந்திரனுக்கு ஆத்திரம் வந்தது. ஆனாலும் ஒன்றும் பதில் பேசவில்லை. கண்ணீர் வடித்துக் கொண்டே யிருக்கும் கல்யாணியைப் பார்த்துச் சொல்லுவான்: "ஏனம்மா இப்படி அழுகிறாய்? இவ்வளவு தளர்ச்சியாக இருக்கும்போது இந்த மாதிரி அழலாமா நீ? கல்யாணி!"

நாகரத்தினத்துக்கு இப்பொழுது பேச ஒரு சந்தர்ப்பம் கிடைத்து விட்டது. நீண்ட நேரம் மனத்துக்குள்ளேயே வைத்து ஒத்திகை பார்த்துக் கொண்டிருந்த வாக்கியத்தை இப்பொழுது அவன் பேசினான்:

"ஏன் அழுகிறாய், ஏன் அழுகிறாய் என்றே கேட்கிறீர்களே அத்தான். ஏன் அழ மாட்டாள் என்று கேட்கிறேன். மாலையிட்ட புருஷன் இவ்வளவு அலட்சியமாக இருக்க ஆரம்பித்த பிறகு, ஒரு பெண்ணுக்கு என்ன உண்டு, வாழ்க்கையில்? ஜன்னியாகக் கிடக்கிறாள் என்றாலுங்கூட அந்த அப்ஸரஸின் நடனத்தை விட்டு விட்டு வருவதற்கு உங்களுடைய கால் கூசுகிறது. என்ன செய்வாள், கல்யாணி, பாவம்!"

ரவீந்திரன் இதுவரை மிகக் கஷ்டப்பட்டு அடக்கிக் கொண்டிருந்த சீற்றம், இப்பொழுது முழு வேகத்துடன் அப்படியே பாய்ந்து வந்தது.

"நாகரத்தினம், உனக்குக் கடைசி முறையாக எச்சரிக்கை செய்கிறேன். என்னுடைய குடும்ப விஷயத்தில் நீ இனிமேல் தலையிடாதே. உன்னுடைய வேலை மானங்களை வேறு எங்காவது வைத்துக் கொள், சொல்லி விட்டேன்!" என்றான் ரவீந்திரன், கோபாவேசமாக.



"எப்படி யிருக்கிறது பேச்சு! பேஷ்! கலைஞர் இல்லையா நீங்கள்! அப்படித் தான் இருக்கும் உங்களுடைய பேச்சு! என்னுடைய அக்காள் வாழ்க்கையை நீங்கள் குட்டிச் சுவராக்கலாம். நான் அதைப் பார்த்துக் கொண்டு சும்மா இருக்க வேண்டும், அப்படித்தானே?"

"தம்பி!" என்று ஒரு அதட்டலுடன் நாகரத்தினத்தைத் தடுக்க முயன்றாள் கல்யாணி. ஆனால் அவன் அதைப் பொருட்படுத்த வில்லை.

"அத்தான், நானும் பொறுத்துப் பொறுத்துப் பார்த்தேன். இத்தனை நாளாக. இனிமேல்..."

"இனிமேல் என்ன செய்வாயாம்? நாகரத்தினம், உனக்கு மறுபடியும் சொல்கிறேன், என்னுடைய குடும்ப விஷயத்தில் நீ தலையிடாதே—ஆமாம்."

"இல்லை. இது என் அக்காளின் குடும்ப விஷயம். இதில் தலையிடுவதற்கு எனக் கில்லாத உரிமை வேறு யாருக்கு இருக்கிறது என்று கேட்கிறேன்!"

"இந்தா பார். அதிகமாக என்னோடு வார்த்தை கொடாதே. கல்யாணி உன் அக்காள் என்பது பத்து ஆண்டுகளுக்கு முன்பு வரை — இப்பொழுது கல்யாணி என்பவள் ரவீந்திரனுடைய மனைவி. தெரிந்ததா? அவளிடம் அன்பு செலுத்தவோ அல்லது கோபப்படவோ நீ என்னுடைய அனுமதியைப் பெற்றாக வேண்டும். தெரியுமா?"



"ஓகோ! மனைவி என்ற நினைப்புக் கூட உங்களுக்கு இருக்கிறதா?"

ரவீந்திரன் சரேலென்று கட்டிலை விட்டு எழுந்தான். கையும் காலும் பதற்றம் கொடுத்தன. கண் 'ஜிவு ஜிவு' என்று இருந்தது.

"நாகரத்தினம்! இது ஆஸ்பத்திரி. நம்முடைய வீடு இல்லை. தெரிந்ததா? வார்த்தையை வளர்த்தாதே. இந்த நிமிஷமே மரியாதையாகக் கிளம்பி விடு. இனிமேல் என் திசைப் பக்கம் திரும்பினால் பழி விழுந்து விடும். ஜாக்கிரதை!"

"அவ்வளவு தூரத்துக்கு வந்து விட்டதா, அத்தான்?" என்று கேட்டான் நாகரத்தினம்.

"அத்தானாவது பொத்தானாவது! இனி ஒரு நிமிஷம் இந்த இடத்தில் நீ இருந்தாலும், கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளிவிடுவேன். என்ன நினைத்துக்கொண்டிருக்கிறாய், உன்னுடைய மனசில்?"

நாகரத்தினம் நாற்காலியை விட்டுக் கோபத்துடன் எழுந்தான். கல்யாணிக்கு அழுகை கட்டுப்பாட்டை மீறிக் கதறிக் கொண்டு வந்தது.

"அக்கா! நான் இனிமேல் ஒரு நிமிஷங் கூட இங்கே இருக்க மாட்டேன். உன் பாடு உன்னுடைய புருஷன் பாடு. இனிமேல் உன் காரியத்தில் தலையிடுவதற்கு நான் யார்? தந்தி கிடைத்து லால்குடியிலிருந்து உடனே ஓடோடியும் வந்ததற்குச் சரியான வெகுமதி கிடைத்து விட்டது. இனி நான் போகிறேன். அத்தான் உங்களுக்கு ஒரு பெரிய நமஸ்காரம். ஆனால் ஒரே ஒரு வார்த்தை மட்டும் ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள். கல்யாணிக்கு விரோதமாக ஒரு காரியம் நடத்தி விடலாம் என்று மட்டும் எண்ணினீர்களோ, அந்த நிமிஷமே உங்களுடைய பரம விரோதி, ஜன்மப் பகைவன், இதோ இருக்கிறேன். ஜாக்கிரதை!"

இவ்வாறு சொல்லி விட்டுத் திரும்பிக் கூடப் பார்க்காமல் 'விறு விறு' என்று வராந்தாவிலிருந்து இறங்கி வெளியே நடந்தான் நாகரத்தினம்.

தம்பியின் வார்த்தைகளுக்குக் காரணமாக அமைந்த சகோதர வாஞ்சை ஒரு பக்கம், புருஷன் என்ற பக்தி ஒரு பக்கம், இந்த இரண்டு பாசக்கயிற்றிலும் சிக்கிக் கொண்டு ஊசலாடிற்று கல்யாணியின் உள்ளம். அந்த அபலையின் உணர்ச்சிகளுக்குக் கண்ணீர் என்ற ஆன்ம மொழியைத் தவிர வேறு வார்த்தையில்லை! அழுதான்! அழுதாள்! அந்த ஆஸ்பத்திரி அறையின் சுவர்களுங்கூட உருகிக் கரையும்படியாகக் கதறி அழுதாள் கல்யாணி!

இரண்டு அறைகளுக்கு அப்பால் ஜில்லா உதவி வைத்திய அதிகாரியின் அறை. இரவில் அவர் நோயாளிகளையெல்லாம் சோதித்துப் பார்த்து விட்டுப் போகிற நேரம் அது. அப்பொழுதுதான் அவர் தம் அறைக்குள்ளே நுழைந்திருப்பார். கல்யாணியின் அழுகைக் குரல் கேட்டது. இதற்குள் அதிகாரி வந்து விட்டார் என்பதைக் கவனித்த இரண்டு கம்பவுண்டர்களும், சேவகனும் அறைக்குள்ளே வந்து டாக்டருக்குப் பெரிய கும்பிடாகப் போட்டு நின்றார்கள்.

"என்ன சத்தம் அது? பன்னிரண்டாம் அறையிலா?" என்று கேட்டார் டாக்டர்.

"ஆமாம். அந்த அம்மாளுடைய புருஷன் வந்திருக்கிறார்–"

"யார்? அந்த என்னவோ பெயர்—"

"ரவீந்திரன்" என்றார் கம்பவுண்டர்.

"ஆமாம்! டாகூருடைய பெயர் அல்லவா! ஆனால் இவன் சுத்த உதவாக்கரையாக இருப்பான் போலிருக்கிறதே! மனைவி இங்கே விபத்திலே மாட்டிக் கொண்டிருக்கிறாள். அவனுக்கு என்னவோ சங்கீதமாம் நாட்டியமாம்–!"

இவ்வாறு பேசிக் கொண்டே 'விர்' என்று போய்ப் பன்னிரண்டாம் நம்பர் அறையினுள் நுழைந்தார் டாக்டர். அது வரை எங்கோ மறைந்து போயிருந்த நர்ஸ்

அம்மாள், பதறிக் கொண்டே டாக்டரின் பின்னோடு ஓடி வந்தாள்.

"நீங்கள்தான் ரவீந்திரனா?" என்று கேட்டார் டாக்டர், அறையினுள் நுழைந்து கொண்டே.

"ஆமாம், நமஸ்காரம். நான்தான் ரவீந்திரன். விசித்திரமான மனிதன் என்கிறீர்களே, அந்த ஆசாமி நான்தான்! கல்யாணி என்னுடைய மனைவி!" என்று சொல்லிக் கொண்டே நாற்காலியைவிட்டு எழுந்தான் ரவீந்திரன். இப்படி அவன் தன்னை அறிமுகப் படுத்திக்கொண்டவிதம் டாக்டருக்கு விநோதமாகவே இருந்தது.

"உட்காருங்கள் மிஸ்டர் ரவீந்திரன்" என்று சொல்லி அவனைக் கட்டிலில் மனைவியின் அருகே உட்கார்த்தி விட்டு, டாக்டர் நாற்காலியில் உட்கார்ந்தவாறு ரவீந்திரனையே கூர்ந்து பார்த்தார். உண்மையில் அவர் எதிர்பார்த்து வந்த உருவம் வேறு. ரவீந்திரனுடைய தோற்றம் அதற்கு முற்றிலும் மாறாக இருந்தது. அவனுடைய முகத்தில் ஏதோ ஒன்று — வைத்திய சாஸ்திரத்தில் அதற்குப் பெயர் கிடையாது — அந்த 'ஏதோ ஒன்று' டாக்டரைக் கவர்ந்தது!

"டாக்டர், காலில் எலும்பு ஒன்றும் பிசகவில்லையே?" என்று கேட்டான் ரவீந்திரன். அந்தக் குரலில் உண்மையான கவலை தொனித்தது. இதை டாக்டர் கவனித்தார். சொன்னார்: "கவலைப்படுவதற்கு ஒன்றுமில்லை, மிஸ்டர் ரவீந்திரன். ஒரு வாரம் காலை அசக்காமல் ஓய்வு கொடுத்து விட்டால் சரியாகிவிடும். ஆனால் அதைவிட முக்கியம், உங்கள் மனைவியின் மன அமைதிதான். அதைத்தான் அக்கறையோடு கவனிக்க வேண்டும் —"

"கல்யாணி! காதில் விழுந்ததா டாக்டர் சொன்னது? மன அமைதி வேண்டும் என்கிறார் டாக்டர். இப்படியெல்லாம் அழக்கூடாது என்கிறார்."

"மிஸ்டர் ரவீந்திரன், அந்த வார்த்தை உங்கள் மனைவிக்காக மட்டும் சொன்ன வார்த்தையில்லை. உங்களுக்கும் சேர்த்துத்தான்!" என்று இடைமறித்தார் டாக்டர், சிரித்துக் கொண்டே.

ரவீந்திரனுக்கு முகமெல்லாம் சுருங்கியது. டாக்டர் இதைக் கவனித்தார்.

"மிஸ்டர் ரவீந்திரன், உங்கள் மனைவிக்கு இப்பொழுது ஒரு மாத்திரை கொடுக்கும்படி நர்ஸிடம் சொல்லுகிறேன். நன்றாகத் தூங்கி விடுவாள். அதைப் பற்றிக் கவலையில்லை. ஆனால் தினமும் இப்படி ஒரு மாத்திரை கொடுத்துக் கொண்டேயிருக்க முடியுமா?" என்று கேட்டு விட்டு, நர்ஸிடம் ஒரு தூக்க மாத்திரை கொண்டு வரும்படி கட்டளையிட்டார். உடனே கல்யாணியைப் பார்த்துச் சொல்லுவார்: "அம்மா, ஆஸ்பத்திரியில் இந்தமாதிரி அழுது கூச்சல் போடுவது உங்களுக்கும் கெடுதல், மற்ற நோயாளிகளுக்கும் கெடுதல். என்ன துக்கமானாலும் அதை மனதுக்குள் அடக்கி வைத்துக் கொள்வதுதான் நம்முடைய தமிழ் நாட்டுப் பெண்களின் நாகரிகம், அம்மா. உங்களைப் பார்த்தால் நல்ல குணவதி யென்று தெரிவதால் இதைச் சொன்னேன். கோபித்துக் கொள்ளாதீர்கள். மிஸ்டர் ரவீந்திரன்! நான் சொல்வது சரிதானே? அதாவது உங்களுக்குத் திருப்திதானே? எந்த விஷயத்திற்கும் உங்கள் மனைவி அழக்கூடாது என்கிறேன்!" என்று ஒரு வேடிக்கைக் குறும்போடு கண்களைச் சிமிட்டினார் டாக்டர். ரவீந்திரன் பதில் பேசவில்லை.

"சரி, உங்கள் மனைவி நிம்மதியாக உறங்கட்டும். அவளை நர்ஸ் கவனித்துக் கொள்வாள். நீங்கள் என்னோடு கொஞ்சம் வருகிறீர்களா? என்னுடைய அறைக்குப் போகலாம்."

டாக்டர் எழுந்தார். ரவீந்திரனும் எழுந்தான். வராந்தாவுக்கு வந்தார்கள்.

"உங்களோடு தனியாகச் சில விஷயங்கள் பேச வேண்டும். அதனால்தான் கூப்பிட்டேன்."

"பேஷாகப் பேசுவோம். ஆனால் ஒன்று: என்னுடைய சொந்த விஷயங்களில் பிறர் தலையிடுவதை நான் எப்பொழுதும் விரும்புவதில்லை. மற்றப்படி டாக்டர் என்ற முறையில் என் மனைவியின் உடல் நிலையைப் பற்றி நீங்கள் என்ன சொன்னாலும் கேட்கத் தயாராக இருக்கிறேன்."

"சரி, வாருங்கள் முதலில் என் அறைக்கு" என்று சொல்லிய வண்ணம், ரவீந்திரனின் தோள் மேல் கையைப் போட்டுக் கொண்டே, மிக்க பிரியத்தோடு அழைத்துச் சென்றார் டாக்டர். மெய்யாகவே, ரவீந்திரனுடைய முகத்தில் இருந்த அந்த 'ஏதோ ஒன்று' அவரைக் கவர்ந்திருந்தது!

சட்டென்று நினைவு வந்தவர் போல், "மறந்தே போய் விட்டேன். உங்கள் மனைவியோடு 'ஆக்ஸிடென்டி'ல் சிக்கிய மற்ற இரண்டு பேரையும் இன்னும் பார்க்கவில்லையே!" என்றார்.

"மற்றவர்களா? அந்த விவரம் எனக்குத் தெரியாதே!" என்றான் ரவீந்திரன் மிக்க வியப்போடு.

டாக்டர் அப்படியே பதினைந்தாம் நம்பர் அறைக்குள்ளே நுழைந்தார். ரவீந்திரன் ஒன்றும் புரியாத பார்வையோடு உள்ளே புகுந்தான். ஆனால் என்ன ஆச்சரியம்! அங்கே வாசலுக்கருகில், அப்புலிங்கம் உட்கார்ந்து கொண்டிருந்தான்.

# புதியது! அதி நூதனமான ஒரு போல்டிங் காமிரா — அதுவும் அதிசயிக்கத்தக்க மலிவான விலையில்

இவ்வழகிய 'கோடக்' காமிராவைப்பற்றி நீங்கள் நிச்சயமாக பெருமை கொள்வீர்கள் — அது எடுக்கும் அருமையான படங்களும் உங்களை பெருமிதமடையச் செய்யும். உங்கள் கோடக் வியாபாரியிடம் இப்பொழுது விற்பனைக்குள்ள இப் புத்தம்புதிய காமிராவை இன்றே பாருங்கள் — அதன் விலைக்கு ஒரு அற்புதமான காமிராவென்று நீங்கள் கூறுவீர்கள்! 'கோடக்' 620 பிலிம் ஒவ்வொரு சுருளிலும் 2¼" × 3¼" அளவில் எட்டு ஸ்னேப்புகள் எடுக்கலாம்.

பொத்தானை அழுத்த வேண்டியதே தாமதம் — படம் பிடித்தாகிவிட்டது! சரிசெய்ய வேண்டிய உறுப்புகளே கிடையாது. துரிதமான f/4.5 லென்ஸ் மூலம் மங்கலான ஒளியிலும் தெளிவு மிக்க படங்கள் கிடைக்கும். 3½ அடிவரை அருகாமையிலிருந்துகூட தத்ரூபமான பெரிய போர்ட்ரேட்டுகள் எடுக்கலாம்.

1/200 செகண்டுவரையுள்ள ஷட்டர் வேகங்களின் உதவியால் சிறந்த செயல் படங்கள் எடுப்பது மிகச் சுலபம். தாமதித்து இயங்கும் ஷட்டர் வசதி இருப்பதன் மூலம் நீங்களும் படத்தில கலந்து கொள்ள முடியும்.

வெளிக் காட்சிகளைப் போன்றே சுலபமாக வீட்டினுள்ளும் படங்கள் எடுக்கலாம் — அதற்கு ஒரு 'கோடக்' பிளாஷ்ஹோல்டரை காமிராவுடன் இணைத்தால போதும், கம்பிகள் அல்லது விளக்குகளின் தொந்தரையில்லை.

## கோடக் 'ஸ்டெர்லிங் II' காமிரா

- உயர்தர லென்ஸ் மற்றும் ஷட்டர்
- தாமதித்து இயங்கும் ஷட்டர் வசதி
- அழகிய அமைப்பு

| | |
|---|---|
| கோடக் 'ஸ்டெர்லிங் II' காமிரா | ரூ. 157/8 |
| தோல் கேஸ் | ரூ. 9/8 |
| 'கோடக்' பிளாஷ்ஹோல்டர் மாடல் II | ரூ. 31/4 |






**கோடக் 'ஜூனியர் I & II' காமிராக்கள்**

அதே அழகிய அமைப்பு — ஆனால் மாறுபட்ட லென்ஸ்கள், ஷட்டர்களுடன். விலைகளும் அதிக மலிவு.

'ஜூனியர் I': இதன் லென்ஸ் மற்றும் ஷட்டரை சரிப்படுத்தத் தேவையில்லை, ஒரு பாக்ஸ் காமிராவைப் போன்றே எளியது. விலை ரூ. 76/-

'ஜூனியர் II': இதன் லென்ஸையும் ஷட்டரையும் முறையே f/6.3, மற்றும் [illegible] செகண்டுவரை சரிப்படுத்தக்கூடும். பிளாஷ் சித்திரங்களுக்கு பிளாஷுடன் ஒத்து இயங்கும் ஷட்டர் வசதியும் இருக்கின்றது. ரூ. 116/-

| | |
|---|---|
| தோல் கேஸ் | ரூ. 9/8 |
| 'கோடக்' பிளாஷ்ஹோல்டர் மாடல் II | ரூ. 31/4 |

இவ்விலைகளில் விற்பனை வரி சேராது



K-814 (a)

## உங்கள் கோடக் வியாபாரியை பாருங்கள்!

கோடக் லிட். (இங்லெண்டில் இணைக்கப்பட்டது) பம்பாய் - கல்கத்தா - டில்லி - மதராஸ்

ரவீந்திரனைக் கண்டதும், அவன் எழுந்து, "நமஸ்காரம்" என்று சொல்லிக் கொண்டே அருகில் வந்தான்.

ஒரு சாய்வு நாற்காலியில் சாய்ந்தவராய் முருகானந்தம் தமது கால்களை ஒரு ஸ்டூலில் நீட்டிக் கொண்டு உட்கார்ந்திருந்தார்.

அவருடைய மனைவி கட்டிலில் சாய்ந்து உட்கார்ந்து கொண்டிருந்தாள். விபத்து அவர்கள் இருவரையும் அவ்வளவாகப் பாதிக்கவில்லை என்பது தெரிந்தது. இருவருக்கும் கைகூப்பி வணக்கம் செலுத்தினான் ரவீந்திரன்.

"இவர்தான் அப்பா ரவீந்திரன்" என்று அறிமுகப்படுத்தினான் அப்புலிங்கம்.

"என்ன இது? இவர்களையே உங்களுக்குத் தெரியாதா?" என்று ஒரே வியப்போடு கேட்டார் டாக்டர்.

"நானே மிஸ்டர் ரவீந்திரனைச் சந்திப்பது இதுதான் இரண்டாவது தடவை!" என்று சொல்லி டாக்டரின் வியப்பை இன்னும் அதிகப்படுத்தினான் அப்புலிங்கம்.

எல்லாரும் அந்த அறையில் உட்கார்ந்தார்கள். மிராசுதார் தாம் கமலத்தின் கல்யாணத்துக்குப் புறப்பட்டுச் சென்றதையும், பிறகு லால்குடியிலிருந்து திரும்பியபோது விபத்து நடந்த விவரத்தையும், ஆதியோடு அந்தமாகச் சொன்னார். டாக்டரும் ரவீந்திரனும் அதைக் கவனமாகக் கேட்டார்கள். முடிவில் ரவீந்திரன் சொன்னான் :

"மிராசுதார்வாள், உங்களுக்கு என்னுடைய நன்றியை எப்படிச் சொல்வது என்றே தெரியவில்லை. உண்மையில்—"

"நன்றியா எதற்காக? உங்களுடைய மனைவியை இப்படி ஒரு விபத்திலே சிக்க வைத்ததற்காகவா?" என்று பளிச்சென்று கேட்டார் முருகானந்தம்.

"அப்படியில்லை. நீங்கள் எல்லாம் இப்படி உதவி செய்து அவளை உடனே ஆஸ்பத்திரிக்குக் கொண்டு வந்திருக்காவிட்டால் எவ்வளவு பெரிய ஆபத்தாகப் போயிருக்கும்! ஆனால் ஒன்றே ஒன்று— இத்தனை அவசரமாக நீங்கள் லால்குடிக்குத் தந்தி கொடுத்து அந்த அதிகப் பிரசங்கி நாகரத்தினத்தை இங்கு வரவழைத்திருக்க வேண்டியதில்லை. அது ஒன்றுதான் பிசகு!" என்று படபடப்போடு கூறினான் ரவீந்திரன்.

மிராசுதார் விஷயத்தைப் புரிந்து கொண்டு சிரித்தார். சொன்னார் :

"ரவீந்திரன், உங்களை நானே சந்திக்க வேண்டும் என்றுதான் யோசித்துக் கொண்டிருந்தேன். இப்பொழுது இப்படி ஒரு சந்தர்ப்பம் நம்மைக் கூட்டி வைத்திருக்கிறது!"

"எப்படியும் உங்களைச் சந்தித்ததில் எனக்கு மிகவும் ஆனந்தம்" என்றான் ரவீந்திரன்.

"சௌகரியமாக ஒரு நாள் நம்முடைய வீட்டுக்கு வாருங்கள். உங்களோடு நிறையப் பேச வேண்டியதிருக்கிறது" என்றார் மிராசுதார் முருகானந்தம்.

"தாராளமாக. ஆனால் ஒரே ஒரு நிபந்தனை. என்னுடைய அந்தரங்க விஷயங்களில் பிறர் அதிகமாகத் தலையிடுவது எனக்குப் பிடிக்காது. இப்படிச் சொல்வதற்காக என்னை மன்னிக்க வேண்டும். மற்றப்படி உங்களை எனக்கு ரொம்பவும் பிடித்திருக்கிறது. உங்களுடைய முகத்தில் பரம்பரையான பெருந்தன்மை இருக்கிறது. அதற்கு மரியாதை செய்கிறேன்!" என்றான் ரவீந்திரன்.

டாக்டர் இதைக் கேட்டு விட்டுச் சிரித்தார். அவருக்கு ரவீந்திரனின் இதயம் இப்பொழுது நன்றாகப் புரிந்தது. இந்தச் சந்தர்ப்பத்தில் அப்புலிங்கம் தகப்பனாரிடம் சொன்னான் :

"அப்பா! ரவீந்திரனை ஒரு நாள்தான் பார்த்தேன், கடைவீதியில். அன்றே அவருடைய குணம் எனக்குத் தெரிந்து விட்டது. விவரமாகப் பேசிக் கொள்வோம்!"

"மிஸ்டர் அப்புலிங்கம்! உங்கள் அப்பாவிடம் என்னை ரொம்ப அவமரியாதையாகப் பேசி விடாதீர்கள். மிராசுதார்களே பொதுவாக எதையும் சீக்கிரத்தில் நம்பி விடுவார்கள்" என்றான் ரவி.

டாக்டர் சிரித்துக் கொண்டே நாற்காலியிலிருந்து எழுந்தார்.

"ரவீந்திரன், வாருங்கள் என்னுடைய அறைக்குப் போவோம்!"

ரவீந்திரனைக் கூட்டிக் கொண்டே வராந்தாவில் நடந்த டாக்டர், சேவகனை ஒரு டம்ளரில் குளிர்ந்த தண்ணீர் கொண்டு வரும்படி உத்தரவிட்டுக் கொண்டே, தமது அறையில் நுழைந்தார்.

"உட்காருங்கள் மிஸ்டர் ரவீந்திரன்" என்று எதிரேயிருந்த நாற்காலியைக் காட்டியவாறு, மின்சார விசிறியின் விசையைப் போட்டார் டாக்டர். இதற்குள் சேவகன் ஒரு கிளாஸ் டம்ளரில் தண்ணீர் கொண்டு வந்து மேஜையின் மேல் வைத்தான்.

"மிஸ்டர் ரவீந்திரன், இதைச் சாப்பிடுங்கள். உங்களுக்காகத்தான் கொண்டு வரச் சொன்னேன். படபடப்பு கொஞ்சம் அடங்கும். வெறும் பச்சைத் தண்ணீர்தான். மருந்து இல்லை!"

"இரண்டுக்கும் வித்தியாசம் இருக்கிறது என்று நீங்களே சொல்லும்போது நான் நம்ப வேண்டியதுதானே!" என்று சொல்லிக் கொண்டே டம்ளரைக் கையில் எடுத்தான் ரவீந்திரன்.

"பேஷ். இப்பொழுதுதான் ஹாஸ்யம் வருகிறது உங்கள் பேச்சில். ரொம்ப சரி. உங்களுடைய இயற்கையான சுபாவம் இதுதான். எனக்குத் தெரியும் அது!" என்று டாக்டர் சொல்லிக் கொண்டே, மேஜையின்மேல் விரல்களைத் தட்டித் தாளம் போட்டார்.

"டாக்டர் ஸார், என்னை நீங்கள் புகழ ஆரம்பிக்கிறீர்கள். பயமாக இருக்கிறதே!"

டாக்டர் சிரித்தவாறு ரவீந்திரனுடைய கண்களையே உற்றுப் பார்த்தார். அவனுடைய உடம்பை ஊடுருவி உள்ளத்தையே பார்ப்பது போல இருந்தது அது.

"என்ன பார்க்கிறீர்கள் என்னை? நான் யோக்கியனா அல்லது அயோக்கியனா என்று ஆராய்கிறீர்களா?" என்றான் ரவி.

"மிஸ்டர் ரவி, உங்களுடைய உள்ளம் ஒரு உயர்ந்த வீணையைப் போன்றது. அதை லாகவமாகத்தான் கையாள வேண்டும். அந்த......அந்த......அதற்குப் பெயர் என்ன, தந்தியை முறுக்குவதற்கு இருக்குமே 'ஸ்க்ரு'..."

"பிருடை என்று இந்தக் காலத்தில் சொல்கிறார்கள். மாடகம் என்பது பழைய வார்த்தை அதற்கு!" என்றான் ரவி.

"ஓ! சரிதான். மாடகம். அந்தச் சொல் அழகாக இருக்கிறதே! மாடகம். பேஷ். உங்களுடைய உள்ளத்தின் மாடகத்தை ஜாக்கிரதையாக முறுக்கி சுருதி கூட்ட வேண்டும். முரட்டுத்தனமாகத் திருகிவிடக் கூடாது. சில உள்ளங்கள் என்னைப் போல இருக்கும்—தவுல் மாதிரி என்று வைத்துக்கொள்ளுங்களேன்! அவற்றைக் கம்பினால்தான் தட்ட வேண்டும். அடிக்க வேண்டும். வெறுங் கையை உபயோகிப்பதற்குக் கூட விரல்களில் குப்பி போட்டுக் கொள்ள வேண்டும்!—மன்னித்து விடுங்கள், உங்களிடம் வந்து சங்கீதப் பேச்சுப் பேசுகிறேனே!"

இவ்வாறு டாக்டர் ஒவ்வொரு வார்த்தையைச் சொல்லும்போதும் ரவீந்திரனுடைய முகத்தில் என்ன சாயல் ஏற்படுகிறது என்பதைக் கூர்ந்து கவனித்தார்.

"டாக்டர், எதற்காக இத்தனை பீடிகை போடுகிறீர்கள்?" என்று நேரான ஒரு கேள்வியைப் போட்டு மடக்கினான் ரவி.

"மிஸ்டர் ரவீந்திரன், ஆலாபனை செய்து விட்டுத்தானே, கீர்த்தனையை வாசிக்க வேண்டும். அது போல—"

"டாக்டர் ஸார், நீங்கள் எந்த விஷயத்துக்கு வருகிறீர்கள் என்று எனக்குப் புரிகிறது. தயவுசெய்து என்னுடைய சொந்த விஷயங்களைப் பற்றி மட்டும் ஒன்றும்—"

"ரவி, என்னிடம் நீங்கள் இப்பொழுது சில விஷயங்கள் சொல்லித்தான் ஆக வேண்டும். உங்கள் மனைவியின் நன்மைக்காக—" என்றார் டாக்டர்.

"எங்கள் நன்மையில் இத்தனை தூரம் சிரத்தை எடுத்துக் கொள்வதற்கு வேண்டிய உறவோ நட்போ நமக்குள் இல்லை—"

டாக்டர் முகம் கடுகளவுகூட வித்தியாசப்படவில்லை. உள்ளங்களின் இயல்பு தெரிந்த புத்திசாலி அவர்! சிரித்துக் கொண்டே மேலே பேசினார்:

"மிஸ்டர் ரவீந்திரன், நான் ஒரு டாக்டர். இந்த விபத்துக்கு முன்னரும் பின்னரும் உங்களுடைய மனைவியின் நரம்புகளில் ஏற்பட்டிருக்கிற அதிர்ச்சியைச் சோதித்து அறியவே உங்களை இப்படியெல்லாம் கேட்கிறேன். உங்களைப் பார்ப்பதற்கு முன்பே இதைக் கேட்க வேண்டும் என்று நினைத்தேன். பார்த்த பிறகோ பல நாள் உங்களோடு பழகியது போன்ற ஒரு பிரமையே இந்தச் சில நிமிஷ நேரத்துக்குள் எனக்கு ஏற்பட்டு விட்டது. இந்த நிலைமையில் டாக்டராகவும், நண்பனாகவும் இருந்து கேட்கிறேன். என்னிடம் ஒன்றையும் ஒளிக்க வேண்டாம். நான் ஊகித்து வைத்திருப்பது சரிதானா என்று பார்க்கவே கேட்கிறேன். இந்தச் சந்திரிகாவுக்கும் உங்களுக்கும் என்ன தொடர்பு, எப்படி ஏற்பட்டது—"

ரவீந்திரன் மௌனமாக இருந்தான். டாக்டர் அவன் முகத்தையே கவனித்தார்.

"மிஸ்டர் ரவி, என்னிடம் நீங்கள் தாராளமாகப் பேசலாம். கூச்சமே வேண்டியதில்லை. நீங்கள் சொல்கிற ரகசியம் என்னை விட்டு வெளியே போகாது."

ரவீந்திரன் ஒரு விநாடி கண்களை மூடினான். தன்னுடைய வாழ்க்கையின் கீதத்தையே தான் புல்லாங்குழலில் வாசிப்பது போலவும், அந்த ஒலியின் பின்னணியிலே சந்திரிகாவின் முகம் நிற்பது போலவும் ஒரு ஓவியம் அவனுடைய மனக் கண்ணின் முன் தெரிந்தது. சொன்னான்:

"டாக்டர், எனக்கு என்னவோ உங்களுடைய பேச்சு படிப்படியாகப் பிடித்துப் போய் விட்டது. அதிலும் என் மனசை ஒரு வீணை என்று சொன்னீர்களே, அது எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது. இந்த வீணையின் நரம்புகள் சிலசமயம் சின்னா பின்னமாகிப் போய் விடுகின்றன. நீங்கள் புரிந்து கொள்வீர்கள் என்று எனக்குப் படுகிறது. அதனால் அந்த சோகக் கதையை உங்களிடம் சொல்கிறேன். இன்னொரு டம்ளர் தண்ணீர் கொண்டு வரச் சொல்லுங்கள்" என்றான் ரவீந்திரன். அவனுடைய குரல் கம்மிற்று.

டாக்டர் தாமே எழுந்து போய் அறையின் ஓரத்தில் இருந்த ஜாடியிலிருந்து தண்ணீர் கொண்டு வந்து மேஜையின் மேல் வைத்தார். ரவீந்திரனுடைய மனக் கதவு திறந்தது! (தொடரும்)

# கால்கேட்
# குளோரோபில் டூத்பவுடர்




## குளோரோபிலின் பூரண நன்மைகளை நீங்கள் உபயோகிக் கையில் தருகிறது!

## வீரிய குளோரோபில்தான் பலன் தரும்!

வீரிய குளோரோபிலின் நன்மைகளை எல்லாம் புதிய கால்கேட் குளோரோபில் டூத் பவுடர் தருகிறது. வீரிய குளோரோபில் தான் வாய் நாற்றம், கிரிமிகளை நீக்கி ஈறுகளைப் பலப்படுத்துகிறது. கால்கேட் முறையில் குழந்தைகளுக்கு குளோரோபில் கவனிப்பை அளியுங்கள்—அரிய சந்தர்ப்பம்.



### வாய் நாற்றத்தை அழிக்கிறது

ஒரு விசேஷ சூத்திரம் காரணமாக கால்கேட் குளோரோபில் டூத்பவுடர் துரிதமாக, திருத்தமாக வேலை செய்கிறது. உங்கள் வாய் அதிகநேரம் புதுமை, இனிமையுடன் இருக்கிறது. அதன் வாசனை ஜோரானது!

### கிருமிகளை ஒழிக்கிறது



சாப்பிட்டவுடன் கால்கேட் குளோரோபில் டூத் பவுடரை உபயோகிப்பதால் பற்களைச் சிதைக்கும் அமிலங்கள் ஒழிகின்றன.



### ஈறுகளை பலப்படுத்துகிறது

ஈறுகளை குளோரோபில் பலப்படுத்துகிறது. தினசரி கால்கேட் குளோரோபில் டூத் பவுடரை உபயோகிப்பதால் குளோரோபிலின் பூரண நன்மைகளைப்பெற்று ஈறுகளைப் பாது காக்கலாம்.




CTPG/1



ஸ்ரீ கற்பக விநாயகர் துணை

# சிதம்பரம் ஸ்ரீ நடராஜப்பெருமான் திருக்கோயில் திருப்பணி

# மஹா கும்பாபிஷேகம்

**மன்மத வருஷம் ஆனிமீ 23உ**
**(7-7-55) வியாழக்கிழமை**

○●○

சிவத்தலங்களுள் 'கோயில்' என்ற சைவத் திருமறைகளில் சிறப்பித்துப் போற்றப் பெறுவது தில்லையம்பதியாகும். புலிக்கால் முனிவராகிய வியாக்கிரபாதரும், பதஞ்சலி முனிவரும் சைவத் திருமுறை யாசிரியர்களும், வேந்தர், குறுநில மன்னர், படைத் தலைவர். அமைச்சர், செல்வர், பொதுமக்கள் ஆகிய எல்லா மக்களும் இப்பதியில் உள்ள பொன்னம்பலத்தில் ஆடல் புரியும் நடராஜப் பெருமானை வழிபட்டு இம்மை மறுமை இன்பங்களை அடைந்துள்ளார்கள். "மூர்த்தியம்பலக் கூத்தனது உருவே, ஏத்திடுந் தலம் எழில் புலியூரே தீர்த்தமென்பது சிவகெங்கையே" என மூர்த்தி தலம், தீர்த்தம் ஆகிய இம்மூன்றினாலும் முதன்மை பெற்று விளங்குவது பெரும் பெற்றப் புலியூராகிய இச் சிதம்பரமாகும். ஆதலால் தில்லைப் பெருங்கோயில் "பூலோக கைலாயமென ஆன்றோர்களால் போற்றப் பெறுவதாகும்.

இத்தலத்தின் இறைவன் உலகெலாம் உய்யத் திருநடனம் செய்யும் அருள் நிலையமாக விளங்குவது கனகசபையாகிய பொன்னம்பலமாகும். ஞான ஆகாசமாகத் திகழும் இப் பொன் மன்றத்தை முடிவேந்தர் பலரும் செம் பொன்னால் வேய்ந்து வழிபட்டுள்ளார்கள்.

தில்லைத் திருச்சிற்றம்பலத்தில் ஆடல் புரியும் கூத்தப்பிரானது அருட் கலையே உலகிலுள்ள திருக்கோயில்கள் எல்லாவற்றிலும் நிலைபெற்று உயிர்களை உய்விக்கின்றது எனவும், ஒவ்வொரு நாளும் அர்த்தயாமத்தில் அவ்வருட் கலைகள் எல்லாம் மீண்டும் இத் தில்லையம்பலத்திலே வந்து ஒடுங்குகின்றன எனவும் பாரதநாட்டு அருள் நூல்கள் கூறுகின்றன. இத்தகைய சிறப்பு வாய்ந்த இத் திருக்கோயிலுக்கு 63 ஆண்டுகளுக்கு முன் கும்பாபிஷேகம் நடைபெற்றது. அறுபது ஆண்டுகளுக்கொருமுறை புனருத்தாரணமும் மகா கும்பாபிஷேகமும் செய்து வழிபாடு செய்ய வேண்டும் என்ற சாத்திர முறையை யொட்டி இப்பொழுது திருப்பணி செய்ய வேண்டியுள்ளது.

அதற்கு இணங்கத் திருவருள் கூட்டுவிக்கின்ற இவ்வரிய பேற்றைத் துணை கொண்டு, இவ்வாலயத்துட் சிற்சில இடங்களைத் திருப்பணி செய்து மகா கும்பாபிஷேகம் செய்ய ஆன்றோர்களால் "கும்பாபிஷேகக் கமிட்டி" யொன்று நிறுவப் பெற்றுள்ளது. மேற்படி கும்பாபிஷேகம் நாளது மன்மத ஆண்டு ஆனித் திங்கள் 23உ (7-7-55) வியாழக்கிழமை யன்று நடைபெற ஸ்ரீ நடராஜப் பெருமான் திருவருளைத் துணை கொண்டு ஏற்பாடு செய்யப் பெற்றுள்ளது.

எல்லாத் திருத்தலங்கட்கும் பொது நிலையமாக விளங்குவதால் 'பொது' எனப் போற்றப் பெறும் இத் திருக்கோயில் திருப்பணியில் இந்நாட்டிலுள்ள எல்லா மக்களும் பங்கு கொள்ளுதற்கு உரியவராவர். எனவே இவ்வரிய பணியில் சிவநேசச் செல்வர்களும் சீரிய அன்பர் பெருமக்களும் பங்கெடுத்துக் கொண்டு தத்தம் ஆற்றலுக்கேற்ப பொருளுதவி புரிந்துதவ வேண்டுகிறோம்.

மேற்படி சத் கைங்கரியத்திற்கு உரிய தொகைகள் "பொக்கிஷதார், ஸ்ரீ சபாநாயகர் கோயில் திருப்பணி கும்பாபிஷேகக் கமிட்டி, சிதம்பரம்" என்கிற விலாசத்திற்கு அனுப்பும்படி கோரப்படுகிறது.

இங்ஙனம்,

சிதம்பரம் 4-3-55 } ஸ்ரீ சபாநாயகர்கோயில் திருப்பணி கும்பாபிஷேகக் கமிட்டியார்

# பச்சைப் புடவை

தங்கம்



அன்று வெள்ளிக்கிழமை. அதிகாலையில் வீசிய மந்தமாருதமும் மலர்களின் நறுமணமும் பறவைகளின் இனிய கீதமும் என்னைப் பரவச மடையச் செய்தன. அந்த இன்பத்தை அனுபவித்த வண்ணம் படுக்கையிலிருந்து எழுந்திருக்காமல் புரண்டு கொண்டிருந்தேன். ஆனால் காலை இளஞ் சூரியன் தன் பொற் கிரணங்களை என் மேல் அள்ளிச் சொரிந்து என் அலுவல்களை நினைவூட்டினான். படுக்கையிலிருந்து அவசரமாக எழுந்தேன். அதிக நேரம் தூங்கி விட்டோமே என்று நினைத்துக் கொண்டே படுக்கை அறையை விட்டு வெளியே வந்தேன். அதற்குள் என் அருமைச் செல்வன் "அம்மா!" என்று கொஞ்சும் குரலில் கூப்பிட்டுக் கொண்டே துள்ளிக் குதித்து என் அருகில் ஓடி வந்தான்.

அன்று என் சீமந்த புத்திரன் ராமுவுக்கு முதல் ஆண்டு பூர்த்தி அடைகிறது. அதைச் சிறப்பாகக் கொண்டாட நானும் என் கணவரும் திட்டமிட்டிருந்தோம்.

நான் குழந்தையைக் கவனித்து விட்டு உள்ளே செல்லும்போது, என் அத்தை பாதி வேலைகளை முடித்து விட்டு நடுக் கூடத்தில் முத்துப்போல் அழகாகக் கோலம் போட்டிருந்தார்கள். நானும் என் அத்தையுடன் சேர்ந்து பம்பரம் போல் வேகமாகச் சுழன்று காரியங்களைத் துரிதமாகச் செய்ய ஆரம்பித்தேன். பத்து மணிக்கு முகூர்த்தம்; அதற்குள் எல்லாம் தயாராகி விட்டது.

என் தோழிகளும் உறவினர்களும் என் கணவரின் நண்பர்களும் வந்தவண்ணமிருந்தனர். அவர்களை ஓடியாடி வரவேற்று உபசரித்து மகிழ்ந்தேன்.

ராமுவைக் குளிப்பாட்டி, ஆடை ஆபரணங்களால் அலங்கரித்து என் கணவர் மடியில் உட்கார வைத்தேன்.

நாயனக்காரன் தன் திறமை யெல்லாம் எடுத்துக் காட்டி மோகன ராகத்தை அற்புதமாகப் பொழிந்து கொண்டிருந்தான். புரோகிதரும் குறிப்பிட்ட வேளையில் வந்து அப்த பூர்த்தியை நன்கு நிறைவேற்றி வைத்தார்.

எல்லோரும் அவரவர்கள் அன்புப் பரிசை அள்ளி வழங்கினார்கள். ரோஜா மலரைப் போன்ற நிறமும், கருவண்டை யொத்த அழகிய கண்களும், சந்திரனைப் போன்ற உருண்டை முகமும், நெளிநெளியாகச் சுருண்டு தொங்கும் குழலும், சிரித்தால் கன்னங்குழியும் மோகன வடிவும் கொண்ட என் அருமை மைந்தனை மனமார ஆசிர்வதித்தார்கள். அவனுக்குக் கண்டிப்பாய் திருஷ்டி கழிக்க வேண்டும் என்று என்னை வற்புறுத்தினார்கள்.

மத்தியானம் அறுசுவையுடன் கூடிய அருமையான விருந்து நடந்தது. அனைவரும் சந்தன தாம்பூலம் பெற்றுக் கொண்டு எங்களிடம் விடைபெற்றுச் சென்றனர். உடனே அத்தையும் குழந்தைக்கு திருஷ்டி கழித்தாள். அன்று இரவு ஹனுமார் கோவிலுக்குச் சென்று ராமுவுக்கு அர்ச்சனை செய்து பிரசாதங்களுடன் திரும்பி வந்தோம். அன்று முழுவதும் என் உள்ளம் ஆனந்தத்தால் பூரிப்படைந்திருந்தது.

மறு நாள் பொழுது புலர்ந்தது. கண் விழித்ததும் என் வலது கண் துடிக்க ஆரம்பித்து விட்டது. இது என்ன சங்கடம்! என்ன சம்பவம் நிகழப் போகிறதோ என்று கவலைப் பட்டேன். ஒருவேளை குழந்தைக்குத் தான் திருஷ்டியினால் உடம்புக்கு ஏதேனும் வரப்போகிறதோ என்று விசாரப்பட்டேன்.

மனக் கலக்கத்தை மறைக்கக் குளிர்ந்த தண்ணீரில் ஸ்நானம் செய்து, ஈரப்புடவையுடன் கொடியில் இருக்கும் மடிப்புடவையைக் கட்டிக் கொள்ள வந்தேன். என்ன அதிசயம்! என் உயிருக்குயிரான பச்சைப் புடவையைக் காணேம். தூக்கிவாரிப் போட்டது எனக்கு. உடனே விசாலத்தை அழைத்தேன்.

விசாலம் எங்கள் வீட்டில் ஐந்து ஆண்டுகளாக வேலை செய்து வருகிறாள். பதினாறு வயது இள மங்கை. கள்ளங் கபடமற்ற வெள்ளை உள்ளம் கொண்டவள். சிட்டுக் குருவி போல் துறுதுறு வென்று வேலைகளைச் செய்வாள். அவளைச் சந்தேகப்பட என் மனம் இடம் கொடுக்கவில்லை. எனினும் அவளை விசாரிக்க எண்ணி, "விசாலம்! கொடியில் உலர்த்தி

யிருந்த பச்சைப் புடவை எங்கே!" என்று படபடப்புடன் கேட்டேன்.

"அம்மா இப்பத்தான் நினைவுக்கு வருகிறது. நேற்றையக் களேபரத்தில் புடவையைத் துவைக்க மறந்து விட்டேன்" என்றாள்.

"குளிக்கும் அறையில் போட்டிருந்தேன். உடனே துவைத்துப் போடு" என்றேன்.

விசாலம் போய்ப் பார்த்து விட்டு என்னிடம் வந்தாள். "அம்மா குளிக்கும் அறையிலே காணுமே!" என்று கூறிவிட்டு இங்கும் அங்கும் ஓடி ஆடித் தேடினாள். ஆனால் எங்குமே புடவை காணப்படவில்லை.

எனக்கு ஒன்றுமே புரியவில்லை. எங்கு மாய மாய்ப் போயிருக்க முடியும்! ஒருகால் நேற்று நடந்த விசேஷத்தில் சமையல் செய்ய வந்த ஆட்கள் யாராவது எடுத்துக் கொண்டு போயிருப்பார்களா! இப்படி அலட்சியமாகப் பறி போக விட்டு விட்டேனே என்றெல்லாம் எண்ணித் தவித்தேன். அத்தையிடம் ஓடிப் போய் "என் பச்சைப் புடவையைக் காண வில்லை" என்று சொல்லி வருந்தினேன். அத்தையும் என்னைப் பலவாறாகச் சமாதானம் செய்தார்கள். ஆனால் என் மனம் சமாதானம் அடையவே யில்லை.

ஒரு பச்சைப் புடவைக்காக ஏன் இத்தனை தூரம் பிரமாதப்படுத்த வேண்டும் என்று கேட்கலாம். அதே போல் ஒரு புடவை என்ன, ஏண்பது புடவை கூட வாங்க எனக்கு இப் போது சக்தி இருக்கிறது. ஆனாலும் என் வாழ்க்கையில் முக்கிய பாகத்தை நிர்வகித்த ராசியான பச்சைப் புடவைக்கு அவை ஈடாகுமா! அது மட்டுமா! அந்தப் புடவை என் அத்தானின் அன்புப் பரிசு. இன்று நான் இவ்வளவு சௌபாக்கியங்களுடன் வாழ்வதற்குக் காரணமான காதல் பரிசு. அதை இவ்வாறு அநியாயமாகக் கொள்ளை போக விட என் மனம் சம்மதிக்குமா! எங்கள் குல தெய்வமான ஹனுமாருக்கு என் புடவையை மீட்டுத் தந்தால் வடை மாலை சாத்துவதாக வேண்டிக் கொண்ட பிறகுதான் சற்று மன நிம்மதி அடைந்தேன்.

ராமுவைத் தொட்டிலில் இட்டுத் தாலாட்டினேன். என்னுடைய கைகள்தான் தொட்டிலை ஆட்டினவே தவிர, என் மனம் ஐந்து ஆண்டுகளுக்கு முன்னால் நடந்த இன்ப நிகழ்ச்சிகளுக்குத் தாவியது.

* * *

நான் ஒரு ஏழை உபாத்தியாயருக்கு மகளாய்ப் பிறந்தேன். எனக்கு இரண்டு சகோதரிகளும் மூன்று சகோதரர்களும் உண்டு. வறுமையிலே பிறந்த போதிலும் நாங்கள் அழகிலும், ஆரோக்யத்திலும் செல்வந்தர்களை விடப் பன்மடங்கு உயர்ந்தே இருந்தோம். என் சகோதரிகளுக்குப் படிப்பில் நாட்டம் இல்லாததால் என்னையும் மூன்று தம்பிகளையும் அரும்பாடு பட்டுப் படிக்க வைத்தார் என் தந்தை. நாங்கள் மிகவும் நன்றாகப் படித்த படியால் சம்பள மின்றியே படித்துக் கொண்டு வந்தோம். வீட்டில் எங்களைத் தவிர வயதான பாட்டி, தாத்தா இருவரும் இருந்தனர். எவ்வளவு சிக்கனமா யிருந்த போதிலும் என் தந்தை எங்களால் மிகவும் சிரமப்பட்டார்.

என் தந்தையுடன் கூடப் பிறந்த ஒரே சகோதரியான என் அத்தை லக்ஷ்மி நான் ஐந்து வயதுச் சிறுமியாய் இருந்த போதே எங்களை யெல்லாம் பிரிந்து குடும்பத்துடன் இலங்கையில் குடியேறினார்கள். அவள் புருஷன் ஒரு பெரிய தேயிலைத் தோட்ட முதலாளியான படியால் அவர்கள் செல்வத்திலேயே திளைத்துக் கொண்டிருந்தார்கள்.

லக்ஷ்மி அத்தை அடிக்கடி கடிதமெழுதுவதுடன் எங்களுக்குப் பண உதவியும் அளித்து வந்தார். அவருடைய பேருதவியால்தான் என்னுடைய சகோதரிகள் இருவரையும் சுமாரான இடத்தில் விவாகம் செய்து கொடுக்க முடிந்தது.

நான் அந்த வருடம்தான் எஸ். எஸ். எல். ஸி. பரீட்சையில் தேறி யிருந்தேன். வீணை வாசிப்பதிலும் நன்கு தேர்ச்சி பெற்றிருந்தேன். ஏற்கெனவே சளைத்துப் போயிருந்த என்னுடைய தந்தைக்கு என் விவாகத்தின் மூலம் சிரமத்தை அளிக்க விரும்ப வில்லை. உபாத்தியாயினி வேலைக்குப் போய் என் குடும்பத்தைக்



காப்பாற்ற வேண்டும் என்று கங்கணம் கட்டிக் கொண்டேன் நான்.

இதற்கிடையில் ஒரு நாள் அத்தையிடமிருந்து கடிதம் வந்தது. அதில் சென்னையில் ஒரு நல்ல பங்களாவை விலை பேசி வைக்கும்படியும், கூடிய சீக்கிரம் சென்னை வருவதாகவும் எழுதியிருந்தாள். பங்களா வாங்கும் தொகையை முன்கூட்டியே அனுப்புவதாகத் தெரிவித்திருந்தாள். என் மனம் மட்டற்ற மகிழ்ச்சி அடைந்தது. சின்னஞ்சிறு வயதில் பார்த்த அத்தை, சங்கர் அத்தான் முதலியவர்களைப் பார்க்கப் போகிறோம் என்று துள்ளிக் குதித்துக் கொண்டிருந்தேன்.

மாம்பலத்தில் ஒரு அழகிய பங்களாவை விலை பேசி முடித்தார் என் தந்தை. குறிப்பிட்ட தினத்தில் இலங்கையிலிருந்து என் அத்தையின் குடும்பத்தினர் வந்தார்கள். எனக்கும் விடுமுறை நாட்களாதலால் அத்தை வீட்டிலேயே பெரும் பகுதியைக் கழித்தேன். அவர்களுக்கும் உபகாரமாக எல்லா வேலைகளையும் உற்சாகமாகச் செய்வேன். என்னிடம் எல்லாரும் மிகவும் பிரியமாயிருந்தார்கள். முதலில் அத்தானைக் காணவே வெட்கப்பட்டேன். நாளடைவில் கூச்சத்தை விட்டு அவருடன் கலகலப்போடு பழகினேன்.

அத்தான் சிறந்த அறிவாளி. உயர்ந்த ரசிகர். அற்புதமாகச் சித்திரம் வரைவார். நாள் முழுவதும் தோட்டத்திலேயே கழிப்பார். அவரும் நானும் சேர்ந்து பல வகை வண்ண மலர்ச் செடிகளையும் பயிரிடுவோம். எங்கள் முயற்சியின் பலனாய்த் தோட்டம் ஒரு அழகிய பூஞ்சோலையாகத் திகழ்ந்தது. பச்சைக் கம்பளம் விரித்தாற் போல் இருக்கும் பசும்புல் தரையில் அமர்ந்து இலங்கையின் வனப்புகளைத் தத்ரூபமாய் வர்ணிப்பார். எனக்குப் பல இலக்கிய நூல்களுக்கு விளக்கம் கூறுவார். அதையெல்லாம் என்னை மறந்து கேட்டுக் கொண்டிருப்பேன். பால் போன்ற வெண்ணிலவில் என்னை வீணை வாசிக்கச் சொல்லி அவர் ரசிப்பார். அவருடன் பழகிப் பல அருமையான விஷயங்களைத் தெரிந்துகொண்டேன். என்னையுமறியாமல் என் உள்ளத்தில் அவருக்கு இடமளித்து விட்டேன்.

அவர் மாநிறம்தான். ஆனால் களை சொட்டும் முகம், அறிவொளி வீசும் கண்கள், எடுப்பான மூக்கு, சுருட்டைத் தலை—இவை அவரைச் சிறந்த அழகன் என்று பறைசாற்றின. முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப் பட்டது போல் ஏழைமையிலே பிறந்த நான் செல்வத்திலே மிதக்கும் அவரை அடைய எண்ணி ஏங்கினேன். அத்தான் மனமோ புரிந்து கொள்ள முடியாத புதிராக இருந்தது. அவர் உள்ளத்தில் எனக்கு இடமுண்டா இல்லையா என்பதையே தெரிந்து கொள்ள முடியவில்லை.



அப்போது நவராத்திரி விழா ஆரம்பமாகியிருந்தது. அதையொட்டி ஒன்பது நாளும் விசேஷ பூஜை நடக்கப் போவதாய் லக்ஷ்மி அத்தை என்னிடம் தெரிவித்திருந்தாள். பூஜையைப் பார்க்க அன்றைக்கு அவர்கள் வீட்டில் நுழைந்தேன். அப்போது மாமா ஊஞ்சலில் உட்கார்ந்து மெதுவாக ஆடிக் கொண்டிருந்தார். அத்தை அருகில் நின்று சங்கர் அத்தானின் கலியாண விஷயமாகப் பேசிக் கொண்டிருந்ததைக் கவனித்து வாயிற் புறத்திலேயே நின்று அவர்கள் சம்பாஷணையை ஆவலுடன் கேட்டேன்.

"இந்த வருடம் சங்கருக்குக் கண்டிப்பாகக் கல்யாணத்தைப் பண்ணிவிட வேண்டும்" என்றாள் லக்ஷ்மி அத்தை.

"பெரிய பணக்காரர்கள் வீட்டிலிருந்து ஜாதகங்கள் வந்து குவிந்த வண்ணமிருக்கின்றன. எதையாவது ஒன்றை முடிவு செய்யவேண்டும்" என்றார் அவர்.

"அது சரி. என் அண்ணா பெண் கௌரியைவிட அழகிலும், அடக்கத்திலும் மேம்பட்ட ஒரு பெண் நமக்கு மருமகளாகக் கிடைக்கவே மாட்டாள். பணக்காரப் பெண் வந்தால் படித்த பெருமையில் நம்மைப் பம்பரமாக ஆட்டி வைத்து விடுவான்" என்று கூறினாள் அத்தை.

"இதில் ஏன் நாம் தர்க்கம் செய்துகொள்ள வேண்டும்! நமக்கிருப்பதோ ஆசைக்கும் ஆஸ்திக்கும் ஒரே பிள்ளை. அவனுக்கு யாரைப் பிடிக்கிறதோ அதைச் செய்து விட்டால் போகிறது" என்றார்.

இதை யெல்லாம் கேட்ட போது என் மனம், 'பகவானே! அத்தானுக்கு என்னைப் பிடிக்கா விட்டால் என் வாழ்க்கை பாழாகி விடுமே. அவரை அடையாமல் இருந்தால் காலம் முழுதும் கன்னியாகவே கழித்துவிட வேண்டியதுதான்' என்ற முடிவுக்கு வந்தது. உடனே வந்த சுவடு தெரியாமல் தோட்டத்துக்குப் போய் ரத்தச் சிவப்பு வர்ணமுள்ள செம்பருத்திப்பூக்களைப் பறித்து மாலையாகத் தொடுத்தேன். ராஜராஜேசுவரி அம்மன் கொலுவீற்றிருந்த படத்துக்கு முன்னால் முத்துப் போல் புள்ளி வைத்து என் கற்பனையைக் காட்டக் கோலம் போட்டேன். கோலத்தின் நடுவில் குத்து விளக்குகளை ஏற்றி வைத்தேன். நான் கட்டிய மாலைகளை அம்மனுக்குச் சாத்தி ஊதுவத்தி, சாம்பிராணி தூபம் காட்டினேன். விளக்குகளின் தேஜோமயமான ஒளியில் ஜகன் மாதா மந்தகாசத்துடன் பிரகாசித்துக்கொண்டிருந்தாள். "தாயே! இந்த ஏழையின் ஆசையைப் பூர்த்தி செய்வாயா!" என்று வேண்டிக் கொண்டேன். இவ்விதம் என்னை மறந்த நிலையில் இருந்தபோது, "கௌரி, கௌரி!" என்று என்னை யாரோ கூப்பிடுவது போலிருந்தது.

ராஜராஜேஸ்வரிதான் என் பிரார்த்தனைக்குச் செவி சாய்த்து விட்டாளோ என்று எண்ணி வியந்தேன். சாட்சாத் என் அத்தான், என் இதயத்தில் குடிகொண்டிருக்கும் என் அருமை சங்கர் அத்தான், என்னை அழைப்பதைக் கேட்டு மாடிக்கு விரைந்தேன்.

"கௌரி! இன்று நவராத்திரி வெள்ளிக் கிழமை அல்லவா! அதற்காக உனக்கு ஒரு பரிசு அளிக்கப் போகிறேன்; இதோ பார், இந்தப் பட்டுப் புடவையை. உனக்குப் பிடிக்கிறதா!" என்று ஒரு அழகிய பச்சைப் புடவையைக் காட்டினார்.

ஆஹா, என்ன அழகு! கிளிப் பச்சை நிற உடையில் சன்னமான சிவப்புக்கறை கண்ணைப் பறித்தது. அதில் மனத்தைக் கவரும் மயில் பார்டர். புடவை முழுவதும் ஜரிகை மல்லிகை மொட்டு வேலைப்பாட்டுடன் நட்சத்திரம் கண்ணைச் சிமிட்டுவது போல் தோன்றியது.

என்னால் என் கண்களை நம்ப முடியவில்லை. "எனக்கா, அத்தான்!" என்று கேட்டேன்.

"ஆமாம், கௌரி! உடனே கட்டிக்கொண்டு வா!" என்றார்.

என்னால் என் சந்தோஷத்தை மறைக்க முடியவில்லை. என் வாழ்நாளில் பட்டுப் புடவையையே அறியாதவள். அதிலும் எனக்குப் பிடித்த பச்சை நிறம், அதைவிட என் உள்ளத்தில் குடிகொண்ட அன்பரின் அன்பளிப்பு, இதை யெல்லாம் எண்ணி உணர்ச்சி வெள்ளத்தில் திக்குமுக்காடினேன்.

புடவையைக் கட்டிக் கொண்டேன். நிலைக் கண்ணாடியின் முன் நின்று என் உருவத்தைப் பார்த்தேன். மாடிக்கு ஓடினேன். "அத்தான், என்னைப் பாருங்கள்!" என்று கூறி அவர் பாதங்களில் விழுந்து வணங்கினேன். புஷ்பச் செண்டைத் தாவி எடுப்பது போல் என்னை அன்போடு தூக்கி நிறுத்தினார் அவர்.

"கௌரி! பெண்களைப் பற்றிச் சிந்திக்காது இருந்த என்னை உன் அன்பாலும் அழகாலும் வசீகரித்து விட்டாய். விலைமதிக்க முடியாத தங்க விக்கிரகமான உன்னைத் தவிர நான் எவரையும் மணந்து கொள்ள மாட்டேன். என் உள்ளத்தை வெளிப்படுத்தவே இப் பரிசை உனக்கு அளித்தேன். இந்தப் புடவை நம் அன்பின் சின்னம். இதைப் பத்திரமாக வைத்துக்கொள்" என்று அன்பு ததும்பச் சொன்னார்.

எனக்கு வானவெளியில் மிதப்பது போன்ற பிரமை உண்டாயிற்று. "அத்தான், ராஜேசுவரி அம்மன் நம் வாழ்க்கை விளக்கை ஏற்றி வைத்து விட்டாள். இனி நமக்கு ஒரு குறையும் இல்லை" என்றேன்.

அடுத்த தையில் எங்கள் திருமணம் இனிது நடந்தேறியது. போன வருடம்தான் எங்கள் அன்பில் விளைந்த அமுதமான ராமு பிறந்தான். அதுமுதல் அந்தப் பச்சைப் புடவையைக் 'கண்ணின் கருமணி'போல் இமையால் மூடிக் காத்து வந்தேன். ஐந்து வருடங்கள் ஆகியும் புதுமெருகு குலையாமல் இருந்தது அந்தப் பச்சைப் புடவை. எனக்கு இன்ப வாழ்வு அளித்து, என்னையும் என் குடும்பத்தையும் வறுமையிலிருந்து விடுவித்த அன்புத் தெய்வமான என் கணவர் அளித்த காதல் பரிசல்லவா அந்தப் பச்சைப்புடவை! அதை ஒருநாளில் தொலைத்து விட்டேனே என்று எண்ணியபோது என்னையும் அறியாமல் கண்களில் கண்ணீர் பெருக ஆரம்பித்து விட்டது.

இந்தச் சமயத்தில், "கௌரி! நான்வந்ததைக் கூடக் கவனியாமல் அப்படி என்ன ஆழ்ந்த சிந்தனை! ஏன் ஒரு மாதிரியாக இருக்கிறாய்!" என்று பரிவுடன் கேட்டார் என் கணவர்.

"அத்தான்! நீங்கள் அளித்த அன்புப் பரிசான பச்சைப் புடவையைத் தொலைத்து விட்டேன்" என்று சொல்லிப் பொறுக்க முடியாமல் விம்மி யழுதேன்.

"போனால் போகிறது; எங்கும் தொலைந்து விடாது. கிடைத்து விடும். வீணாகக் கவலைப் படாதே" என்று என்னைத் தேற்றினார்.

மூன்று நாட்கள் ஓடி விட்டன. விசாலம் அன்று வேலைகளை முடித்து விட்டு மூன்று மணி சுமாருக்கு என்னிடம் வந்தாள்.

"அம்மா! எங்க சின்னம்மா பிள்ளை ரொம்பக் காயலாகக் கிடக்கிறான். போய்ப் பார்த்து விட்டு நாளைக்கு வரேன்" என்று சொல்லி விட்டுக் கிளம்பினாள்.

ஒவ்வொரு நாளும் மாலையில் விளக்கு வைத்ததும் என் அத்தைக்கு ராமாயணம் வாசித்துக் காட்டுவேன். சென்ற ஐந்து ஆண்டுகளாகத் தொடர்ந்து இந்தக் காரியத்தைச் செய்து வருகிறேன். அன்று ராமாயணத்தில் ஹனுமான் சீதாபிராட்டியாரின் துக்கத்தைப் போக்கி ஸ்ரீ ராமபிரானின் மோதிரத்தை ஸ்ரீ தேவியிடம் கொடுக்கும் கட்டத்தை வாசித்து நிறுத்தினேன்.

இதைப் படித்தபோது நானும் மெய் மறந்து போய் விட்டேன். "ஹே, வாயுபுத்திரனே! லோகநாயகியின் துயரத்தைப் போக்கக்கூடிய பாக்கியத்தை அடைந்தாயே! ஸ்ரீ ராமனின் பெயரை உச்சரித்த மாத்திரத்தில் அகண்ட சமுத்திரத்தை அரை நொடியில் தாண்டினாயே! இவ்வளவு மகத்தான காரியத்தைச்

சாதித்த நீ எனக்கு இந்தச் சின்ன உபகாரத்தைச் செய்ய மாட்டாயா? என் ஆசைக்குகந்த பச்சைப் புடவையை மீட்டுத் தரமாட்டாயா!'' என்று மனமுருகப் பிரார்த்தனை செய்தேன்.

இந்தச் சமயத்தில் 'தட தட' வென்று வாசற் கதவு தட்டும் சத்தம் கேட்டது. கதவை ஓடிப் போய்த் திறந்தேன். தன் சின்னம்மா வீட்டுக்குச் சென்று வருவதாகச் சொல்லிப் போன விசாலம், தன்னுடைய சின்னம்மாவுடனேயே அங்கு வந்து நின்றாள். அவர்களைப் பார்த்ததும் எனக்கு ஒரே ஆச்சரியமாகப் போய்விட்டது. விசாலமும் சின்னம்மாவும் வீட்டினுள்ளே வந்தார்கள்.

''அம்மா ஒரு பெரிய தவறு நேர்ந்து போச்சுங்க. என் சின்னம்மாவை மன்னிப்பீங்களா, அம்மா!'' என்றாள் விசாலம்.

எனக்கு ஒன்றுமே விளங்கவில்லை. ''என்ன, விசாலம்! விஷயத்தைச் சொல்லாமல் மன்னிக்க வேண்டும் என்றால்......! எனக்குப் புரியவில்லையே!'' என்றேன்.

''அம்மா, நான் என் வீட்டுக்குப் போனதும் என் சின்னம்மா அவசரமாக வெளியே புறப்பிட்டாங்க. நான் அதைப் பார்த்து, 'சின்னம்மா! எங்கே போறீங்க' என்றேன்.

''உடனே அவங்க திடுக்கிட்டு நின்னுட்டாங்க. 'தம்பிக்கு விஷ ஜுரம் ஊசி போடாவிட்டால் பிழைக்க மாட்டான்னு டாக்டர் ஐயா சொல்லிச் சீட்டு கொடுத்தாரு. மருந்து வாங்கிவரப் போறேன்' என்றாங்க.

''அவுங்க மடி வழக்கத்தைவிடச் சற்றுப் பெரிதாக இருந்தது. மடியிலே எதையோ கட்டிக்கிட்டு இருந்தாங்க. அதைக் கவனித்த நான் 'மடியிலே என்ன இருக்கிறது!' என்று மடியைப் பிடித்து இழுத்தேன். டைக்கென்று இந்தப் பச்சைப்புடவை கீழே விழுந்தது.

'' 'ஐயோ! மோசம் போயிடுத்தே! எங்க அம்மா புடவையைத் திருடிக்கொண்டு வந்து விட்டாயே! என்மேலே உயிராக இருந்த எங்க அம்மாவுக்குத் துரோகம் பண்ணி விட்டாயே? இவ்வளவு நாள் ரொம்ப யோக்கியமா நடித்துவிட்டு இப்ப இந்த மானக்கேடான விஷயத்தைப் பண்ணி விட்டாயே'' என்று அவளிடம் சத்தம் போட்டேன்.

''அப்பத்தான் அவங்களுக்குத் தான் செய்தது எவ்வளவு பெரிய குற்றம்னு பட்டுது.

'' 'விசாலம் கத்தாதே. யாராச்சும் வந்தால் என் மானம் கப்பலேறி விடும். அம்மா வீட்டிலே விசேஷம் நடந்துதே, அன்றைக்கு உனக்கு உதவிக்கு வேலைசெய்யப் பங்களாவுக்கு வந்தேனல்ல. வேலையெல்லாம் முடித்து விட்டுக் குளிக்கும் அறையைக் கழுவி விட்டேன். அப்போ மூலையிலே இது கிடந்துச்சு. என் மனசு சபலப்பட்டுது. கையிலே காலணா இல்லை. தம்பிக்கு ஊசி போடாவிட்டால் பிழைக்கமாட்டான்னு டாக்டர் சொன்னது நினைவுக்கு வந்துட்டுது. சரி, இந்தப்புடவையை எடுத்துக் கொண்டு ஓடிப் போய் விடலாம் என்று மடியிலே கட்டிக்கிட்டு ஒரே ஓட்டமாக ஓடிவந்தேன். அங்கே ஒரே கும்பலாகளையா இருந்ததால் என்னை வழியிலே ஒருவரும் கவனிக்கல்லே. ஆனா ஊம் இந்த இரண்டு நாளா என் மனசு சரியாயில்லை. புடவையை வெளியே எடுக்கத் தைரியமில்லை.

சரி, இன்னிக்கு வருவது வரட்டும், எப்படி யாவது புடவையைச் சலவைக்காரர்கிட்டே விற்று மருந்து வாங்கிடலாம் என்று கிளம்பி னேன். நீ அதைப் பார்த்து விட்டே, விசாலம்! என்னைக் காட்டிக் கொடுத்துடாதே' என்று கெஞ்சினுங்க.

"'அம்மாவின் தங்கமான குணத்துக்கு நீ இப்படிச் செய்தா கடவுள் சும்மா இருக்க மாட்டாரு. பேசாமல் என்னுடன் அம்மா வீட்டுக்கு வா. அவங்ககிட்டப் புடவையைக் கொடுத்துக் காலிலே விழுந்தா கண்டிப்பாக மன்னிப்பாங்க' என்று தைரியம் சொல்லி அழைத்து வந்தேன், அம்மா" என்று கூறி முடித்தாள்.

எனக்கு இதெல்லாம் கனவா நனவா என்று ஒன்றுமே புரியவில்லை. இதற்குள் விசாலமும் அவள் சின்னம்மாவும் என் காலில் 'தடால்' என்று விழுந்து மன்னிப்புக் கேட்டார்கள்.

என் மனம் நெகிழ்ந்து விட்டது. நானும் ஒரு காலத்தில் இல்லாக் கொடுமையால் எத்தனையோ கஷ்டப்பட்டு இருக்கிறேன். விசாலத்தின் நேர்மையும், அவள் சின்னம் மாளின் தாயன்பும் சேர்ந்து என் உள்ளத்தைத் தொட்டு விட்டன.

விசாலத்தின் சிறிய தாயாரைப் பார்த்து, "என்னை ஒரு வார்த்தை கேட்டிருந்தால் மருந்து வாங்கப் பணம் தரமாட்டேனு! இனி மேல் இப்படிப்பட்ட காரியத்தைச் செய் யாதே" என்று கண்டித்து விட்டுப் பீரோவைத் திறந்து பத்து ரூபாயை எடுத்து அவளிடம் கொடுத்தேன். "இந்தா! இதை எடுத்துக் கொண்டு உன் பிள்ளையைச் சீக்கிரம் டாக்டர் வீட்டுக்கு எடுத்துச் செல்" என்று அவளை அனுப்பினேன்.

"அம்மா, நீங்க மகராஜியாக இருக்கணும். உங்க மனசு தெரியாமல் வெட்கம் கெட்டுப் போய் இப்படிச் செய்து விட்டேன். இனிமேல் என் ஆயுசுக்கும் ஒழுங்காகப் பிழைப்பேன், அம்மா" என்று என்னிடம் விடைபெற்றுக் கொண்டு அவள் போனுள்.

நான் விசாலத்தைப் பார்த்து, "நீ சிறியவளா யிருந்தாலும் உண்மையாக நடந்து கொண் டாய். இந்த உபகாரத்தை நான் என்றும் மறக்க மாட்டேன்" என்று அவளுக்கும் ஐந்து ரூபாய் பரிசளித்தேன்.

என் மனம் அடைந்த ஆனந்தத்தை அள விட முடியாது. இந்தப் பொருளை இறைவன் அருளால் மீண்டும் அடையப் பெற்றேன். அத்தையிடமும் அத்தானிடமும் காட்டி மகிழ்ச்சி அடைந்தேன்; பிறகு என் வரத்தைப் பூர்த்தி செய்த ஹனுமாருக்கு நன்றி செலுத்தப் பூஜையறைக்குள் சென்றேன்.

"ஹே, ராமபக்தனே! இந்த மூன்று நாட்கள் என்னை வேதனை அடையும்படி செய் தாய். நீயே அந்த வேதனையை விலக்கி என்னை இன்பமடையச் செய்தாய். உன் சக்தியை யாரால் அறிய முடியும்!" என்று உணர்ச்சி யுடன் கூறி அஞ்சனை புத்திரனுக்கு என் நன்றி யைச் செலுத்தி அஞ்சலி செய்தேன். செய்து விட்டுத் திரும்பிப் பார்த்தேன். எனக்குப் பின் னல் ஒரே ஆனந்த பரவசராய் என் கணவர் நின்றுகொண்டு புன்னகை பூத்தார்!



குழந்தை சதா சிணுங்கியவண்
ணம் அடம் பண்ணிக் கொண்டே
யிருந்தது. மேலும் அதன் வய
திற்கேற்ற புஷ்டியுமில்லை. இத
னால் தாயார் மனவேதனை அடை
ந்ததில் ஆச்சரியமில்லையே!



நாளொரு வண்ணமும் பொழு
தொரு மேனியுமாய்ச் சந்தோஷ
த்துடன் திகழ்ந்து விளங்கும் குழ
ந்தைகளையுடைய, தாய்மார்
களான தனது சிநேகிதிகளின்
யோசனையை நாடினாள் அவள்.
அவர்கள் எல்லோருமே 'க்ளா
க்ஸோ'வைச் சிபாரிசு செய்தனர்.




திடமான எலும்புகளும், பற்க
ளும் உண்டாவதற்கெனவே
விடமின் 'டி' யும், சுத்த ரத்த
வளர்ச்சிக்காக இரும்புச்சத்தும்
சேர்த்துத் தயாரிக்கப்பட்ட 'க்ளா
க்ஸோ' ஒரு சிறந்த சுத்தமான
போஷாக்களிக்கும் பால் ஆகாரம்.



'க்ளாக்ஸோ' குழந்தைக்கு எந்த
வைய மாறுதலை உண்டாக்கிவிட்
டது! இப்பொழுது குழந்தை
நன்கு உறங்குகிறது. அன்றியும்
கிரமமான தேக திடமும் மனச்
சந்துஷ்டியும் பெற்றிருக்கிறது.

**Glaxo**

'க்ளாக்ஸோ' ஒரு சிறந்த சுத்தமான போஷாக்
களிக்கும் பால் ஆகாரம்

க்ளாக்ஸோ லேபரடரீஸ் (இந்தியா) லிமிடெட், பம்பாய் – கல்கத்தா – மதராஸ்




"அம்மா, இங்கே பார். இவன் என்னைக் கிள்ளுகிறான்."

"அப்படித்தான் கிள்ளுவேன். அவள் என்னுடைய வர்ணப் பெட்டியை எதற்காகத் தொடுகிறாள்!"

இவ்விதம் பிரசன்னனும் சாந்தாவும் சண்டை போட்ட வண்ணமிருந்தார்கள். அவர்களுடைய சண்டைக்கு முடிவே இல்லை போல் தோன்றியது.

பதினெட்டு மாதக் குழந்தை தாயின் மடியில் படுத்துக் கொண்டு, அவள் பிடித்திருந்த புட்டியிலிருந்து பாலைச் சாப்பிட்டுக் கொண்டிருந்தது. அதன் வலது கை தாயின் கழுத்திலிருந்த சங்கிலியை இழுத்த வண்ணமாக இருந்தது.

ஆனால் சீதா தன் குழந்தைகளின் சண்டையையோ, கைக் குழந்தை தன் முகத்தையே பார்த்துக் கொண்டு சங்கிலியைப் பிடித்து இழுப்பதையோ கவனிக்கவில்லை.

அச்சமயம் அவளது பார்வையும் கவனமும் அறைக்குள் அங்குமிங்கும் குதூகலத்துடன் ஓடிக் கொண்டிருந்த குருவியின் மீது லயித் திருந்தது. அந்தக் குருவி, அவளுடைய குழந்தைகளின் உடைகள் உலர்த்தி வைக்கப் பட்டிருந்த கம்பியின் மீது உட்கார்ந்த போது அவளது பார்வை அந்த உடைகளின் மீது லயிக்கத் தொடங்கியது.

சுவருக்கு அருகில் சாந்தாவின் சட்டையும் பாவாடையும் இருந்தன. இவற்றைத் தவிரக் கொடியில் சாந்தாவுக்கு ஒரே ஒரு சட்டையும் பாவாடையும் வைக்கப்பட்டிருந்தன. அவ் வீட்டில் சாந்தாவுக்குச் சொந்தமான உடை வேறு எதுவுமே இல்லை.

சாந்தாவுக்குப் பதினொரு வயதாகி விட்டது. புதுப் புது பாவாடை கட்டிக் கொண்டு, சோப்பினால் முகத்தைச் சுத்தம் செய்து, பவுடர் போட்டுக் கொண்டு அடிக்கடி தன் அழகைக் கண்ணாடியில் பார்த்துக் கொள்ள வேண்டும் என்பது அவள் ஆசை. ஆனால் அந்த வீட்டில்தான் நல்லதாக ஒரு கண்ணாடி கூட இல்லையே!

சாந்தாவின் பாவாடைக்கு அப்பால் அவளுடைய தம்பி பிரசன்னனின் கால்சட்டை உலர்த்தப்பட்டிருந்தது. அதைப் பார்த்ததும் சீதாவுக்கு முந்திய வாரத்தில் நடந்த சம்பவம் நினைவுக்கு வந்தது.

பிரசன்னன் பின்புறம் கிழிந்த கால்சட்டையைப் போட்டுக்கொண்டு வெளியே சென்றான். வேறு நல்ல கால் சட்டை இருந்தால்தானே! அதைப் பார்த்ததும் அவனது சகாக்கள் "ஏய், தபால் பெட்டி" என்று கூப்பிட்டுப் பரிகாசம் செய்யத் தொடங்கி விட்டார்கள். பிரசன்னனுக்கு வெட்கம் தாங்க முடியவில்லை. அவன் வீட்டுக்கு ஓடி வந்து அதை அவிழ்த்து எறிந்தான். "அம்மா! இனி என் ஜன்மத்துக்கும் அந்தக் கால்சட்டையை நான் போட்டுக் கொள்ள மாட்டேன்" என்று சொல்லி விட்டான். பாவம்! அவனுக்கு வெட்கமாக இராதா? அவனுக்கு உடனே புதுக் கால் சட்டை வாங்கிக் கொடுத்தாக வேண்டும்.

கிரிஜாவின் உடைகளைப் பற்றியோ சொல்ல வேண்டியதில்லை. ஊரில் உள்ள அழுக்கெல்லாம் அவளது சட்டையில்தான் படிந்திருக்கிறது. அடிக்கடி புதுச் சட்டை வாங்கிக் கொடுப்பதற்கும் வழியில்லை.

கைக் குழந்தையோ வென்றால், பதினெட்டு மாதமாகியும் பால் சாப்பிடுகிறதே யொழியச் சாதத்தைத் தொட மாட்டேன் என்கிறது. அதுவும் சீதாவின் துரதிர்ஷ்டம்தான். அடுத்த வீட்டில் உள்ள எட்டு மாதக் குழந்தை அதற்குள் கொஞ்சம் சாதம் சாப்பிடுவதற்குத் தொடங்கி விட்டது!

தாய்ப் பால் இல்லாததால் கைக் குழந்தைக்குப் பால் வாங்கிக் கொடுக்கவே மாதம் முப்பது ரூபாய் ஆயிற்று. சாந்தா பிறந்த பிறகு சீதாவுக்கு ஏற்பட்ட நோய் காரணமாகத் தாய்ப்பால் வற்றி விட்டது. கைக் குழந்தைக்குப் பால் வாங்குவதற்குப் பணம் போதாததால், சாந்தாவுக்குப் பாட்டு சொல்லிக் கொடுத்து வந்த உபாத்தியாயரை நிறுத்தி விடும்படி நேர்ந்தது.

* * *

அந்தக் குருவி மீண்டும் அங்குமிங்கும் பறந்து சென்றது. பிறகு சுவரில் மாட்டியிருந்த புகைப்படத்தின் மீது உட்கார்ந்தது. உடனே சீதாவின் சிந்தனை அந்தப் படத்தைச் சுற்றி வரத் தொடங்கியது.

அது சீதாவுக்குக் கல்யாணமான போது அவளும் கணவனுமாக மணமாலைகளுடன் எடுத்துக்கொண்ட படமாகும். அப்போது அவளுக்குப் பதினேழு அல்லது பதினெட்டு வயது தானிருக்கும்.

சீதா அந்தப் படத்தையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாள். அந்தப் படத்தில் அழகே உருவாக இருந்த அந்த மணப்பெண், படத்திலிருந்து கீழே இறங்கி வருவது போன்ற பிரமை சீதாவுக்கு ஏற்பட்டது. சீதா தன்னையே மறந்தாள்.

அந்தப் பெண்ணுக்குப் பதினேழு அல்லது பதினெட்டு வயது இருக்கும். அவள் தொட்டிலுக்கு அருகில் சென்று, கொசுவலையின் வழியாக எட்டிப் பார்த்தாள். அதில் ஆறு மாதக் குழந்தை தூங்கிக் கொண்டிருந்தது. அதுதான் சீதாவின் முதல் குழந்தை. அச்சமயம் அவள் மனத்தில் பொங்கும் மகிழ்ச்சியைப் பிரதிபலிப்பது போல், அந்தக் குழந்தையின் முகத்தில் புன்முறுவல் தவழ்ந்தது. அவள் குழந்தையை மெதுவாக முத்தமிட்டு விட்டு, எதிர்ச் சுவரில் மாட்டியிருந்த கண்ணாடிக்கு எதிரே நின்று தன் அழகைப் பார்த்துக் கொண்டாள். அவளது உருண்டையான அழகிய முகத்தையும், பிரகாசமான கண்களையும், செந்தாமரை இதழ் போன்ற நிறமுள்ள தேகத்தையும் கண்ணாடி அப்படியே பிரதிபலித்தது. தன் வனப்பையும் ஒய்யாரத்தையும் கண்டு சீதாவுக்குச் சந்தோஷம் தாங்க முடியவில்லை.

புஷ்பத் தொட்டியில் முளைத்திருந்த செடியில் மலர்ந்திருந்த வாசனைப் பூவிலிருந்து 'கம்'மென்று மணம் வீசிக் கொண்டிருந்தது. அதே சமயம் ரேடியோவிலிருந்து இனிய சங்கீதம் வந்து கொண்டிருந்தது.

சீதா கட்டிலுக்குக் கீழே இருந்த பெட்டியைத் திறந்தாள். அதில் பூவேலைப்பாடுகளுடன் கூடிய திரைகள், மேஜைத் துணிகள், கைக்குட்டைகள் போன்ற பல சாதனங்கள் இருந்தன. அவற்றை யெல்லாம் அவள் மடிப்புப் பிரியாமல் கம்பியின்மீது போட்டாள்.

பெட்டிக்கு அடியில் ஒரு புகைப்படம் இருந்தது. கல்யாணத்தின் போது அவளும் அவளது கணவனும் சேர்ந்து நின்று எடுத்துக்கொண்ட



மற்றொரு படம். கைக்குட்டையை எடுத்து அதைச் சீதா சுத்தமாகத் துடைத்தாள்.

அச்சமயம் அவளுடைய கணவன் அந்த அறைக்கு வந்தான். அவனது முகத்தைச் சீதா பார்த்தாள். அந்த முகத்துடன் படத்தில் உள்ள முகத்தை ஒப்பிட்டுப் பார்த்தாள். அந்தப் படம் எடுக்கப்பட்டுப் பல வருஷங்கள் ஆகியும், அவனது முகத்தில் அதிக மாறுதல் எதுவும் ஏற்படவில்லை. அவன் முகத்தில் இன்னும் அதே இளமை தாண்டவமாடிக் கொண்டிருந்தது.

அவன், கம்பியின்மீது போடப்பட்டிருந்த தையல் வேலைத் துணிகளைப் பார்த்ததும் "ஊரில் உனக்கு இத்தனை துணிகளைத் தைக்க அவகாசம் ஏது!" என்று கேட்டான்.

"பிரசவத்துக்காக ஊருக்கு முந்தி என்னை அனுப்பி விட்டீர்களே. நான் இருந்தால் தொந்தரவுதானே! நீங்கள் இல்லாமல் ஊரில் எனக்குப் பொழுதே போகவில்லை. பொழுதைப் போக்குவதற்காக இதை யெல்லாம் தைத்து வைத்தேன்" என்று சொல்லி விட்டுச் சீதா சிரித்தாள்.

அவன் அவளுக்கு அருகில் வந்து அவளது தோளில் அன்பு ததும்பக் கையை வைத்தான்.

"இது என்ன! வேண்டாம், என்னை விட்டு விடுங்கள். சாந்தா எழுந்திருக்கும் சமயம்" என்றாள் வெட்கப்பட்டுக்கொண்டே.

"ஊஹூம்."

* * *

இந்தப் பழைய சிந்தனைகளிலிருந்து சீதா எழுந்தபோது அஸ்தமித்து விட்டது. அவள் மடியில் படுத்துப் பால் குடித்துக் கொண்டிருந்த குழந்தை தூங்கி வெகு நேரமாகி யிருந்தது. நீண்ட நேரம் சீதா ஆடாமல் அசையாமல் சிந்தனையில் ஆழ்ந்து விட்டதால், அவளுக்குக் கால்கள் மரத்துப் போயின.

"கண்ணே, சாந்தா. இந்தக் குழந்தையை மெதுவாகத் தூக்கிக்கொண்டு போய்த் தொட்டிலில் போட்டு ஆட்டு...பிரசன்னன், கிரிஜா எல்லாரும் எங்கே!" என்று கேட்டாள்.

"அவர்கள் அடுத்த வீட்டில் இருக்கிறார்கள்" என்று கூறினாள் சாந்தா.

சாந்தா குழந்தையை எடுத்துச் சென்றாள். சீதாவுக்கு எழுந்து நிற்கக்கூட முடியவில்லை. அவளுக்குக் களைப்பாக இருந்தது. சென்ற மூன்று தடவையாகப் பிரசவத்துக்கு முன் இவ்விதம் களைப்பாக இருப்பது வழக்கமாகி விட்டதை அவள் உணர்ந்தாள். அவளது நெற்றியில் வியர்வை முத்து முத்தாகத் துளித்து நின்றது.

"எனக்கு என்ன கேடு வந்துவிட்டது!

இரண்டாவது தெருவில் உள்ள சாவித்ரம்மா எட்டுக் குழந்தைகளுக்குத் தாயாகி விட்டாள். அவளை யாராவது எட்டுக் குழந்தைகள் பெற்றவள் என்று சொல்ல முடியுமா! அவள் இன்னும் சிறு பெண்ணாகவே இருக்கிறாள். எட்டு மாதத்தில்கூட ரஸ்தாவில் உள்ள குழாயிலிருந்து சிறிதும் சிரமமின்றிக் குடத்தில் தண்ணீர் தூக்கிக் கொண்டு வருகிறாள்; எனக்கு இது ஐந்து மாதம்தான். அதற்குள் இப்படி உடம்பு மிகவும் பலவீனமாகி விட்டதே. எப்போதும் களைப்பாக இருக்கிறதே.''

இத்தகைய சிந்தனையில் ஆழ்ந்த சீதாவிடமிருந்து ஒரு பெருமூச்சு வெளிவந்தது.

இந்த உலகில், குழந்தைகள் பிறக்கவில்லையே என்று எத்தனையோ பேர்கள் மனக் கஷ்டமும் கவலையும் படுகின்றனர். ஆனால் சீதாவோ, இனிமேல் தனக்குக் குழந்தைகள் பிறக்காமல் இருக்க வேண்டுமே என்று கவலைப்படலானாள்.

சீதாவுக்கு இருபத்தெட்டு வயதுதான் ஆகியிருந்தது. ஆனால், அவளைப் பார்ப்போர் அவளுக்கு நாற்பது வயது ஆகியிருக்கும் என்றே எண்ணினார்கள். அவளுக்கு முன் தலையெல்லாம் நரைத்து விட்டது. முகத்தில் சோகை படர்ந்திருந்தது. சில வருஷங்களுக்கு முன் ஒளி வீசிக் கொண்டிருந்த அவளது அழகிய கண்களைச் சுற்றிக் கரிய வட்டங்கள் உருவாகியிருந்தன.

அவள் வயதான எல்லோருமா அப்படி இருக்கிறார்கள்! இல்லை. அவளைப் போல் சில துரதிர்ஷ்டசாலிகள்தான் இளம் வயதிலேயே அரைக் கிழவிகளாகி விடுகிறார்கள். பத்து வருஷத்துக்குள் சீதா எவ்வளவு மாறி விட்டாள்!

சுமார் எட்டு மாதங்களுக்கு முன் ஒருநாள் சீதா தன்னுடன் பள்ளிக்கூடத்தில் வாசித்த ஞானியைச் சந்தித்தாள். ஞானியால் சீதாவை அடையாளம் கண்டு கொள்ளவே முடியவில்லை. ஆனால், சீதா அவளை அடையாளம் கண்டு கொண்டாள்.

" ஞானி! என்னைத் தெரியவில்லையா, உனக்கு! நான்தான் சீதா."

ஞானிக்குத் தன்னுடைய கண்களையே நம்ப முடியவில்லை.

"உண்மையில் நீ என்னுடன் வாசித்துக் கொண்டிருந்த சீதாதானா!" என்று வியப்புடன் கேட்டு விட்டாள்.

"அதில் உனக்கு என்ன சந்தேகம் வந்து விட்டது!" என்று கேட்டாள் சீதா.

" இவர்கள் எல்லாம் உன் குழந்தைகளா! அல்லது உன் பேரக் குழந்தைகளா!"



ஞானி இவ்விதம் அவளிடம் விளையாட்டாகக் கேட்டது கூடச் சீதாவின் மனத்தை மிகவும் புண்படுத்தி விட்டது.

'ஞானியை நொந்து என்ன பயன்! என்னைப் பார்த்தால் கிழவி மாதிரியாகத் தானே இருக்கிறது' என்று சீதா தனக்குள் சொல்லிப் பொருமிக் கொண்டாள்.

சீதாவின் முகத்தில் தென்பட்ட வேதனையைக் கண்டதும் ஞானி தான் அவ்விதம் கேட்டது தவறு என்பதை உணர்ந்தாள்.

"சீதா, என்னை மன்னித்து விடு. நான் அப்படிக் கேட்டு உன் மனம் வருந்தும்படி செய்திருக்கக் கூடாது. தயவு செய்து அதை மறந்துவிடு. சரி, நீ எங்கு இருக்கிறாய்! உன் கணவர் என்ன செய்து கொண்டிருக்கிறார்! இவள் எவ்வளவு அழகான பெண்! இவள் பெயர் என்ன!" என்று சாந்தாவைச் சுட்டிக் காட்டிக் கேட்டாள்.

ஞானியின் அன்பான வார்த்தைகளைக் கேட்டதும் சீதையின் முகத்தில் புன்முறுவல் தவழ்ந்தது.

"என் கதை மிகவும் பெரிய கதை, ஞானி. அதைச் சொல்ல ஒரு நாள் முழுவதும் வேண்டும். இந்த ஊரில் நீ என்ன செய்து கொண்டிருக்கிறாய்!"

"நான் மருத்துவப் பெண்ணாக வேலை செய்துவருகிறேன். இங்கு வந்து ஒரு மாதம் ஆகிறது. நான் இருக்கும் இடத்துக்கு வா. அதோ சமீபத்தில் தான் இருக்கிறது."

சீதா தன் குழந்தைகளுடன் ஞானியின் வீட்டுக்குச் சென்றாள். பால்ய சிநேகிதிகளான இருவரும் பொழுது போவதே தெரியாமல் வெகு நேரம் பேசிக் கொண்டிருந்தனர்.

கடைசியாகச் சீதா ஞானியிடம் விடைபெற்றுக் கொண்டபோது இருட்டாகி விட்டது. சீதா புறப்படும் தறுவாயில் ஞானி அவளைப் பார்த்து, "உன்னுடைய கணவர் உன்னைக் கொன்று விடுவார் போலிருக்கிறதே. உன் உடம்பைச் சரியாகக் கவனித்துக் கொள், சீதா!" என்றாள்.

ஞானி அவ்விதம் கூறியது சீதாவுக்குக் கொஞ்சமும் பிடிக்கவில்லை.

"என்ன ஞானி, இப்படிச் சொல்லுகிறாய்! அவர் மீது மாத்திரம் குற்றத்தைச் சுமத்தாதே" என்றாள்.

"சரி, நீயும் குற்றவாளி என்றுதானே சொல்லுகிறாய்! யார் குற்றவாளியாக இருந்தால் என்ன! நீ இனிமேலாவது கஷ்டப்படாமல் நன்றாக இருக்க வேண்டுமானால், நான் சொல்லுவதைக் கேள். இனிமேல் உனக்குக் குழந்தையே பிறக்கக் கூடாது."

ஞானியின் அபிப்பிராயத்தைச் சீதா தன் கணவனுக்கு விவரமாகத் தெரிவித்தாள்.

அன்றைய தினத்திலிருந்து சீதாவும் குழந்தைகளும் ஓர் அறையில் படுத்துக் கொண்டனர். சீதாவின் கணவன் மற்றோர் அறையில் படுத்துக் கொண்டான்.

அப்படியிருந்தும், இன்று சீதா கர்ப்பவதியாக இருந்தாள்!

அன்று குழந்தை கிரிஜா படுத்த படுக்கையாகி இருபத்தொரு நாட்களுக்கு மேல் ஆகி விட்டன. குழந்தையின் உயிருக்கே ஆபத்து வந்து விடும் போல் இருந்தது. சீதாவும் அவள் கணவனும் இராப் பகல் தூங்காமல் குழந்தையையே கவனித்துக் கொண்டிருந்தனர். குழந்தைக்கு ஏதாவது நேர்ந்து விட்டால் என்ன செய்வதென்று சீதா நடுங்கிக்கொண்டிருந்தாள்.

நாலு நாட்களுக்கு முன் தான் குழந்தைக்கு இனி ஆபத்தில்லை என்று டாக்டர் உறுதி கூறினார். அதைக் கேட்ட பின்தான் சீதாவுக்குப் போன உயிர் திரும்பி வந்தது! அதன் பிறகுதான் சீதாவோ, அவள் கணவனோ இரவில் தூங்க ஆரம்பித்தனர்.

அன்றிரவு ஒரு மணி இருக்கும். சீதா திடுக்கிட்டு எழுந்தாள். குழந்தை கிரிஜாவைத் தொட்டுப் பார்த்தாள். உடம்பு ஜில்லென்று இருந்தது. சீதா பதைபதைத்து விட்டாள். குழந்தைக்கு ஜுரமே இல்லை, நன்றாகத் தூங்குகிறது என்பதை அறிந்து கொள்ள அவளுக்குச் சில நிமிஷங்கள் ஆகி விட்டன. சீதாவின் கண்களிலிருந்து தாரை தாரையாகக் கண்ணீர் வழிந்து கொண்டிருந்தது. அவள் கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள். கிரிஜாவைக் காப்பாற்றியதற்காக மனத்திற்குள் கடவுளைப் பிரார்த்தனை செய்தாள்.

அவள் திரும்பிப் படுத்துக் கொள்ளும் சமயம் அவளது கண்கள் தன் கணவன் அறையை நோக்கின. அந்த நேரத்தில் அந்த அறையில் விளக்கு வெளிச்சம் தென்பட்டது அவளுக்கு ஆச்சரியமாக இருந்தது.

‘அவர் இன்னும் தூங்கவில்லையா, என்ன! பாவம், கிரிஜாவைப் பற்றி என்னைக் காட்டிலும் அவர்தான் துடித்து விட்டார். அவரது உள்ளம் களங்கமற்ற குழந்தை உள்ளம்தான். ‘உன் கணவர் உன்னைக் கொன்று விடுவார் போலிருக்கிறதே’ என்று ஊர்மி கூறியது எவ்வளவு கொடுமையான வார்த்தைகள்! அவரைப் பற்றி அவளுக்கு என்ன தெரியும்! எனக்காகவும் குழந்தைகளுக்காகவும் அவர் எவ்வளவு பாடுபட்டு வருகிறார், எவ்வளவு தியாகம் செய்து வருகிறார் என்பதை அவள் அறிவாளா, என்ன!’

இவ்விதமெல்லாம் எண்ணிய சீதா மறுபடியும் தன் கணவன் அறையைப் பார்த்தாள். அப்பொழுதும் விளக்கு எரிந்து கொண்டுதான் இருந்தது. இந்த அகால வேளையில் அவர் என்ன செய்து கொண்டிருக்கிறார்!

சீதா எழுந்து சென்று சந்தடி செய்யாமல் மெதுவாகக் கதவைத் திறந்து எட்டிப் பார்த்தாள். அவளது கணவன் ஆகாயத்தைப் பார்த்த வண்ணம் படுக்கையில் படுத்துக் கொண்டிருந்தான். படுக்கைக்கு அருகில் ஒரு புத்தகம் நன்றாக விரித்த வண்ணம் தரையில் வைக்கப்பட்டிருந்தது.

அவனைப் பார்த்ததும், சீதாவுக்கு அவன் மீது எல்லையற்ற அனுதாபம் ஏற்பட்டது. அவன் அவ்விதம் படுத்திருந்தது ஓர் அனாதைக் குழந்தையைப் போல் அவளுக்குத் தோன்றியது.

"இவ்வளவு நேரமாகியும் ஏன் விழித்துக் கொண்டிருக்கிறீர்கள்! தூக்கம் வரவில்லையா!" என்று கேட்டாள்.

சீதாவின் அந்தக் கேள்வியில் பரிவும் அன்பும் ததும்பின.

அக் கேள்விக்குச் சீதாவின் கணவன் பதில் எதுவும் சொல்லவில்லை. ஆனால், தலையைத் திருப்பி அவளைப் பார்த்தான். அப்போது அவனது கண்கள் கலங்கிய கடலைப் போல் தோன்றின. கடல் கொந்தளிக்கும் போது அலைகள் மலை போல் எழும்பி இரக்கமின்றிக் கரையைத் தாக்குவது போல், ஆசையாகிற அலைகள் அவனை இரக்கமின்றித் தாக்கிக் கொண்டிருந்தன.

சீதா வேகமாகச் சென்று அவனை அணைத்துக் கொண்டாள். சீதா ஊர்மிக்கு அளித்த வாக்குறுதி தகர்ந்தது!

* * *

சீதாவுக்கு இப்போது பிறக்கப் போவது ஏழாவது குழந்தையாகும்.

ஏற்கனவேயே அவளது கணவன் சரியாகச் சாப்பிடுவதில்லை. பிறக்கப்போகும் குழந்தைக்குப் பால் வாங்க வேண்டுமாயின், அவன் அரைப் பட்டினி கிடக்கும்படி நேரும். குடும்பத்தைப் போஷித்து ரக்ஷிப்பவன் அவன்தான். அவன் இரண்டு வேளை சரியாகச் சாப்பிடாவிடில், என்ன வேலை செய்ய முடியும்! குழந்தைகளின் சாப்பாட்டைக் கூடக் குறைத்து அவனுக்கு வயிறு நிறைய உணவளிக்கச் சீதா தயாராக இருந்தாள். ஆனால், அவன் சாப்பிட்டால்தானே! தான் சாப்பிடுவது எதுவாயிருந்தாலும், குழந்தைகள் வயிறு நிறையச் சாப்பிட வேண்டும் என்று எண்ணும் கோஷ்டியைச் சேர்ந்தவன் சீதாவின் கணவன்.

அன்றிரவு வீட்டில் போதிய அரிசி இல்லை. சீதா இனிமேல்தான் சாப்பிட வேண்டும். அவளுடைய கணவனுக்கு அது எப்படியோ தெரிந்து விட்டது. எனவே, அவன் அன்று ஒரு பிடிக்குமேல் சாப்பிட முடியாது என்று மறுத்து விட்டான்.

"எனக்கு வயிறு நிரம்பி விட்டது, சீதா. இதற்குமேல் போட்டால் சாப்பிட முடியாது" என்று கண்டிப்பாகச் சொல்லி விட்டான்.

அன்று அவன் ‘டிபன்’ சாப்பிடவில்லை என்பது அவளுக்குத் தெரியும். அவன் கையில் ஓர் அணா கூட இல்லை. மறுநாள் சம்பளம் வந்த பிறகுதான் அரிசி வாங்க முடியும்.

சீதாவுக்குக் கண்ணீர் பொங்கிக் கொண்டு வந்தது. தான் சாப்பிட வேண்டும் என்பதற்காகத் தன் கணவன் அரை வயிறு கூடச் சாப்பிடாதது அவளுடைய மனத்தை என்னவோ செய்து வந்தது.

மற்றொரு குழந்தை பிறந்து விட்டால் இரண்டு குழந்தைகளுக்குப் பால் வாங்கும்படியாக இருக்கும்.

அவனது மாதச் சம்பளம் நூற்று இருபத்தெட்டு ரூபாய். குழந்தைகளுக்குப் பால் மாத்திரம் முப்பது ரூபாய்க்குமேல் ஆகிவிடுகிறது. வீட்டு வாடகைக்கு மற்றொரு முப்பது ரூபாய் போய்விடுகிறது. ‘இன்ஷூரன்ஸ்’க்காக என்று

# நான்கு மருந்துகள்

## ஒரு டாக்டரின் குறிப்பைப் போன்றது




'அனசின்' விஞ்ஞான முறைப்படி சேர்க்கப்பட்ட நான்கு மருந்துகளின் கலப்பாகும். அவை நரம்புகளின் முக்கிய சேர்க்கை பாகங்களில் கூட்டாக வேலை செய்து விரைவில் வலி, தலைவலி, ஜலதோஷம், ஜுரம், பல்வலி, மற்றும் தசை நார்களில் நோவு இவற்றை நீக்கும். அனசினில் அடங்கிய சில நான்கு மருந்துகள் :—

1. கொயினா: ஜுரத்தடுப்பு குணமும், பலவிருத்தி செய்ய தற்கும் பிரசித்தி பெற்றது. ஜுரத்தை குறைப்பதில் மிகத் துரிதமானது.
2. காப்பின்: பலஹீனத்திற்கும், மனச்சோர்வுக்கும் மிதமான தூண்டுகோல் மருந்தாக விதிக்கப்பட்டிருக்கிறது.
3. பினஸிடின்: ஜுரத்தடுப்பு, வலி நிவாரணத் தன்மைகளுக்கு பெயர் பெற்றது.
4. அஸிடில் ஸலிஸிலிக் ஆஸிட்: தலைவலி அது போன்ற எல்லா வலிகளையும் போக்கடிப்பதற்கு மிகவும் உபயோகமுள்ளது.

அனசினிலுள்ள இந்த நான்கு மருந்துகளும் ஒரு டாக்டரின் குறிப்புக்கு ஒப்பாகும். 'அனசின்' ஹிருதயத்திற்கு தீங்கு விளைவிப்பதோ அல்லது வயிற்றுக்கு கோளாறு உண்டாக்குவதோ கிடையாது. வலி, தலைவலி, ஜலதோஷம், ஜுரம், பல்வலி மற்றும் தசைகளில் வலி முதலியவற்றிலிருந்து விரைவிலும், பத்திரமாகவும், நிச்சயமாகவும் நிவாரணம் பெற எப்பொழுதும் அனசினையே கேட்டு வாங்குங்கள்.

**லக்ஷக்கணக்கான மக்களுக்கு நிவாரணம் அளிக்கின்றது.**

A. 44



பம்பாய், ரொனல்ட் அட்வர்டைஸிங் கம்பெனியைச் சேர்ந்த ஸ்ரீ என். என். ராமகிருஷ்ணன் அவர்களுக்கும் பம்பாய் ஸ்ரீ டி. எஸ். கிருஷ்ண பாகவதர் அவர்கள் புதல்வி ஸ்ரீமதி லக்ஷ்மிக்கும் ஏப்ரல் 28ம் தேதி பம்பாய் மாதுங்காவில் வெகு சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது. மணமக்கள் நீடூழி வாழ்வார்களாக!

---

குறிப்பிட்ட தொகை பிடித்து விடுகிறார்கள். மீதியுள்ள தொகையை வைத்துக் கொண்டு ஏழு ஆத்மாக்கள் சாப்பிட வேண்டும். ஏழு பேர்களுக்கு உடைகளும் வாங்க வேண்டும்.

புதிதாகப் பிறக்கும் குழந்தையால் மற்ற ஆறு குழந்தைகளுக்கு இன்னும் அதிகக் கஷ்டம் ஏற்படும். அவர்களுக்கு மேலும் சில வசதிகள் குறைந்து விடும். ஏழு குழந்தைகளைச் சித்திரவதை செய்யப் போகும் காளிபோல் தன்னைச் சீதா நினைத்துக் கொண்டாள். அவள் தலை சுழன்றது.

அதே சமயம் வாசற் கதவு திடீரென்று திறந்தது. அவளது குழந்தைகள் குதூகலத்துடன் ஓடி வந்து சீதாவைக் கட்டிக் கொண்டன. சீதா அந்தக் குழந்தைகளை அணைத்த வண்ணம், "என் கண்மணிகளே, நான் இனி மேல் உங்களுக்கு அநீதி செய்ய மாட்டேன். உங்களைச் சித்திரவதை செய்ய மாட்டேன்" என்று கண்கலங்கக் கூறினாள்.

தன் தாயார் கூறியதைக் கேட்ட சாந்தா அப்படியே நடுங்கி விட்டாள்.

"அம்மா, நீ என்ன சொல்லுகிறாய்! உனக்கு என்ன உடம்பு! நான் ஞானியிடம் போய்ச் சொல்லட்டுமா!" என்று கேட்டாள் சாந்தா.

"நீ போக வேண்டாம், சாந்தா நானே போய் விட்டு வருகிறேன். சாந்தா, குழந்தைகளுக்கு நீ சாதம் போடு. நான் ஞானி வீட்டுக்குப் போய் வருகிறேன்."

"சரி, அம்மா!" என்றாள் சாந்தா.

மற்றக் குழந்தைகள் ஒன்றும் தெரியாமல் 'திருதிரு' வென்று விழித்தன.

வயிற்றில் உள்ள குழந்தையை ஒழித்துவிட வேண்டும் என்ற பயங்கரமான எண்ணம் சீதாவின் மனத்தில் ஏற்பட்டது.

சீதா வெகு வேகமாக ஞானி வீட்டுக்கு நடந்து சென்றாள். கர்ப்பிணி வேகமாக நடக்கக் கூடாது என்று அவளது தாயார் அடிக்கடி சொல்லுவது உண்டு. எனினும் சீதா அப்போது அதைப் பற்றிக் கவலைப்பட வில்லை! அவள் எதற்காகக் கவலைப்பட வேண்டும்! வயிற்றிலிருந்த சிசு மெதுவாக அசைந்தது.

சீதா ஞானியின் வீட்டுக்கு அருகில் சென்றதும், ஞானி சில பெண்களுடன் வெளியே வந்தாள். அவர்களுடைய கண்களில் தென்பட வேண்டாம் என்பதற்காகச் சீதா வெளிச் சுவருக்கு அப்பால் மறைந்து கொண்டாள்.

அப்போது அவர்கள் பேசிக் கொண்டது சீதாவின் செவிகளில் விழுந்தது.

அவர்களில் ஒரு பெண் சொன்னாள்:

"இங்கே பார், ஞானி. இனி இதை என்னால் பொறுக்க முடியாது. நான் டாக்டரை இன்று துணிந்து கேட்டு விட்டேன், இதற்கு ஏதாவது ஒரு வழி சொல்லுங்கள் என்று. டாக்டர் அதற்கு என்ன சொன்னார் தெரியுமா!..."

ஞானி இடைமறித்து, "இப்படி யெல்லாம் சொல்லாதே. குழந்தை வந்து விட்டது. இனி அதை எதுவும் செய்யக் கூடாது. அவ்வளவு தான்!" என்றாள் ஞானி. அவள் வார்த்தைகளில் கண்டிப்பும் உறுதியும் தொனித்தன.

"சரி, ஞானி! நீ சொல்கிறபடியே இருக்கட்டும்" என்றாள் அந்தப் பெண்.

பிறகு எல்லோரும் ஞானியிடம் விடை பெற்றுக் கொண்டு சென்றனர்.

சீதாவுக்குத் தன் வயிற்றில் உள்ள சிசு, 'என்னை ஒன்றும் செய்து விடாதே' 'என்னை ஒன்றும் செய்து விடாதே' என்று அலறுவது போல் தோன்றியது.

ஞானி வீட்டுக்குள் செல்லும் சமயம், 'ஞானி' 'ஞானி' என்று யாரோ கூப்பிடுவது போலிருந்தது. ஞானி திரும்பிப் பார்க்கவே, வாயிலில் நின்று கொண்டிருந்த சீதா அப்படியே கீழே விழுந்து விட்டாள்.

ஞானி உடனே ஓடி வந்து அவளைத் தூக்கினாள். அவளும் அவளது வேலைக்காரர்களும் சீதாவை உள்ளே தூக்கிச் சென்று, படுக்கையில் போட்டனர்.

சில நிமிஷ நேரத்தில் சீதாவுக்குப் பிரக்ஞை தெளிந்து விட்டது.

"உன் உடம்புக்கு என்ன சீதா!" என்றாள்.

சீதா என்ன பதில் சொல்லுவாள்! அவளுக்கு வெட்கமாக இருந்தது. வார்த்தையே வாயிலிருந்து வரவில்லை. ஒருவாறு சமாளித்துக் கொண்டு அவள் ஞானியிடம் தன் வயிற்றைச் சுட்டிக் காட்டினாள்.

ஞானிக்கு உடனே எல்லாம் புரிந்துவிட்டது. அவள் சீதாவைப் பரிசோதனை செய்தாள். ஞானியின் முகத்தில் புன்னகை தவழ்ந்தது.

"சீதா பயப்படுவதற்கு ஒன்றுமில்லை. எல்லாம் சரியாக இருக்கிறது" என்றாள்.

"திடீரென்று வலி தாங்க முடியவில்லை. கீழே விழுந்து விட்டேன்."

"இன்னும் நாலு மாதம் இருக்கிறது. பிறகு உன் மடியில் ஒரு புதிய உயிர் தவழும். ஒன்று, இரண்டு, மூன்று, நாலு......உனக்கு இது ஏழாவது குழந்தை அல்லவா!"

இவ்விதம் சொல்லி விட்டு ஞானி சிரித்தாள். சீதாவின் முகத்திலும் புன்முறுவல் தவழ்ந்தது. ஏழாவது குழந்தைக்குத் தான் தாயாகப் போவதைக் குறித்து அவள் பெருமிதம் அடைந்தாள்!

---

Printed & Published by T. Sadasivam at the "Kalki" Press, No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras - 10. Editor : Mi. Pa. Somasundaram

